உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வாயுசங்கிதை.

---

தெய்வீகம்பெற்ற

## குலசேகரவரகுணராமபாண்டியர்

அருளிச்செய்தது.



இஃது,

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மபுரம்

**ஸ்ரீ சிவஞானபாலையதேசிகராதீனத்துச்**

சிதம்பரம்

## இராமலிங்கசுவாமிகளால்

பலபிரதிருபங்களைக்கொண்டு பரிசோதித்து,

திருநெல்வேலிஜில்லா ஊற்றுமலைசமஸ்தானம்

வீரகேரளம்புதூர்

ஜமீன்தாரவர்களாகிய

**இருதயாலயமருதப்பதேவரவர்களால்**

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

விரோதிஸு ஆவணிமீ.

உ

சிவசண்முகன்றுணை.

# திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

திருவளர்கமலத்திறைவனுங்காணுச் செஞ்சடைத்தனிமுதல்பரா
ணை, வருமறைறத்தெளிவாம்வாயுசங்கிதையின்னமுதாகுதமிழ்மொழியாலுரைத்
தான், பரிதிவாட்டடக்கைப்பாண்டியகுலசேகரனணிபணிமலர்ப்பதக்
தார், வரகுணராமன்புவியெலாநிழற்றுமாலைவெண்கவிகைமன்னவனே.

சிவமயம்.

# முகவுரை.

அநாதிமலமுத்தராகிய சிவபெருமான், அநாதிமலபெத்தராகிய ஆன்மாக்கள் முத்தியின்பம் பெறும்பொருட்டு வேதசிவாகமங்களை அருளிச்செய்து, அவற்றின்வழி ஒழுகுவோர்க்கும் பிறர்க்கும் ஐயந்திரிபுகளறுமாவண்ணம், பின்னரும் மேற்கோளாக, அவ்வேதசிவாகமப்பொருள்களின்வழியொழுகி அநுபவமுதிர்ந்த ஆன்றோர் சரிதாதிகளை விளக்கித் திருநந்திதேவருக்குபதேசிக்கப்பட்டு, பரம்பரையாக வழங்கிய புராணங்கள் பதினெட்டு. அவற்றுள்ளே, சைவம் பவிடியம் மார்க்கண்டேயம் இலிங்கம் காந்தம் வராகம் வாமனம் மற்சம் கூர்மம் பிரமாண்டம் என்னும்பத்தும் சிவபுராணம்; காருடம் நாரதீயம் வைணவம் பாகவதம் என்னும்நான்கும் விஷ்ணுபுராணம்; பிரமம் பதுமம் என்னும்இரண்டும் பிரமபுராணம்; ஆக்கினேயம் அக்கினிபுராணம்; பிரமகைவர்த்தம் சூரியபுராணம்.

இவற்றுள்ளே, சிவபுராணம்பத்தில் முதன்மைபெற்றதாகிய சைவபுராணமென்பது பன்னிரண்டுசங்கிதைகளாகி இலக்ஷங்கிரந்தங்களையுடையது. இவற்றில் வித்தியேசுரசங்கிதை பதினாயிரங்கிரந்தமும், உருத்திரசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், விநாயகசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், உமாசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், மாதிருசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், ஏகாதசருத்திரசங்கிதை பதின்மூவாயிரங்கிரந்தமும், கைலாசசங்கிதை ஆறாயிரங்கிரந்தமும், சதருத்திரசங்கிதை மூவாயிரங்கிரந்தமும், கோடிருத்திரசங்கிதை ஒன்பதினாயிரங்கிரந்தமும், சகஸ்திரகோடிருத்திரசங்கிதை பதினோராயிரங்கிரந்தமும், தருமசங்கிதை பன்னீராயிரங்கிரந்தமும், வாயுசங்கிதை நாலாயிரங்கிரந்தமுமுடையன. இப்பன்னிரண்டுசங்கிதையில் வாயுசங்கிதை, பாண்டிநாட்டிலே அரசுபுரிந்து தெய்வீகம்பெற்ற குலசேகரவரகுணராமபாண்டியரென்பவரால் தமிழிலே மொழிபெயர்த்து அருளிச்செய்யப்பட்டது.

இது, சைவசமயிகள் முக்கியமாக ஆராய்தற்குரிய விடயங்களையுணர்த்தும் ஒருஅரியதிவ்வியநூலாதலின் இதை அச்சிடவேண்டுமென முயலுங்கால் பிரதியுபகரித்தவர்கள்:—

சிதம்பரம்.
சைவப்பிரகாசவித்தியாசாலைத்தலைவர்
ம-௱-௱-ஸ்ரீ சதாசிவப்பிள்ளையவர்கள் பிரதி ௩

௸ வித்தியாசாலையுபாத்தியாயர்
,, குமாரஸ்வாமையர் ,, ௩

சிதம்பரம்தெற்குவாயில்
,, வைத்தியநாததேசிகர் ,, ௩

திருநெல்வேலி
ஜவுளி, சுந்தரலிங்கபண்டாரம் ,, ௧

(இப்பிரதி திருநெல்வேலி வடக்குரதவீதி
காந்திமதிநாதபிள்ளையது.)

ஆக பிரதிகள்—௰.

இவற்றினுள்ளே, சதாசிவப்பிள்ளையவர்கள் தந்த பிரதிமூன்றி லே ஒன்று, ஸ்ரீமத்ஆறுமுகநாவலரவர்களால் சிலவிடங்களில் திருத்தப்பட்டுள்ளது. இப்பிரதிகளைக்கொண்டு ஒப்பிட்டு அச்சிடும்பொழுது, திருவண்ணாமலையாதீனம் ஸ்ரீமத் ஆறுமுகசுவாமிகளவர்கள் சிலவிடயங்களை யறிவித்தமையேயன்றி, ஒரு சமஸ்கிருதபிரதியுந் தந்தார்கள். இப்பிரதிக்கிணங்க சென்னை பச்சையப்பமுதலியார்பாடசாலை சமஸ்கிருதபண்டிதர் ஸ்ரீமத் கிருஷ்ணசாஸ்திரியாரவர்கள் முன்னிலையிற் பார்வையிட்டுப் பதிப்பிக்கப்பட்டது.

கல்வியறிவொழுக்கங்களினும் சிவபத்திமுதலியவற்றினுஞ் சிறந்த ஊற்றுமலைசமஸ்தானம் வீரகேரளம்புதூர் ம-௱-௱-ஸ்ரீ ஜமீன்தாரவர்களாகிய இருதயாலயமருதப்பதேவரவர்கள் அரிய இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்தியதுபோலவே, ஒவ்வொருபிரபுக்களும் ஒவ்வொரு அரியநூல்களை அச்சிட்டுவெளிப்படுத்தினும், எப்பாஷைகளினுமினிய நமதுதமிழ்ப்பாஷை நாளுக்குநாள் அபிவிருத்தியையடைந்து தழைத்தோங்குமே! அங்ஙனம் தழைத்தோங்குமாறு சிவபெருமான் திருவருள்புரிவாராக. சுபம். இங்ஙனம்,

அடியார்க்கடியேன்
**இராமலிங்கன்.**

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கஅ | ரு | கூ | முன்னூ ... | முந்நூ |
| உசா | ககூ | உ | கடைமை ... | கடமை |
| உஅ | ரு | உ | டிகழ் ... | திகழ் |
| சச | 0 | உஉ | மர் ... | மர்க் |
| ருஅ | உக | க | விவி ... | விய |
| சாகூ | எ | கூ | பனேர் ... | பனே |
| எகூ | ரு | கூ | லொடி ... | யொடி |
| ஷை | ஷை | ஷை | கங்கன் ... | கமு |
| ஷை | ஷை | ச | ரத்தை ... | ரமும் |
| அஎ | 0 | உக | அட்ட் ... | அட்ட |
| கூ0 | கஎ | க | னைமுதலாஞ் ... | னேமுதலாச் |
| ககூ | க | உ | காம ... | கன்ம |
| கஉஎ | ச0 | கூ | யிகழ் ... | யிழ |
| கசகூ | கக | க | குருப் ... | குரு |
| கசசா | எ | கூ | வனைபூ ... | வனைப் |
| கருஉ | ககூ | க | இயற்றிப ... | இயற்றிய |
| கருசா | கூஎ | உ | யத்த ... | யுத்த |
| கசாஉ | ரு | கூ | மூந்நு ... | மூந்று |
| கசாகூ | சரு | உ | தன்னை ... | தம்மை |
| ஷை | சசா | க | தனை ... | தமை |
| கஅஎ | கூ | கூ | மதனை ... | மிதனை |
| ககூஉ | கூரு | உ | கந்தா ... | நந்தா |
| ககூச | சா | ச | வுய ... | வுயர் |
| ககூரு | ககூ | உ | லெவ ... | லெண |
| உ00 | கஉ | கூ | நாக ... | காக |
| உ0சா | கஎ | கூ | மேலைம் ... | மேலைப் |
| உ0அ | உஅ | கூ | மய ... | மாய |

அமைத்துக்கொள்ளல்.

கக-வது பக்கமுதலியவற்றிலுள்ள வாயிலாய், நன்காய் என்பன முதலிய சில செய்தென்னும் வினையெச்சங்களை செயவெனெச்சமாக வும், கசாக - வதுபக்கத்தில், விருஷைச்சிவபூசையென்பதற்கு விருத்தியாபூசை சிவபூசையெனவும் பொருள்கொள்க.

கக-வதுபக்கத்திற் கூறப்படும் பதினொன்கு இந்திரருள் முதலிந்திரன்பெயர் கிடைக்கவில்லை.

---

# பிரகடனபத்திரம்.

இப்புத்தகம் விலைரூபா (க) ஆகவும், ஷை ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளாற் பரிசோதித்துப்பதிப்பிக்கப்பட்ட சிகாளத்திபுராணம் சிவப்பிரகாசசுவாமிகள்முதலிய மூவர்சரித்திரத்தோடு காலிகோபயின்டு அணு (கஉ) ஆகவும், ஷை ஆப்பயிண்டுபுத்தகமும், திருக்கூவப்புராணமும், சிவப்பிரகாசசுவாமிகள் தோத்திரப்பிரபந்தத்திரட்டும் தனித்தனி அணு (கo) ஆகவும், வசவபுராணம் ரூபா (கவ) ஆகவும், வேதாந்த பாக்கியானம் அணு (சா) ஆகவும், பழமலையந்தாதியுரை அணு (...) ஆகவும், விநாயகர் தோத்திரப்பிரபந்தத்திரட்டு அணு (...) ஆகவும், கொடியிடையம்மைபிள்ளைத்தமிழ்முதலியன அணு (...) ஆகவும், சென்னை முத்தியாலுபேட்டை தம்புசெட்டிவீதி (கஙo) வது நம்பர்வீட்டிலெம்மிடத்திலும், சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை நாட்டுப்பிள்ளையார் கோயில்வீதி (ஙசா) வது நம்பர்வீட்டில் ம-ா-ா-ஸ்ரீ கா. முருகேசமுதலியாரிடத்திலும், சென்னை தண்டையார்பேட்டை திருவொற்றியூர் ஹைறோட் (உஎகூ) வது நம்பர்வீட்டில் ம-ா-ா-ஸ்ரீ க. வ. திருவேங்கடநாயுடுவினிடத்திலும், சிதம்பரம் சைவப்பிரகாசவித்தியாசாலை மானேஜர் ம-ா-ா-ஸ்ரீ க. பொன்னுசாமிப்பிள்ளையிடத்திலும் தபாற்கூலியுடன் பெற்றுக்கொள்ளலாம்.

கா. ஞானசுந்தர ஐயர்.

# அத்தியாயவகராதி.


| பக்கம். | அத்தியாயம். | பாடற்றொகை |
|---|---|---|
| ௧௯௯ | அக்கினிகாரியமுரைத்தவத்தியாயம். ... | ௨௧ |
| ௭௧ | அக்கினிசோமமயமுலகென்பதுரைத்தவத்தியாயம்... | ௯ |
| ௧௬௧ | அடியவர்நித்தியகன்மமுரைத்தவத்தியாயம். ... | ௫௭ |
| ௭௩ | அத்துவாக்களினியல்புரைத்தவத்தியாயம். ... | ௨௧ |
| ௨௧ | அந்தக்கரணாதியண்டாந்தமுற்பத்தியத்தியாயம். ... | ௧௧ |
| ௧௫௯ | ஆசாரியாபிடேகவிதியுரைத்தவத்தியாயம். ... | ௧௫ |
| ௨௨௪ | இருடிகள்காசியிற்கதியடைந்தவத்தியாயம். ... | ௨௭ |
| ௫ | இருடிகள்பிரமலோகமடைந்தவத்தியாயம். ... | ௧௭ |
| ௨௦௩ | இலிங்கோற்பத்தியுரைத்தவத்தியாயம். ... | ௩௦ |
| ௯௩ | உபமன்னியுவின்பேறுரைத்தவத்தியாயம். ... | ௧௩ |
| ௧௧௫ | உமாமகேசுரபூசனையுரைத்தவத்தியாயம். ... | ௧௫ |
| ௩௧ | உருத்திரன்வெளிப்படுமத்தியாயம். ... | ௬ |
| ௨௯ | உருத்திரோற்பத்தியத்தியாயம். ... | ௬ |
| ௧,௯௬ | கடவுள்வாழ்த்து. ... | ௧௦,௪ |
| ௯௭ | கண்ணன்சிவதீக்கைபெற்றவத்தியாயம். ... | ௧௬ |
| ௧௮௭ | காமியகன்மபலமுரைத்தவத்தியாயம். ... | ௩௬ |
| ௧௭ | காலவனைவருந்தேவாதி தேவராயுளும்பகர்ந்தவத்தியாய[ம்... | ௧௨ |
| ௧௬ | காலவியல்புரைத்தவத்தியாயம். | ௫ |
| ௧௭௨ | கிரியாபூசைவிதியுரைத்தவத்தியாயம். ... | ௪௬ |
| ௧௧௯ | குரவர்பெயருமாணாக்கர்பெயரு முரைத்தவத்தியாய[ம்... | ௧௨ |
| ௧௪௧ | குருதீக்கைப்பொதுவிதியுரைத்தவத்தியாயம். | ௨௫ |
| ௨௦ | சத்தியாதியவ்வியத்தாந்தமுரைத்தவத்தியாயம். ... | ௭ |
| ௧௪௫ | சமயதீக்கைவிதியுரைத்தவத்தியாயம். ... | ௨௬ |
| ௧௫௭ | சாதகதீக்கைவிதியுரைத்தவத்தியாயம். ... | ௮ |
| ௧௦௬ | சிவசத்தியருவிபூதியுரைத்தவத்தியாயம். ... | ௨௭ |
| ௧௨௧ | சிவபிரானுமாதேவிக்கருளியவத்தியாயம். ... | ௫௨ |
| ௨௦௮ | சிவலிங்கவியல்பும்பூசாவியல்புமுரைத்தவத்தியாயம்.. | ௨௬ |
| ௨௦௨ | சிவவிரதமுரைத்தவத்தியாயம். ... | ௭ |
| ௧௮௦ | சிவயோகமகிமைமுதலியவுரைத்தவத்தியாயம். ... | ௨௯ |
| ௧௦௦ | சிவன்பசுபதியாதன்முதலியவுரைத்தவத்தியாயம். ... | ௧௯ |

| பக்கம். | அத்தியாயம். | பாடற்றொகை |
|---|---|---|
| ௭௯ | சிவன்விசயமுரைத்தவத்தியாயம். ... | ௮ |
| ௭௭ | சிவானுக்கிரகவியல்புரைத்தவத்தியாயம். ... | ௩௯ |
| ௨௩ | சுவேதவராகாவதாரவத்தியாயம். ... | ௫ |
| ௯ | ஞானநிலைமையுரைத்தவத்தியாயம். ... | ௬௩ |
| ௨௧௩ | ஞானயோகமுதலியவுரைத்தவத்தியாயம். ... | ௭௦ |
| ௫௨ | தக்கன்யாகமடைந்தவத்தியாயம். ... | ௧௩ |
| ௫௫ | தக்கன்யாகமழித்தவத்தியாயம். ... | ௨௯ |
| ௧௧௭ | தேவர்கட்குச்சிவாகமமளித்தவத்தியாயம். ... | ௧௦ |
| ௫௯ | தேவாதியர்தோத்திரஞ்செய்தவத்தியாயம். ... | ௧௯ |
| ௩௭ | தேவிதக்கன்முதலியோரைச்சபித்தவதரித்தவத்தியாயம். ... | ௪௫ |
| ௬௨ | தேவிதவமான்மியமுரைத்தவத்தியாயம். ... | ௩௩ |
| ௬௭ | தேவிபுலியொடுமந்தரமடைந்தவத்தியாயம். ... | ௬ |
| ௧௯௩ | தோத்திரமுரைத்தவத்தியாயம். ... | ௩௭ |
| ௧௧௩ | நிட்களசகளசொரூபமுரைத்தவத்தியாயம். ... | ௧௨ |
| ௧௦௪ | பஞ்சப்பிரமவட்டமூர்த்தமுரைத்தவத்தியாயம். ... | ௮ |
| ௧௨௯ | பஞ்சாக்கரமான்மியமுரைத்தவத்தியாயம். ... | ௭௧ |
| ௧௧௦ | பரசிவப்பிரபாவமுரைத்தவத்தியாயம். ... | ௧௫ |
| ௨௪ | பலவகைச்சிருட்டியுரைத்தவத்தியாயம். ... | ௨௦ |
| ௮௩ | பாசுபதயோகமு மெண்வகைநாமமு முரைத்தவத்தியாயம். ... | ௧௯ |
| ௮௭ | பாசுபதவிரதமுரைத்தவத்தியாயம். ... | ௩௫ |
| ௪௫ | பார்ப்பதிதிருமணமும் வீரபத்திராவதாரமு முரைத்தவத்தியாயம். ... | ௬௫ |
| ௩௩ | பிரமவமிசவுற்பத்தியத்தியாயம். ... | ௨௪ |
| ௨௭ | பிரமவிட்டுணுவுற்பத்தியத்தியாயம். ... | ௧௩ |
| ௪ | புராணவரலாறுரைத்தவத்தியாயம். ... | ௭ |
| ௬௯ | புலிக்குக்கயிலாயபதவியளித்தவத்தியாயம். ... | ௧௪ |
| ௩௨ | மகளிருற்பத்தியத்தியாயம். ... | ௫ |
| ௧௮௫ | மாதபூசைமுதலியவுரைத்தவத்தியாயம். ... | ௧௩ |
| ௧௭௧ | மானதபூசைவிதியுரைத்தவத்தியாயம். ... | ௯ |
| ௧௦௩ | யாவுஞ்சிவன்செயலென்பதுரைத்தவத்தியாயம். ... | ௮ |
| ௮ | வாயுபகவானடைந்தவத்தியாயம். ... | ௩ |
| ௧௫௦ | விசேடதீக்கைவிதியுரைத்தவத்தியாயம். ... | ௬௬ |

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வாயுசங்கிதை.

## பூருவகாண்டம்.

### காப்பு.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கார்தவழ்கயிலைவலியுடையரக்கன்கைகயிறலைவுறவண்ண
மேர்பெறத்திணிபூண்கட்டியதேய்ப்பவிரும்பெரும்பணைநெடுங்கரத்தா
லார்வுறத்தழீஇமுகிலெனமுழங்கியடியவர்க்காருள்புரியுந்
தாரணிமவுலியையங்கரக்கடவுடாளிணைதலையிற்பணிவாம்.

---

## கடவுள்வாழ்த்து.

### சிவபெருமான்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்பூத்தவயர்கொன்றைநறச்செழுமலர்த்தேன்செஞ்சடைமேற்சிந்தச்
செவ்விக், கார்பூத்தவிமையமயில்களிதூங்கப்பதஞ்சலிமாமுனிவன்கா
ணப், போர்பூத்தவரிப்புலிக்கான்முனிபோற்றவயங்குமணிப்பொதுவி
னன்கா, யேர்பூத்தநடம்புரியுமிறைமுதலைவணங்கியுளத்திருத்துவாமே.

## சிவசத்தி.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கட்டழகுடையமுகத்திலுக்குடைந்தகதிர்மதிகளங்கொளச்சாம்பு, மட்ட
விழ்கமலநின்முகத்தெழிலைவாய்க்கவும்பெறும்கொலோவென்று, விட்
டலர்கடுக்கைநறுமலர்த்தொடையல்புனைந்தவன்வியந்தெடுத்தணைக்கும்,
வட்டவாண்முகஞ்சாய்த்திளநகைபுரியுமலைமகடாள்வணங்கிடுவாம். (௨)

## விநாயகக்கடவுள்.

மாகமுடியங்குமுப்புரமெரித்தமணிமிடற்றிறைமனவீழ்ந்திறைஞ்சுநம்
பாகசாதனன்றன்மெய்யிளையலர்ந்தபங்கயக்காடெனவென்னவி
யாகமோர்பாகத்துமையொடுமண்ணனைகத்திடவடிபெயர்த்தேகா-
வேகமாயுழக்கும்புகர்முகக்கடவுள்விரைமலர்த்தாள்பணிந்திடுவாம். (௩)

## சுப்பிரமணியக்கடவுள்.

உணங்கிவெம்பிறவிக்கழிந்திடுமடியர்க்குணங்கன்மிசைவல்லுணவாப்
பதுபோன், மணங்கமழ்கமலச்சேவடிப்போதில்வயங்கியதண்டைகளின்
றொலிப்பப், பணங்கெழுபாந்தள்படப்புடைத்தாலும்பச்சிளமயிலின்
மேற்றோன்று, மணங்குமைவயிறுவாய்த்திடவந்தவறுமுகவொருவனை
த்தொழுவாம். (௪)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

சூழ்சுடர்மணிச்சூட்டரவின்வாய்நஞ்சாற்சுழன்றுவீழ்நாயகனுயிர்விடுத்
தேழிசையளிதாழ்கருங்குழன்மடந்தையெழில்வளர்முலைமுகட்டிழுக்கில்
வீழ்தரச்சிறந்தமணம்புணர்வித்துமிக்கபேரருளினைக்கொடுத்த
காழிமாமுகிலின்கமலமொத்திலங்குகழல்வணங்குதல்செய்வாம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

வல்லுஞ்சுழியுந்திவயிற்றெழுநோயுமயக்கிடுபிறவிவெந்நோயுந், சல
ங்கியேயகலக்கனைபொருதிரங்குகருங்கடலுண்முனைத்தெழுந்த, வெள்ளம்
கொளிப்பவளவரைநிகர்முதலையின்னிசைத்தமிழிறைப்பாடிப், புலைச்சம
ணர்ந்தினையும்வென்றமெய்ஞ்ஞானம்பூத்தவன்பொன்னடிதொழுவாம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

கலிவிருத்தம்.

மகத்தில்வாழ்சனியாயினையென்றுவான்
பகைத்தமுப்பெயில்செற்றவற்பாடியே
முகத்திற்கண்ணுமுனைத்தெருமுறுணமா
மகத்திற்கண்ணுமடைந்தவற்போற்றுவாம். (எ)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்னிமற்றுலகமுறைத்திடமுங்கையாகியேயுறைதந்திடுமெழில்சேர் இன்னிபொற்பாவைகிளியெனமிழற்றிக் கேழ்கிளர்மணிமிடற்றிறைதக்குத், தென்றுசெந்தமிழின்னுரைடபுனைந்தேத்தச்சேகறுதிருவருள்புரிந்த, வள்ளன்மாணிக்கவாசகன்றனைத்தாள்வணங்கியேவாயினுற்றுதிப்பாம்.

## குருவணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னைவினையிருளகலமுரிதிரைப்பாற்கடலகட்டின்முளைத்ததிங்க ளன்னிலவுபாய்ந்தெறிக்குலத்தருவெண்ணீறணிந்துநனிவீட்டி, லன்னமுயர்த்தவனரியாவருஞ்செழுத்தின்றன்மையினையறியக்கூறித், தன்னருள்புரிந்தாண்டுகொண்டகவாயிதேவன்றிருத்தாடலைமேற்கொள்வாம்.

## திருத்தொண்டர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கார்மிடற்றிறைவன்கருணைபெற்றுருகிக்கனிந்தமெய்யடியவர்விரிந்த
சீர்புகழ்ந்திடுமென்னாவவர்கமலச்சேவடிபணியுமென்றலைமெய்
போர்த்தருமயிர்தக்கொழில்செயுமென்கையாங்கவருணர்ந்துநன்காக
வோர்பெறவொத்தவைவழிச்செல்லுமென்னிருகால்களைவகறுமே. ௧௦

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧.

---

## புராணவரலாறுரைத்தவத்தியாயம்.

கங்கையங்கடவுணதிதிரையெறியுங்காளிந்தியொடுகலந்தொழுகு
மங்கண்மாஞாலமேத்திடும்ப்ரயாகையதனிடையைம்பொழியவிர்ந்தூட்
பொங்குமாதவத்தாலுயர்ந்தமாமுனிவர்புரிசடையண்ணலைப்போற்றிச்
செங்கையாலழலினவிசொரிந்தழியாத்தீதறுவேள்விசெய்தனரால். (௬)

ஆயகாலையினிற்சூதமாமுனிவனடைதலுமருந்தவமுனிவர், வாய்வி
ரிமலர்ப்பூந்தவிசளித்தரியமறைதெரிவியாதமாமுனிவ, னேய்வுறவருந்
தபுராணமற்றெவையுமுணர்ந்துளோயிருங்கதியளிக்கும், பாய்புனலணி
ந்தோன்புராணமொன்றெமக்குப்பகர்ந்திடவேண்டுமென்றுரைத்தனர். ()

உரைத்தலுநறவமூற்றிருந்தொழுகுமொளிர்மலர்க்கொன்றைவே
ணியன்று,டிருத்தகத்தொழுதுசுவேதகற்பத்தினியல்பினைத்தெரிந்தொ
ருபுராணம், விரித்தனனுலவைவேந்தன்முன்னெடுத்துவிரித்தமாபுரா
ணமற்றதனைத், தெரிப்பனீர்கேண்மினெனவுளமகிழ்ந்துசேகறத்தெரிக்
கலுற்றனனால். (௮)

பொன்னவிர்சடையோனன்னவாகனனைப்படைத்துமுன்புரைய
றவகுத்த, மன்னிடு * பதினெண்விஞ்சையுமறியவழங்கினன்மற்றவன்
விரித்துப், பன்னியவகையாலெவர்க்குநன்குணர்தலரிதெனப்பாய்வி
டையண்ணல், கன்னவிறிரடோண்மாயனையழைத்துச்சுருங்கநீகழறுதி
யென்றான். (௯)

மற்றவன்மூன்றாம்யுகத்தினில்வியாதனாகியேவந்தவதரித்துச், சொற்
றனன்பதினெண்விஞ்சையுஞ்சுருங்கச்சொற்றவைதம்முணன்றுளார்ந்

---

* பதினெட்டுவித்தைகளாவன:—இருக்கு யசுர் சாமம் அதர்வம் என்னும் வேதம் நான்கு; சிக்ஷை வியாகரணம் சந்தசு நிருத்தம் சோதிடம் கற்பம் என்னும் வேதாங்கம் ஆறு; மீமாஞ்சை நியாயம் புராணம் ஸ்மிருதி என்னும் உபாங்கம் நான்கு; ஆயுள்வேதம் அருத்தவேதம் தனுர்வேதம் காந்தருவவேதம் என்னும் உபவேதம் நான்கு என்பன.

# புராணவரலாறுரைத்தவத்தியாயம்.

கங்கையங்கடவுணதிதிரையெறியுங்காளிந்தியொடுகலந்தொழுகு
மங்கண்மாஞாலமேத்திடும்ப்ரயாகையதனிடையைம்பொறியவித்தூட்
பொங்குமாதவத்தாலுயர்ந்தமாமுனிவர்புரிசடையண்ணலைப்போற்றிச்
செங்கையாலழலினவிசொரிந்தழியாத்திதறுவேள்விசெய்தனரால். (௬)

ஆயகாலையினிற்சூதமாமுனிவனடைதலுமருந்தவமுனிவர், வாய்வி
ரிமலர்ப்பூந்தவிசளித்தரியமறைதெரிவியாதமாமுனிவ, னேய்ந்தவரூத
தபுராணமற்றெவையுமுணர்ந்துளோயிருங்கதியளிக்கும், பாய்புனலணி
ந்தோன்புராணமொன்றெமக்குப்பகர்ந்திடவேண்டுமென்றுரைத்தார். ()

உரைத்தலுநறவமூற்றிருந்தொழுகுமொளிர்மலர்க்கொன்றைவே
ணியன்று,டிருத்தகத்தொழுதுசுவேதகற்பத்தினியல்பினைத்தெரிந்தோ
ருபுராணம், விரித்தனனுலவைவேந்தன்முன்னெடுத்தவிரிந்தமாபுரா
ணமற்றதனைத், தெரிப்பனீர்கேண்மினெனவுளமகிழ்ந்துசேகறந்தெரிக் (௭)
கலுற்றனனால்.

பொன்னவிர்சடையோனன்னவாகனனைப்படைத்துமுன்புரைய
றவகுத்த, மன்னிடு * பதினெண்விஞ்சையுமறியவழங்கினன்மற்றவன்
விரித்துப், பன்னியவகையாலெவர்க்குநன்குணர்தலரிதெனப்பாஸ்வி
டையண்ணல், கன்னவிறிரடோண்மாயனையழைத்துச்சுருங்கநீகழறுதி (௮)
யென்றான்.

மற்றவன்மூன்றாம்யுகத்தினில்வியாதனெனிகியேவந்தவதரித்துச், சொற்
றனன்பதினெண்விஞ்சையுஞ்சுருங்கச்சொற்றவைதம்முணன்குணர்ந்

---

* பதினெட்டுவித்தைகளாவன;—இருக்கு யசுர் சாமம் அதர்வம்
என்னும் வேதம் நான்கு; சிக்ஷை வியாகரணம் சந்தசு நிருத்தம் சோதி
டம் கற்பம் என்னும் வேதாங்கம் ஆறு; மீமாஞ்சை நியாயம் புராணம்
ஸ்மிருதி என்னும் உபாங்கம் நான்கு; ஆயுள்வேதம் அருத்தவேதம் தனு
ர்வேதம் காந்தருவவேதம் என்னும் உபவேதம் நான்கு என்பன.

முத்தொழிலியற்றமூவுருத்தாங்குமுதல்வனேமுதுமறைறவிரித்த
வித்தனேயடியார்பழவினையெல்லாமகற்றியவருட்பெருங்கடலே
கொத்தலர்கூந்தலாயிழைவாணிதலைவனேகூறறிவில்லேம்
பத்திமையெய்தியுய்ந்திடவருள்வாயெனநனிபழிச்சினானன்றே. (உ)

வழுத்துபுநின்றமாதவத்தோனைமலர்முகமெடுத்தனைநோக்கித்
தழைத்தபேரருளாலெம்முழைநீவிர்வந்தவாறென்னைசாற்றப்
பழுத்தபேரன்பாலுணர்ந்திடுபொருளைப்பாற்படவுணர்கலைமாதின்
விழுத்தகுவேதமுதல்வனேநினதுவிரைமலர்த்தாளடைந்தனமால். (௩)

அடைந்தனமென்னக்கேட்டலுஞ்சிறந்தவலர்மலராதனத்திருந்து
தடங்கொடாமரைப்பூங்கண்கணீர்வாரத் தடங்கொளிமெய்ம்மயிர்பொ
டிப்ப, மடந்தையோர்பாகனடிமுதனிலையாமணிமுடியிசைக்கரங்கூ
ப்பிக், கிடந்தபேரறிவான்மற்றவன்பெருமைகிளையுறக்கிளக்கலுற்ற
னனால். (௪)

நான்மறையினுமுணர்கலான்யாவனவிற்றிடற்கரியவன்யாவன்
மோனமாயுறையுமுனிவராலுமுற்றுநன்கறிகலான்யாவன்
ஞானனிவிளங்கியுறைபவன்யாவன்சூழ்சிறையன்னமீதூர்ந்த
வானுறைபிரமன்முதலியயாவும்வரன்முறைவகுத்தவன்யாவன். (௫)

காரணமெவைக்குங்காரணமாகியுறைபவன்யாவன்வெங்கனல்
கால், போரணிமழுவாளுடையவன்யாவனென்னைமுன்பொருந்திடப்
படைத்துச், சீர்திகழ்ஞானமளித்தவன்யாவன்றிகழ்ந்தொளிவிசும்பினூ
டலையா, தார்தரவுறைவோன்யாவன்வேள்படமுன்னழல்விழிதிறந்தவ
ன்யாவன். (௬)

ஒன்றதாயுறையுங்காரணந்தன்னையொழிவறவிரிப்பவன்யாவ
னின்றபேருலகினிறைந்தமன்னுயிரைநீங்கலாதியக்குவோன்யாவன்
றுன்றுபேருயிருளுறைந்துமவ்வுயிராற்றோன்றிடவறிகலான்யாவன்
மன்றநீடுலகம்யாவையுங்கெடினுமாய்கலாதுறைபவன்யாவன். (௭)

மூவகையாயசத்திகளுடையோன்யாவன்றண்முளரியைநினைந்தோ
ரோவறநீங்காப்பசுவுருநீக்கியுலைவறவைப்பவன்யாவன்
றவில்பேர்மதியுமிரவியுமட்கத்தயங்கிநின்றொளிர்பவன்யாவன்
வீவிலாவவனேயென்றுமாயாதுவிளங்கியேயமர்பரம்பொருளே. (௮)

பரம்பொருளாகியுறைபவன்றனேபாற்படவுணர்ந்திடப்படுவோன், றிருந்திடவாதியந்தமின்றகச்சேர்பவன்சிறந்திடவெங்கும், விரிந்துறைந்திடுவோன்வீவிலாவொளியாய் விளங்குவோன்மெய்யடியவர்கள், வருந்திடாதழியாமுத்திநன்களிப்போ னெவர்க்குமேலாகிமன்னிடுவோன். (௯)

அளந்திடயார்க்குமரியவன்பணிந்தோர்க்கரும்பெருஞானமுற்றளிப்போன், றுளங்கொளிமணிப்பூண்மிளிர்பராசத்திதுணைமுலைக்கோடுறமணந்து, விளைந்தபேர்மகிழ்வாற்காளையாம்பருவமேவியேவிரும்பிடவுறைவோன், வளர்ந்துயரண்டமெவற்றையுங்கரத்தால்வாங்கியேவிழுங்குதல்புரிவோன். (௧௦)

ஆங்கவன்றனேயுணர்வினாலுணர்தலன்றிமற்றறிந்திடற்கரியன்
றீங்கறவவனையுணர்பவர்வெய்யதீத்தொழில்புரிகுநரேனும்
பாங்கலாநெறியினொழுகுவோரேனும்பனிமதிசடைமிசைவைத்த
மாங்குயிற்கிளவிமலைமகள்பங்கன்மனாமலரடியடைந்திடுவார். (௧௧)

அறைந்திடுநூலஞ்சுக்கும்பரமென்றன்னவன்றனக்குமூன்றுருவஞ்
சிறந்திடுந்தூலநம்மையேமுதலாந்தேவர்நன்குணர்வர்சூக்குமந்தா
னிறைந்திடும்யோகம்வல்லவருணர்வர்நிகழ்த்திடற்கரியதாம்பரந்தான்
றிறம்பலில்சைவஞானமன்னினராற்றீதறவுணர்ந்திடப்படுமால். (௧௨)

அற்றுமன்றறியச்சுருங்கயானுனைப்பணியிழைபாகன்வார்கழலிற் [ன்
றெற்றெனவறிவாற்பத்திமையெய்தல்வேண்டுமோற்சிறந்தபத்திமையா
மற்றிணையில்லாமுத்தியெய்திடுமொன்மாசிலாதாயபத்திமையு
முற்றிழைபாகனருளினாலெய்தல்வேண்டுமோன்மொழிந்திடுங்காலே. ()

அருளுநான்மறைகளுரைத்திடுதருமமாசையின்றியுஞற்றிற்
றெரியுமற்றதனாற்பாவபுண்ணியங்களொழித்திடுமொழித்திடிற்சிறந்த
பொருவறுசிவமாயோகம்வந்தெய்துமெய்திடிற்புகலுநற்சியாய்
மருவொணாதாகியுயர்வறவுயர்ந்தமாசிலாமுத்தியெய்திடுமால். (கஉ)

அறைந்தவிந்நெறியையன்றிநம்மிறைவனருள்பெறினன்னதன்வயிற்றி
னுறைந்திடுகாலையேனுநல்லிளமையுற்றிடுபோதினுமூப்பு
நிறைந்திடுகாலையேனுமுற்றழியாநிலவியமுத்திவீடெய்திச் [தே]னை.
சிறந்தபேரின்பத்துறைந்திடப்படுமாற்றெள்ளிதிற்றெரிந்துணர்ந்திடு

ஆதலாலிறைவனருள்பெறவேள்வியாற்றுமின்றாற்றுமக்காலை
பூசைதவேந்தெய்தப்படுமவன்றருமநெறியினையுணர்ந்திடக்கேட்டுங்
கோதறுகாசிடைடதிரோரிரும்புதெய்துமாங்கதுகண்டுகுறியாத்
தீதறுநம்பாலடைமினோர்பவத்தின்முத்திவீடெய்திடத்தெரிப்பாம். ()

என்றுருத்திகிரியியற்றுபுவிடுத்தாங்கிதுவிழப்பட்டவத்தலத்தின்
மன்றநீர்வேள்வியியற்றுமினென்னமற்றதன்பின்னவர்நடந்தார்
சென்றுவாய்மடியவோர்தலந்தன்னில்விழுந்ததுசிறந்தமாதலத்தை
நின்றமாதவத்தோர் * நைமிசாரணியமெனப்பெயர்நிகழ்த்தினரன்றே.

இருடிகள்பிரமலோகமடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கரு.

## வாயுபகவானடைந்தவத்தியாயம்.

உரைத்துயர்தலத்தில்வேள்விநன்கியற்றுகாலையிலுலகைவென்றெய்து
வருத்தி:பாலெதிர்ந்துபணிந்தலர்தூவியம்பொருளுணர்ந்தனையாற்
றிருத்தகவிருந்துவேள்விநீதறவேசெய்திடலாயதோவென்ன
வருத்தமின்முனிவர்மற்றவனோடுமீங்கிதுவழங்கலுற்றனரால். (க)

* நேமி-சக்கரம், ஶபி-கிடத்தல்; நைமிசம்-சக்கரமோய்ந்தவிடம்.

யாங்கண்முற்காலைஞானமொன்றின்றியன்னவாகனன்றனையெய்தித், தீங்கறஞானமுறவெனவுரைப்பத்திங்கள்வேணியனடிமுன்னி, யோங்கிருவேள்விபுரிமினக்காலைபுலவைவேந்தும்முழையடைந்து, பாங்கினின்ஞானமுமதனாங்கொள்ளப்பாற்படப்பகர்வனென்றுரைத்தான். ()

ஆயவாசகத்தைக்கேட்டிவணெய்தியரியநான்மறையுரைப்படியே
யெய்வுறவேள்வியாயிரம்பருவமியற்றினமியற்றியவீற்றி
லீயிவணடைந்தாயெமக்குமாசறவேநெஞ்சகங்கொளநிகழ்த்தென்ன
வாயுநாயகனுமுளமிகமகிழ்ந்துவரன்முறைவகுத்துரைத்தனனால். (கூ)

வாயுபகவானடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கூஅ.

---

# ஞானநிலைமையுரைத்தவத்தியாயம்.

---

எய்தியவிருபத்தொன்பதாஞ்சுவேதலோகிதகற்பத்திலெழில்சேர்
மைதிகழ்மிடற்றுமுதல்வனைநினைந்துமலரயன்றவமியற்றினனே
லுய்திறமருளவேண்டிமான்மழுவாள்கரந்துவைத்தொண்ணுதல்பாகன்
மெய்திகழ்சுவேதமுனிவரனெனமேதகவெளிவந்துநின்றான். (௧)

நின்றநற்றந்தையாகியவானைநிழன்முடிதாழ்த்தடிவணங்க, வன்றவனழிவின்ஞானமுங்காயத்திரியுநன்கருளிடவடைந்து, மன்றவிவ்வுலகம்யாவையும்படைத்தான்மற்றவனுழையுயர்ஞான, மொன்றயானடைந்தேனென்னவுமுனிவருணர்ந்தினிதுரைக்கலுற்றனரால். (௨)

நான்முகக்கடவுளுரைத்திடுஞானம்யாதுநன்காய்நவின்ஞானந்
தானெமக்கறியவருளுதியென்றுநாவில்சீர்முனிவரருரைப்பத்
தேன்வழிகமலவீட்டினிலுறைவோன்சேவடித்துணைமலர்நினையா
மோனமாயிருந்துகாற்றினுக்கிறைவன்முனிவறமொழியலுற்றனனால்.

## கொச்சகக்கலிப்பா.

அறைந்திடுமெஞ்ஞானத்தாலடையுமாற்றுன்பமது
நிறைந்தொளிருஞானத்தாற்கெடல்வேண்டுமிறைஞான
முறைந்தபசுபாசமுயர்பதியையறிவுணர்வென்பார்
திறம்பவிலாமாதவத்தின்மிக்குயர்ந்தசெம்மையோர். (௪)

விரிந்துறையுமசடமொடுசடமியந்தாவிணைமிக்கோர்
நிரந்தமரும்பசுபாசபதியென்றுவீங்காறு
திருந்தியவக்கரஞ்சரஞ்சொல்பரமென்றுஞ்செப்புவராற்
புரிந்ததவத்தீரொன்னமற்றவரீங்கிதுபுகல்வார். (௫)

அக்கரமோடுறைகின்றசரம்பரம்யாமறியும்வகை
யொக்கவெடுத்துரையென்னப்புருடனுறைபிரகிருதி
மிக்குயர்ந்தவீசனெனவிளம்புவராலெனவோடுந்
தொக்கமுனிவரர்மீட்டுமிவைதெரிந்துசொற்றனரால். (௬)

ஏபவுறைபிரகிருதியாதந்தப்புருடனெவ
னுயபிரகிருதியுமப்புருடனுமெக்காரணத்தான்
மேயவுறக்கூடுவதுகூடவிளைப்பவனெவன்முன்
றூயவறிவினின்மிக்கோய்துகளறநீசொல்லென்றார். (௭)

விண்டபிரகிருதியேமாயைமிகுமாயையா
லுண்டிடப்பட்டவன்புருடன்மாயையினிலுற்றமர்ந்து
மண்டிடப்பட்டிடுவதுசெய்கருமமலத்தால்வருமாற்
றண்டலிலிவ்வகைசெய்வோன்சிவனென்னச்சாற்றுவரால். (௮)

சாற்றுவதொன்றுரைத்திடலுஞ்சாற்றுமந்தமாயையா
தேற்றமிகுமாயையான்மறைப்பவுறைபவனெவன்முன்
றேற்றுகின்றமலம்யாதுசிவம்யாதுதுகளறவே
யாற்றவெமக்கெடுத்தின்னேயறையெனமாதவரறைந்தார். (௯)

அறையமகேச்சுரன்சத்திமாயையாமார்மலத்தா
னிறையமுனமேமறைந்துநின்றுறையுமான்மாவை

முறையிலந்தமாயைதான்மூடுமலமாயைகெட
வுறைவதுவேசிவமென்னவுரைப்பராலெனவுரைத்தான். (௧௦)

எங்குமுறையான்மாவைமாயையெவற்றான்மறைக்கு
மங்குமறைத்திடுவதுதான்யாதிற்காவார்ந்திடவே
மங்கமறைத்திடலெவற்றான்மாசறவேமாய்ந்தொழியு
மிங்கறைதியெனத்தவத்தோருலவைவேந்திடம்பினனால். (௧௧)

மற்றவந்தக்கலைகளான்மறைத்திடுமான்மறைப்பதுதா
னுற்றியற்றுகருமத்தாலுறுபோககாரணமாய்த்
தெற்றெனவேமலமாயத்திருமான்மறைப்பதெனச்
செற்றமிலாமாதவத்தோர்பின்னுமிதுசெப்பினரால். (௧௨)

கலைமுதலாயினயாவைகருமம்யாதக்கரும
மலைவுறவெக்காலமுதல்வந்ததுவந்ததுமாய்ந்து
தொலைவுறலெக்காலமுறுபலன்யாதுசொலமன்னி
நிலைபெறுமாதாரமெதுபோகமெவற்றானேரும். (௧௩)

உண்டிடுவதேதந்தவுறுபோகந்தனக்குற்ற
துண்டலில்காரணமேதுமலமுழுதுந்தணப்பதற்கு
விண்டிடுகாரணமேதுமேவுமலமாடவொளி
கொண்டுறைவோனெவ்வாறிங்குறைவனிதுகூறென்றார். (௧௪)

என்னலுஞ்சொல்கலைவித்தையராகமுடனியல்கால
மன்னுநின்றநியதியேகலைமுதலானவைமன்னித்
துன்னுமிருவினைகளேகருமமாஞ்சுகதுக்க
மன்னவற்றின்பலமென்னவறையுமாலருமறையே. (௧௫)

அறைகருமமனாதியாமவற்றினால்வருபலத்தை
முறையினிலுண்டிடமுழுதுமாயுமான்மொழிகரும
முறையுமனமாதாரமாயுறையுமுறையுமது
மறிவதற்காயேபோகநுகர்வதெனவழங்குவரால். (௧௬)

உறைந்திடுமெவ்வியத்தமேயுண்டிடப்பட்டிடுமொருளா
மறைந்திடுமிந்தியங்களொடுமமருமந்தக்கரணமே
நிறைந்துறையுமுடம்பாருநிகழ்போககாரணந்தான்
திறம்பலிலாட்பலநுகர்ந்தபின்சிவபாவனைசேரும். (சஎ)

பாவகத்தாலழியாதசிவன்றனருள்பயக்குமான்
மேவியவவ்வருளிறைன்மலமாயும்வீக்குதற்பி
ஞேவிலப்புருடனேசிவனென்னவுறைவினைத்
தாவிறவத்தோர்பின்னுமிவையெடுத்துச்சாற்றினரால். (சஅ)

கலைமுதலாயினவைந்தின்காரியமொன்றேபலவோ
நிலைபெறுமான்மாவெவற்றுளீங்காதன்பவெனக்குறுது
சொலவுறையும்புருடனென்றுஞ்சொலப்படுமென்றேனைமையா
யலகிலாதுறைகின்றவவ்வியத்தம்யாதாமால். (சகூ)

ஆங்கதுதானெவ்வகையாயருந்திடப்பட்டிடுமருந்து
நீங்கலிலாதேயுறைந்துநின்றகாரணமேதா
தாங்குகின்றவுடம்பேதுசாற்றுதியெனமுனிவர்
வீங்கியெவற்றினுமுறையுமலவையவைவிரித்தனறால். (ருo)

கலையோடுமியல்வித்தைசயறிவொடுகாண்கிரியையினை
நிலைபெறவுண்டாக்குமானின்றவந்தவாராகந்தான்
மலைவறவேவியற்றுவிக்குமற்றையதாங்காலமே
யுலைவறவீங்கிவையினாளுறையுமெனச்செய்யுமால். (ருக)

மற்றவந்தநியதியேமன்னுகின்றபொருள்வடிவை
யிற்றெனநன்குணர்த்துமாலியம்புபிரகிருதியே
யுற்றிடுமவ்வியத்தமொடுபிரதானமெனவுணர்ந்தோர்
சொற்றிடப்பட்டிடுமென்னச்சொல்லுவராலுயர்ந்தோரே. (ருஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்பந்தருமாற்சாத்துவிகமியம்புகின்றவிராசதமே
துன்பம்விளைக்குமருட்டருமாற்சொல்லக்கிடந்ததாமதந்தா

னென்பிற்பெரியமாதவத்தோரைறந்தவிவைகள்வாயிலாய்
மூன்புற்றுரைத்தவவ்வியத்தமருந்தப்படுமான்மொழியுங்கால். (உங)

சுருங்கவுரைறதன்மாத்திரைகளைற்றிற்றோன்றும்பூதங்க
ளிரண்டேயுறையிந்தியங்கள்புத்திமுதலானவையுநீங்காமற்
றிருந்தவுண்டாங்காலத்திவ்விகாரப்படுஞ்செப்பியவிவைகள்
விரிந்தேதோன்றுங்காலத்திலவ்வியத்தமெனமேவும். (உச)

மெய்கண்முதலாங்காரியங்களானபோதவியத்தமாம்
மையவிரியப்படும்வியத்தம்பகரவ்வியத்தமெனுமிவைகண்
மைமிருளத்தோர்வேறல்லமண்ணுங்குடமும்போலென்பார்
மையாதுறையவ்வியத்தமேயாவுமாகுமெனநவின்றான். (உரு)

நாடிஞானமெய்புந்தியொடுநவிலிந்தியங்களிவையன்றித்
தேடவரியவான்மாவேறுளதோதெரிந்தியெனவென்று
நீடுதவத்தான்மிக்குயர்ந்தமுனிகளின்முனிவருரைத்திடஉ
மாடுற்றுறைகாற்றினுக்கிறையன்மாசின்றுகவுரைத்தனன்றல். (உசா)

ஒன்றுமறியாரிவ்வகையேயுரைப்பர்புத்திமுதலொடுங்க
வின்றுதுயின்றோனெழுந்தநன்காய்த்துயின்றேனென்னவிசைத்தமை [யா
லென்றுமெமைக்குநவொயிருக்குமான்மாவுளனவனை
மன்றமறையந்தரியாமியென்னநாளும்வழங்குமால். (உஎ)

மறைகளிவ்வாறேயறையுமான்மாவெவையுமன்னியே
யுறைவனுறையப்பட்டிருந்துமுணர்வாலுணர்தலன்றியே
யறையிந்தியமற்றெவற்றினுக்குந்தோன்றானெண்டை வியலனாய்
நிறையுமறிவான்மிக்குயர்ந்தோர்காணவென்றுநிலவுவனால். (உஅ)

ஒலிநீர்கனைக்கப்பட்டநிலமோங்குமனையுண்டாக்குதல்போன்
மலியுமருஞானத்திறலியற்றுவரம்பில்கருமமே
நலியுந்துன்பம்பிணிபிறைறந்தனவைசேருடம்புதருமடம்பே
யலகின்றிறக்கும்பிறப்பதாஉமற்றேயாகுமறையுங்கால். (உகூ)

னென்றேன்பாகீரதிகோடியலைக்கொத்தலம்பியார்த்தொழுகு
மின்னுஞ்சடிலத்திறைசூழ்காவிரிபாய்பூங்கமலத்தடைகுவனால். கசா

உறையுந்தயிருநெய்போன்றுமென்னிலுறையென்னையைப்போன்று
மறையுமரணியனல்போன்றுமரும்பமலர்மாலை
நிறையுந்தவத்தோரகத்திடையிற்கண்பார்நிலைமைப்பொருளே
முறையாற்றொழிற்கொருமூன்றாகியத்துமூவர்முதல்வனே. (கஎ)

அவனேபிரமன்றனைமுன்னம்படைத்தோனணுவிலணுவாகி
யுவமையின்றியுயர்ந்தற்றுமுயர்வோன்பரிதியொளியாவோ
னெவையுமாகுமாயைதனைக்கடந்தோன்றிசைகளைவற்றிடையு
நவைதீர்முகங்கைகநாளனாய்நாபிக்குவளைநிறைவோனே. (கஅ)

காண்பான்கண்களிலொளிக்காநின்றொலிக்கேட்டிடுவான்
சேண்போய்த்திசைகள்யாவையினுந்திரிவான்கால்களின்றியே
பாண்பாவியசொல்லுமைபன்னிவையேயறிவான்பகலொளையும்
பூண்பாவகலத்தமரர்களுங்காணவினைப்பொருத்திடவோ. (ககூ)

அன்றேன்மாயைவெள்ளிவெட்பமருங்கருப்பினிறமாய்த்த
மன்றுறையைச்சாத்துவிகமிராசதந்தாமதமாங்குணமருவித்
தன்றுலகம்படைக்குமொருவனைத்தன்றற்றுவக்குறுவை
னொக்காளினுமற்றதைத்தடக்கேதயிலாமிமொருவனைநருவனல். (உ0)

இலங்கியுறையுமாங்கவளேயிதயத்திடையேகாண்பவனே
புலன்கள்வழியேதன்றுணர்வைப்போக்காதிடர்களுழியற்றி
மலங்கவடருமாயைதனைமாயுமாறிமாயாது
துலங்கியொளிரும்பேரின்பமுத்திகூட்டித்தடர்த்துறைவான். (உக)

காலமொருமூன்றிறுமுயிர்யாப்பொருளையுணர்த்திற்காணும
மேலைமுத்தியடைதற்கின்கெண்ணவைங்குமாய்விரிந்த
நீலநிறவாகாயத்தைத்தனிநன்குகட்டிக்கொள்வதே
சாலநிகர்க்குமெனப்பழையதனினான்மறைகள்சாற்றுமால். (உஉ)

அழியாவிந்தஞானகதைவெகுளியுளத்தோடமர்பவர்க்கு
மிழிபாந்தொழிலினடப்பவர்க்குமேதமுடையபுதல்வருக்கும்
வழிபாடியற்றல்புரியார்க்குமழுவாளேந்துமிறைவனென
விழைவாற்குரவர்தமையுணரார்தமக்கும்விளம்பலாகாதே. (உக)

ஞானநிலைமையுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அக.

---

## காலவியல்புரைத்தவத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றலுங்காலத்தியல்புமக்காலமெவனுழையிருக்குமாங்கதுவு
மொன்றியகாலத்தகப்படாதென்றுமுறைந்திடப்படுபவன்றனையு
மின்றுநீயெமக்குக்கூறுதியென்னவிருந்தவரிசைத்திடலோடுங் [மெத்தே.
கொன்றைறவேணியன்றன்குரைகழற்றொழுதுகூறினனுலவைவேந்

நிகழ்ந்திடுநிமிடங்காட்டைசேர்கலையேயங்கமாய்நிறைந்திடுங்காலம்
பகர்ந்தவக்காலஞ்சிவனிடத்தமருமற்றது பண்ணவராலும்
திகழ்ந்தமாயோகம்வல்லவராலுங்கடந்திடலரிதுதேன்பிலிற்று [வனே.
மகைந்தபூங்கொன்றையணிமலர்த்தொடையலண்ணலேயகன்றுரைறந்து

ஆங்குறைகாலமளகைவேந்தேங்கியயர்ந்திடவளவறப்பெருகி
யோங்கியநிதியப்பெருமையினுமுற்றபேருயர்குலத்தானும்
வீங்கியமகிழ்ச்சியுடையவரொன்றைநினைந்திடவேறுமற்றொன்றை
பாங்குநின்றியற்றுமற்றதன்பெருமையாவரோபகர்ந்திடவல்லார். (உ)

துன்பமுற்றொருவன்றுயர்க்கடலாழ்ந்துதூங்கிடத்துயரிலனாகி
யின்பமுற்றொருவனேனையங்கடலுளாழ்ந்தினிதிருந்திடச்செய்யு
மன்புறுகீதங்கேட்டுநாடகங்கண்டமர்ந்துநன்குறைபவரிடத்து
மன்பதையிடத்தேற்றுண்பவரிடத்துமாறிலாவகைநடந்திடுமால். (௩)

பிறத்தலோடிறத்தல்புரிதல்வான்முகில்கள்பெய்திடவியற்றுதல்வெ
ய்ய,மறத்தொழிறருதல்வாயுவையியக்கல்வரம்பில்பைங்கூழினையுதவ,
லறத்திறனடத்தலல்லவைபுரிதல்காலமென்றேயுயரறிவாற், றிறப்பட
வுணர்ந்தோரவற்றினைக்கடந்துதிங்கள்வேணியனுருக்காண்பார். (ரு)

காலவியல்புரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அசு.

---

## காலவளவுந்தேவாதிதேவராயுளும் பகர்ந்தவத்தியாயம்.

---

எனவுமாங்கிருந்தநாபதர்காலமெவ்வகையளவிடப்படுமென்
றினைவினிதுரைத்தியென்றலுங்கதிர்கால்சுடர்முடிவாயுநாயகனுங்
கனைவரிவண்டுவீழ்ந்துவீழ்ந்துழக்கக்கழுநீர்மதம்பொழிகாடப்[றுவல்.
பனைநெடுங்காத்தோன்றுமைதனைப்பணிந்து * பாருறவுரைக்கலுற்றனன்

உற்றவிமிடமோர்பதினைந்துகாட்டையென்றுரைத்திடப்படுமான்
மற்றவக்காட்டைமுப்பதுகலையாம்வருத்திடுங்கலையொருமுப்பான்
பெற்றிடுமுகூர்த்தமாமதுமுப்பானிராப்பகல்பின்னராங்கவையே
தெற்றெனவுணர்ந்தோரோர்பதினைந்துபக்கமாமென்றுசெப்புவரால்.

பக்கமோரிரண்டுமாதமாமதனுட்பகர்ந்திடுமபரபக்கந்தான்
மிக்கதாம்பகலாமிரவெனலாமான்மேவுறுபூருவபக்கந்
தொக்கதென்புலத்தோர்தமக்கறுதிங்களயனமாஞ்சொற்றவீரயனந்
தக்கவோர்வருடமானுடர்க்கென்னச்சாற்றுவாரறிவின்மிக்கோரே. (௩)

மானுடவருடந்தேவர்கட்கொருநாண்மாசறுவடதிசையயன
மானதோர்பகலாந்தென்றிசையயனமிரவெனவறைந்திடலாமாற்

---

* பார்-முறை.

பான்மைசால்வருடமுப்பதோர்திங்களாகுமாற்பகர்ந்திடிங்க
ளூனமிலோர்பானிரண்*டொருவருடமாகுமாலுணர்ந்துரைத்திடிலே.

முன்னிடுதேவவருடமோர்நாலாயிரமொழிமுன்வரும்யுகத்தா
னன்னதன்சந்தியாகுமாறுநூறங்கதன்கூறுமற்றதுவே
பின்னதாம்யுகமூவாயிரஞ்சந்திபேசின்மூன்னூறதன்கூறு
மின்னதேயிரண்டாயிரமெனமொழிபவெய்துமூன்றும்யுகத்தெல்லை. (௫)

ஆங்கதன்சந்தியோரிருநூறுமன்னதன்கூறுமற்றுறுரு
நீங்கலாதெய்துங்கலியுகத்தெல்லையாயிரமாகுமாணிகழ்த்தி
லூங்கதன்சந்திநூறதன்கூறுமன்னதேயாகுமாலுயர்ந்தோ
ரோங்கியசதுரயுகமொருபன்னீராயிரம்வருடமென்றுரைப்பார். (௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முறையேநடக்குஞ்சதுரயுகமெழுபத்தொன்றுமுடிந்தொருபின்
னறையுமனுவந்தரமாகுமதுதான் ‡ பதினான்கடன்சென்றிடல்
குறைவில்கற்பமெனப்படுமாற்கற்பங்குளிர்நாண்மலர்ப்பொகுட்டி
லுறையுமுகநான்குடையமறையொருவன்றனக்கோர்பகலாமால். (௭)

அதுதானேராயிரங்கடந்தாலன்றேன்றனக்கோர்வருடமா
மதியோரொண்ணாயிரம்யாண்டோர்யுகமாமென்னவகுப்பார

* இத்தேவவருடம் பத்துக்கொண்டது சத்தவிருடிகளுக்கு ஒரு வருடமும், அது பத்துக்கொண்டது துருவனுக்கு ஒருவருடமுமாம். இதனை "ஈறில் வானத் துறையமரர்க் கிசைத்த வாண்டோ ரெண்ணாற்று, மாறில் சத்த விருடிகளுக் கோராண் டாகு மருவுமது, வீறு மேவு மற்றவர்க்கு விதித்த வாண்டோர் பத்தாகில், நூறி யுயர்ந்த துருவனுக் கோராண் டாகு நவிலுங்கால்." என்னும் இலிங்கபுராணச் செய்யுளானுணர்க.

‡ பதினான்குமனுக்களாவார்:—சுவாயம்பு சுவாரோசிஷன் உத்தமன் தாமசன் இரைவதன் சாக்ஷுஷன் வைவச்சுதன் சூரியசாவர்ணி தக்ஷசாவர்ணி பிரமசாவர்ணி தருமசாவர்ணி உருத்திரசாவர்ணி ரௌச்சியன் பௌதியன்.

ஐஆறாயிரமோர்சவனமாமஃதொன்பதினாயிரங்கழிந்தா
லெதிராநின்ற * பரமாகும்யாமிங்கறியவியம்பிடலே. (அ)

மலரோன்பகலிற் † பதினான்கிந்திரர்தாமிறப்பர்மாதத்திற்
றெரிலோர்நானூற்றிருபதின்மர்வருடமொன்றிற்றெரிலைந்திடவோர்
நிலையற்றையாயிரத்துநாற்பதின்மர்நிறைந்தகாலத்துட்
குலைவாராவியஞ்சிலக்கத்தொருநாற்பதினாயிரர்குறைந்தே. (கூ)

மாயோன்பகலிலோர்மறையோன்மாய்வான்மாயோன்மாய்ந்திடுவான்
காயமழுவாளுருத்திரனோர்பகலிற்கணிச்சிமற்றவனுந்
தூயவீசுர்மகேச்சுரன்றன்பகலிலிறப்பான்சொல்லவனு
மேயவுறையுஞ்சதாசிவன்றன்பகலிலிறப்பானென்னுங்கால். (க0)

மழிமாலனந்தசதாசிவனுமாய்வான்சிவன்றனோர்பகலி
லுறைவான்சிவனேயென்றுமொன்றாயுயிருக்குயிராயுற்றோங்கி
யழிவாற்படைக்குங்காலமெலாம்பகலாமிரவுமற்றுரு
நிறையுமவனுக்கிரவுபகலின்றொளிசூழ்ந்தலன்றியே. (கக)

உலகமெனவுந்தன்னுருவாயுளைகதிர்கியுலகெல்லா
மலைவிறன்போரணையவினிதுவியாவேமாயன்முத
லலகிறேவர்தம்மாயுங்கட்டுரைத்தாயமர்சிவன்று
டலையிற்பணிவாமெனத்தாழ்ந்துதாழ்ந்துவாயுப்பரவினனால். (கஉ)

காலவளவுந்தேவாதிதேவராயுளும்

பகர்ந்ததத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉஅ.

* பாரம் - பிரமதேவரது ஆயுண்முடிவு.

† பதினான்கிந்திரர்களாவார்:— [illegible] விபச்சித்து சாந்தி சிபி விபு மனோசவன் புரந்தரன் மாவலி அற்புதன் சாந்தி விருடன் இருததாமன் திவற்பதி சுசி. விபுவை, வசு இரவி எனவும், புரந்தரனை, ஓசஸ்வி எனவும் பாடம் உண்டு.

# சத்தியாதியவ்வியத்தாந்தமுரைத்த அத்தியாயம்.

---

பரவிமுனிவர்முனம்படைக்கப்பட்டதேதங்கியாதிருதல்
விரியவிரிக்கப்படுமற்றைவிரிந்தயாவும்யாதாமா
லொருவாதொடுக்கிக்கொள்வதுதானுமையின்றெமக்குவிரித்தென்னத்
தனையேமுதலாமூலமெல்லாந்தாங்கும்வாயுச்சாற்றினன்றல். (௧)

ஆதியாயசிவனுமையிற்சத்தியுண்டாமதன்பின்னா
ரோதுமாயையுண்டாமற்றதன்பினுமைக்குமவ்வியத்தத்
தினின்றாகத்தோன்றுமாற்சேர்ந்தசத்திதனிலுண்டாங்
கோதிலதிதசாந்திபதங்குறுகுமதன்பின்சாந்திபதம். (௨)

பின்னர்வித்தியாபதமுண்டாமாற்பிரதிட்டாபதந்தான்
மன்னுமதன்பினிவிர்த்திபதம்வருமாலதன்பின்வான்முறையே
சொன்னேஞ்சிருட்டிகலையைந்துஞ்சொன்னமுறையிற்றிரிந்தவவின்
முன்னமுறைத்தசிருட்டியெலாமொருங்கேகெட்டுமுடிந்திடுமால். (௩)

அறிவொன்றில்லாவவ்வியத்தமூலககருத்தாவன்றுமாற்
செறியவறிவாற்புருடனுஞ்சொல்கருத்தாவல்லன்றிதலா
னிறையுமறிவான்மிக்குயர்ந்தமாயாதென்றானிலவியே
மறைகளுரைக்கப்படுசிவனேமாசில்கருத்தாவாகுமால். (௪)

மருவுபரார்த்தமிரண்டிறக்கில்வந்தங்கடையும்பிரளயத்தா
னுரியவாயகாரியங்கள்யாவுமொடுக்குமவ்வியத்தம்
பொருவில்புருடன்பிரகிருதியோடும்பொருந்திமற்றென்றாய்
திரிவின்றாகியுறைவனவன்றனக்குமேலாய்ச்சிவனுறைவான். (௫)

நிறையுந்தெண்ணீர்ப்பிரளயந்தானீங்கினீங்காதுறைதிலன்று
னுறையும்புருடன்பிரகிருதியிடத்தின்மாயையாலுற்றிற
குறைவில்பரிணாமத்தோடுபிரவத்தியினைக்கொடுத்திடுவான்
முறையேயதன்பினவ்வியத்தந்தன்னின்முழுதுமுண்டாமால். (௬)

உண்டாமென்றங்கத்துவாவெனைக்கும்பதியாயொருவனாய்த்
தண்டாதமர்ந்துதழைத்தபேருலகிலடங்காத்தலைவனாய்
விண்டேயலர்ந்தமலரவனுங்காணாவிண்ணோனடித்துணைக்கே
தொண்டாய்நின்றுவளிக்கிறைவன்றுதித்தேதலையாற்றொழுதனனால். எ

சத்தியாதியவ்வியத்தாந்தமுணர்ந்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-க0ரு.

---

## அந்தக்கரணநியண்டாந்தமுற்பத்தி

## அத்தியாயம்.

---

தொழுதுபின்னுஞ்சொல்லுவற்றான்றோன்றுதுறைநடவ்வியத்தத்திற்
பழுதில்புத்தியகங்காரமனமிந்தியங்கள்பாற்படவே
மொழியுந்தன்மாத்திரைகளொடுதமைவையுமுணர்த்தெழுமால்
வழுவாதேத்துமுத்தேவுமக்காலையினில்வந்துதிப்பார். (க)

வந்தேயுதித்தமூவர்க்குமாறாநின்றமுத்தொழிலுஞ்
சந்தார்புளகமுலையுமைபாடலைவனாயசிவன்றனே
நந்தாவருளாலருள்புரிவானுடையுணர்வானுந்தெரியிற்
கந்தார்களிற்றினுரிபோர்த்தவனேயெவர்க்குங்கடவுளே. (உ)

மன்னியுறையவ்வியத்தத்தின்மகத்தத்துவமுண்டாகுமாற்
பின்னேயதனின்மூவகையாமகங்காரங்கள்பிறக்குமா
லன்னமூன்றுண்முன்னைவைகாரிகமாமகங்காரந்தன்னிற்
பன்னிந்தியங்களோர்பத்துமனமுமுண்டாமெனப்பகர்வார். (௩)

தக்கதாயசாத்துவிகந்தழுவுமகங்காரத்தினிடை
மிக்கவானோனேந்தியங்களோரைந்தினுக்கும்வீறிறை
லொக்குங்கருமவிந்தியங்களோரைந்தினுக்குமனத்தினுக்குந்
திக்குமுதலாமதிட்டானதெய்வமுண்டாந்தெரித்திடிலே. (௪)

தண்டாதுறையுந்தமோகுணத்தைத்தழுவுமகங்காரத்தினின்று
முண்டாமொலியாகாயமதிலுண்டாமதனிலூறுண்டா

மண்டாதுலவுங்காற்றதனிலுண்டாமதனில்வருமுருவம் (௫)
விண்டாரதனிலனற்றோன்றுமென்பருயர்ந்தமேலோரே.

வயங்குமதனில்வந்திடுமொலிரததன்மாத்திரையதனிற்
றயங்குமொலிநீருண்டாமாலதனினாற்றந்தழைக்குமாற்
பயங்கொணாற்றந்தனினின்றும்பாரந்தேகிடந்தபாருண்டா (௬)
மியங்குகின்றநிற்பனமற்றெவையுமிவற்றிலுண்டாமால்.

புருடனொடுபிரகிருதிமேவப்பொருந்துமகான்முதலா
விரியுமண்ணேயீறாகமேவாநின்றதத்துவங்கண்
மருவுமண்டந்தனைப்படைக்குமதனின்மலரோன்வந்துதிப்பான் (௭)
றெரியிலவனேமுன்னுணசீவனென்னத்தெரிப்பரால்.

இவனேமுகநான்கினையுடையபிரமனுயுமெழில்வாய்த்தங்
குவனேயோராயிரந்தலைகளுளனுயோங்குமாலாயு
மவனேயழனேருருத்திரனுயருள்சேரைந்துமுகம்பெற்று
நவைதீர்குணங்களொருமூன்றுமுறையேயடைந்துநண்ணுவனால். (௮)

அந்தவண்டம்பதினுன்காமுலகையகத்துள்வாய்த்தமரும்
வந்தவதற்குப்பதின்மடங்காய்மறிநீர்சூழுமறிநீர்க்குச்
செந்தீயாங்கேபதின்மடங்காய்ச்சூழுஞ்செந்தீப்பதின்மடங்கா (௯)
யுந்தியுலவுங்காற்றதனையொழியாதென்றுஞ்சூழ்ந்திடுமால்.

உலவையதனிற்பதின்மடங்காயொலிசேர்விசும்புவளைக்குமா
லலைவிலதனையகங்காரஞ்சூழப்படுமாலகங்கார
மலைவின்றிமகான்சூழப்படுமான்மகானைவளைக்குமாற்
சொலவாங்குறையுமவ்வியத்தமென்றேமறைகள்சொல்லுமால். (௧௦)

இவ்வாறுயவண்டங்களநேககோடியெறிநீருட்
செவ்வேநின்றுங்குறக்காகிக்கிடந்தும்பொருந்துந்திசழ்ந்திவைற்று
ளொவ்வாதுறையுமுத்தேவுமுறைவார்மன்னியுற்றிடவே
மைவ்வார்மிடற்றுச்சிவன்புரிவானென்றேவாயுவழங்கினனால். (௧௧)

அந்தக்கரணுதியண்டாந்தமுற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧௫.

## சுவேதவராகாவதாரவத்தியாயம்.

வழங்கலோடெங்கற்பங்கண்மனுவந்தரங்கள்வந்திடையே
யெழுந்துதோன்றுஞ்சிருட்டிகளாங்கெய்துங்கொலைகளிவையெல்லாம்
விழைந்திங்கருளாலுரைத்தியெனமுனிவருரைப்பவிரிசடைமேற்
குழந்தைமதியமணிந்தோனைப்பணிந்துவாயுக்கூறினனால். (க)

முன்னாட்போனவவையெல்லாமுடியவுரைக்கிற்படனென்று
மின்னாளுள்ளவாறறியவிசைப்பாமிதுதான்வராககற்ப
மன்றுவைவச்சுதமனுநன்குறைவான்மறிநீர்வந்தெழுந்து
பின்றுவிரிந்ததிரைக்கரங்கள்வீசிப்*பெருகினிற்றதால். (உ)

உரவுத்தெண்ணீரிடைமலரோன்மாயோனாகியுறங்குவான்
பரவிச்சனலோகத்துறைவோர்பணிந்துபணிந்துதுயிலெடுப்ப
விரைவிற்றுயில்விட்டெழுந்தலகைக்காணுகிமிகப்புலம்பி
யரவச்சடையோன்றனைநினைந்தேயாழ்ந்தநிலமென்றறிந்தனனால். (ங)

அறிந்து ‡ கரியகேழலுருவெடுத்தாங்கலைநீரிடையாழ்ந்து
மறிந்தநிலத்தைக்கோட்டின்மிசைத்தாங்கிமுன்போல்வைத்திடலு
முறைந்தசனலோகத்தினுளோரொண்பூச்சொரிந்துதுதித்தனராற்
சிறந்தகேழலுருநீங்கிச்செழுந்தாமரைமேலயனானான். (ச)

அயனானதற்பின்பாதலமோரேழுமலைநீர்புடையுடுத்தே
யியலுமண்ணேமுதலொருநான்குலகுமுன்போலெழில்வாய்ப்ப
முயலுமுயற்சியாற்படைத்துமுகிழ்ந்துவீங்குமுலையுமையாள்
¶ பயலனடித்தாமரைபோற்றிப்பணிந்தேமகிழ்ந்தாங்குறைந்தனனால். (டு)

சுவேதவராகாவதாரவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉக.

---

* பெருகினிற்றது இதற்குமுந்தியகற்பமுடிவில்.

‡ இது சுவேதவராககற்பமெனப்படுதலின், கரியகேழல் என்பதற்கு வலியகேழலெனப் பொருள்கொள்க. ¶ பயலன் - நேர்பாதியன்.

# பலவகைச்சிருட்டியுரைத்தவத்தியாயம்.

மருவிப்படைக்கநினையுங்காற்றமஞ்சொன்மோகமாமோக
முறைசெய்தாமிச்சிரமந்ததாமிச்சிரமென்றுரைந்தாய்
நிறையிலவிச்சைதோன்றிற்றலவற்றினின்றவைமுதலா
விறைவிலைந்துதோன்றிற்றலிவற்றல்வீறின்றெனநினைந்தே. (௧)

பின்னும்படைக்கநினையுங்கால்விலங்கின்பெருக்குப்பிறந்ததுவான்
மன்னியதன்பின்மேலாயவானோர்பெருக்குவந்ததுவாற்
றுன்னியதன்பின்கீழாயமனிதர்பெருக்குத்தோன்றிற்று
லுன்னிலதன்பின்பேய்களொடுபூதம்வந்தேயுற்றனவால். (௨)

எவையுந்தோன்றுமுனந்தோன்றுமகத்தத்துவந்தானிதன்பின்னர்
நவையிறன்மாத்திரைகளொடுபூதநண்ணித்தோன்றுமா
லுவையின்பின்னரிந்தியங்களுண்டாம்புத்திபூருவமா
யிவைகண்மன்னும்பிரகிருதியிடத்திற்றோன்றியெய்துமால். (௩)

பின்னேநவிற்றற்காய்க்கிடந்தபெட்பார்குமரர்சிருட்டியினை
யின்னேயுரைப்பாமுகைவிரிந்தவெழிறண்மலரின்வாழ்மறையோன்
முன்னாட்சனகன்சனந்தரன்சொன்முதியவறிவார்சனாதனன்சீர்
மன்னுவுறைந்துமருவுசனற்குமாரன்றிபுவைமகிழ்ந்தளித்தான். (௪)

தோற்றுமவர்தாம்படைப்பதனைவிழையாராகித்துளிநறவ
மூற்றும்விரைகால்கொன்றையணியொருவன்றனைத்தாளுள்ளிருத்திப்
போற்றுதவத்தின்றுறையொழுகிப்பொருந்தனேக்கிப்புனைமலரோ
னாற்றல்புரிந்தான்படைப்பதற்காவழியாதாயவருந்தவமே. (௫)

புரிந்ததவத்தாற்பயனென்றுங்காணுஞகிப்புகைந்தழலச்
சொரிந்தகமலமலர்க்கண்ணீர்சொரிந்தநீரினிடைநின்றும்
விரிந்துபூதம்பலபேய்கடோன்றனேக்கிவிழைகலனாய்
வருந்திவருந்தியுள்ளாவிமாய்ந்தானந்தமலரோனே. (௬)

மாய்ந்தேகிடந்தமலரவன்றன்முகத்தின்மழுவாளவனெய்தி
யேய்ந்தேபதினேருருத்திரரைப்படைத்துப்படையினெனவியம்பக்
காய்ந்தேயழலுமழுவலத்தார்களுழ்ந்தங்கியையாதேயகல
வாய்ந்தேயவரையுருத்திரரொன்றறைந்தாரறிவான்மிக்குயர்ந்தோர். (எ)

அதன்பினிறந்தவாவியினையளித்தங்கெழுதியெனவறையத்
ததைந்தமலரோன்றுயிலேற்றங்கெழுந்தானென்னத்தானெழுந்து
துதைந்தமலர்க்கணுனேக்கவிறையோன்ருேடிக்கையாற்றடவி
முதிர்ந்தவறிவான்முன்போலப்படைப்பாயென்னமொழிந்தனனல்.அ

விரியப்படைப்பாயெனவோடும்விழைந்துமலரோன்போற்றுவான்
மருவுமணஞ்சேர்ந்தகன்றுவிரி $ மண்ணினுருவாஞ்சருவனு
யிரதமன்னித்தெண்ணீரினுருவாயுறையுமெழிற்பவனு
யுருவம்பொருந்திக்கனல்வடிவாயுற்றேயுறையும்பசுபதியாய். (கூ)

ஊருயுலவையுருவாகியொழியாதுறையீசானனு
யாருவொளியாய்வெளியுருவாயமர்ந்தேயுறையும்வீமனுய்
வீருரொளிசேர்ந்திரவியுருமேவியுறையுமுருத்திரனுய்
மாருத்திரைநீரமுதாகிமதியாயுறைமாதேவனுய். (கo)

உரைத்தற்கரியவியமானனுருவாயோங்குமுக்கிரனுய்
விரித்தற்குரியனுய்வேருய்விளம்பலாகாத்தனிமுதலாய்த்
திருத்துமறிவாலறிபொருளேசெழுஞ்சேவடிப்போதென்றலைமே
விருத்தியாள்வாயெனப்பரவியிறைஞ்சிப்படைக்கலுற்றனனல். (கக)

தகைசாறருமன்சங்கற்பன்மரீசிபிருகுத்தனிமறைகள்
புகனுவுடையவங்கிராப்போற்றுநின்றபுலத்தியன்சீர்
நிகரில்புலகன்கிரதுவொடுதக்கனிகழ்த்துமத்திரியோர்
துகளில்வசிட்டனெனுமிவரைத்துலங்கியுறையப்படைத்தனனல். கஉ

---

$ பிருதிவியைப் பவனெனவும் அப்புவைச் சருவனெனவும் கூறுவதும், பஞ்சப்பிரமவட்டமூர்த்தமுரைத்தவத்தியாயத்திலே அருளியவாறு கூறுவதும் உண்டு.

பொன்னார்கமலமலர்முகத்திற்புத்தேளிரையும்புயங்கடமின்
மன்னுவுறைதென்புலத்தவர்கடைமையும்வரம்பிலசுரர்தமைப்
பின்னும்புறத்துங்குறியதனின்மக்கடமையும்பெட்போடு
துன்னுமிகவுமகிழ்ந்துறையத்துகளின்முகப்படைத்தனனால். (௧௫)

அந்தகாரத்திடைநின்றுமழனேர்வெய்யவரக்கரையும்
பைந்தாரணியுமியக்கரையும்பண்டோர்ந்துறைகந்தருவரையுங்
கொந்தாரழல்போல்விரிகுஞ்சிக்குறுத்தாட்பூதகணங்களையுந்
தந்தானிதமோராயிரஞ்சூழ்தண்ணங்கமலத்துறைவோனே. (௧௬)

பரிவொன்றில்லாத்தன்வயத்தபறவைகளையும்பசுந்தாமம்
விரைகான்மார்பிற்செம்மறியாட்டினையும்வெள்ளாட்டினைமுகத்தும்
பொருவில்வயிற்றுமிருவிலாப்புடையும்பொருந்துபசுக்களையு
மிருதாள்களினும்யானைமுதல்விலங்காமெவையும்படைத்தனனால். (௧௭)

வல்லிகிழங்குமயிர்களினுங்கீழ்பான்முகத்தின்முதன்மறையுஞ்
சொல்லுமிரண்டாமறைதென்பான்முகத்துமேல்பாற்சுடர்முகத்தின்
மல்லன்மூன்றாமறையினையும்வடபான்முகத்தினான்காய
வெல்லையில்லாமறையினையுமெச்சங்களையும்வகுத்தனனால். (௧௮)

படைப்போன்மெய்யிலுலகங்களெவையும்படைத்தான்படைத்தவற்று
மடுத்தேயுறையுமுயிர்வருக்கமுன்னாட்கற்பங்களில்வாய்ப்ப [ன்
வடுத்தேசெய்தகருமங்களெவையுமந்தவாதனைக
டொடுத்தேயிந்தக்கற்பத்துந்தோன்றப்புரிந்துநின்றிடுமால். (௧௯)

முன்னாட்கற்பங்களில்வகுத்தபடியேமுளரிநான்முகத்தோன்
மன்னுநின்றகற்பங்கடமிலுமுறையேவகுத்திடுவா
னிந்நாளெய்தும்பருவம்போலெய்தும்பருவமெவைகளினுந்
துன்னுநிற்கும்பலவும்போற்றோன்றவெடுத்திங்குரைத்திடிலே. (௨௰)

மன்னப்படைத்தமலரவற்குத்தலைவான்வாயுமுகமாகுந்
துன்னுகதிர்காலிரவிமதிகண்களாகுஞ்சூழ்திசைகள்
கன்னமாகுந்திரைவேலைகவினவுறைகண்ணகன்ஞால
மன்னமுயர்த்தவாங்கவனுக்கறைபொற்கழற்காலாகுமால். (௨௧)

அன்றேநான்முகத்திலருமறையோருதித்தார்தோளிலரசர்வந்தார்
மன்னுந்தொடையில்வந்துதித்தார்வணிகர்வாசமலர்த்தாளிற்
பின்னையுதித்தார்பின்னவர்கள்பெட்பவுணரினெஞ்ஞான்றும்
பொன்னேரவன்றன்மேனியினிலுண்டாமெவையுமெனப்புகன்றான். ()

பலவகைச்சிருட்டியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கசாக.

## பிரமவிட்டுணுவுற்பத்தியத்தியாயம்.

உருவத்தடந்தோள்களின்மாலையணைப்படைத்தவுருத்திரன்றன்
மருவுங்கமலத்தோன்முகத்தில்வந்தவாறுவழங்குகெனப்
பொருவற்றுயர்ந்தமாமுனிவர்புகலவிந்தமன்னேனும்
விரியப்பகர்ந்தவானேனுந்தாங்குமவைவிளம்பினனால். (க)

மறைநான்முகத்தோனுரையாமுன்கேட்டோங்கேட்கவருத்தபடி
யறைவாமழியாமகேச்சுரன்றனிடத்திலமருமூவர்களு
முறையேயுதித்தாரவர்கண்முன்னியொருவர்தமையொருவர்
நெறியாற்படைக்கவேண்டுமெனநிகழ்த்தற்கரியதவம்புரிந்தார். (உ)

புரியாவத்தமகேச்சுரன்றன்னருளாற்கடைந்துபுகன்றவரு
ளெரிநேர்மேனி * யுருத்திரனாயிருவர்தமையும்படைத்தனனன்

* திரிமூர்த்திகளுள்ளே ஒவ்வொருவரும் மற்றிருவரையும் படைப்பரென்பதையும், திரிமூர்த்திபரன் சிவபெருமானேயென்பதையும் "அறுக்குமோர் கற்பத் தயனொரு கற்பத் தரியொரு கற்பத்தி லரன்றான், பிறப்பனுன் பான்மற் றிருவரை முன்னோன் பெற்றளித் திடுவன்மற் றிதனால், உறப்பெறு முயர்ச்சி தாழ்ச்சிக ளொருவர்க் குள்ளதோ வில்லையென் றிவ்வா, றிறப்புறு மறைகண் முழுவது முணர்ந் தோ ரியம்புவ ரெம்பெரு மானே." எனவும், "தேவர்மூ வருக்குந் தலைமையொப் புமைதான் செப்புக வன்றிமற் றிவருண், மேவரு மேலோ னுருத்திர னெனத்தான் விளம்புக வெந்தவா றேனும், காவல நீயே யாவர்க்கு மேலாங் கடவுளென் பதுபெரு வழக்கே, யோவுறு தலைமெ லாம்பணி செய்யு மொருவனீ யாகினின் றனையே." எனவும் வரும் சிவதத்துவவிவேகச் செய்யுட்களானு முணர்க.

மருவார்மலரோனிருவரையும்படைத்தாரென்றுகான்மாயவனும்
பரிவாலரனைநான்முகத்தோன்றன்னொடொருகாற்படைத்தனனால். ௧

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மருவவிர்கொன்றைமாலைதாழ்செய்யவார்சடையண்ணலைமுன்றொட்-
டிருமறுமார்பன்மேகமாய்வருடமாயிரஞ்சுமந்தனன்றிரியப்
பரவிவானவர்கள்கற்பகநறும்பூத்தூவியேபணிந்துமற்றதனைப்
பொருவறுமேகவாகனகற்பமெனநனிபுகன்றனரன்றே. (௨)

மகிழ்ந்ததன்பின்னர்மதிமுகிழணிந்தோன்மணிநிறமாயனுக்கன்பாற்
றிகழ்ந்திடப்படைக்கும்வகையெலாமறியத்தெருட்டினன்றெருட்டவு
லகைந்தபூந்துளபமாலைதாழ்மோலியண்ணலுமகமகிழ்ந்தன்றே [மறிவொ
முகைந்தலர்விரிந்தமலரவனோடுமுலகெலாமுறையினிற்படைத்தான்.

மன்னியமறையோன்மாயனைநோக்கியென்றனெம்பிரானுல
கைத், துன்னிடப்படைத்தலுணர்ந்தனனுமையாள்பங்கினனருளொ
த்துணிந்தே, பொன்மலருந்திநின்றனேமுலகைப்படைப்பல்யான்புரு
தரவென்று, மின்மலர்சடையான்பொன்னடிநினைந்துமேதருதவம்புரிந்
தனனால். (௩)

புரிதலுமந்தத்தவத்தினுக்கிரங்கிப்பொன்னெடுங்குன்றினைவாங்கி
வரிசிலையாகவளைத்தவன்வரலுமலரவன்வணங்கிநின்வலப்பாற்
பரிவுறவுதித்தேன்யானினதிடப்பாற்பங்கயக்கண்ணனுதித்தா[ன்.
னிருவருளவனேயுலகொடுமென்னைப்படைத்திடவிசைத்ததேயென்று

என்றுநீயவனோடுலகெலாம்படைக்கும்வகையினையெனக்கருளெ
ன்ன, மன்றலங்கோதைபங்கினனகத்தாப்படைப்பெலாம்வகுத்திடவழ
ங்கி, நின்றுயர்கயிலைநெற்றியேறினனெழில்விரிபசும்பொனுய்மலர்ந்த,
துன்றிதழ்க்கமலப்பொகுட்டில்வீற்றிருப்போன்சுடர்முடிமாயனைய
டைந்தான். (௪)

அலையெழவிரிந்தபாற்கடனடுவணலர்கதிர்ப்பரிதியோடிகலி
மலைவுறுமிருளைவாங்குபுவிழுங்கிமலர்கதிர்திசையெலாம்பரப்பி

நிலைபெறவமர்ந்தவிமானமூடமர்நெருங்குபுசூழ்ந்தாங்கின்றிறைஞ்சப்
பலகலைவிரிக்குநஞ்சுமிழ்பருவாய்ப்பாப்பணைப்பள்ளியின்மிசையே. ௯

விட்டொளிர்மகுடகோடிபல்கோடிவெங்கதிர்ப்பரிதியின்விளங்க
வட்டவாய்த்திகிரிவலம்புரிசார்ங்கம்வயங்குசெங்கழலுமிழ்வடிவா
ளட்டயிருண்ணுங்கதையெனப்புகலுமண்ணலைம்படைபுறங்காப்ப
வெட்டெணிரண்டாந்திசையிருள்கீறியிலகொளிப்பொன்னுடைதிகழ.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பத்திப்பைம்பூண்மணிமார்பின்மிளிரப்பசுந்தேனுடைந்தொழுகத்
தொத்திக்கிடந்தந்துளபத்தொடையற்றடந்தோண்மிசைத்துவள
முத்திற்பொலிந்தமுன்னெயிற்றுமுளரிப்பொருட்டுமடமாதுந்
தத்துதிரைநீர்மண்மகளுந்தளிர்மென்கரத்தாற்பதம்வருட. (௧௧)

அழிபாயோகத்துயில்புரியுமவ்வேறுடைத்தவலர்மலரோன்
மொழிவானென்னைநீவிழுங்கிமுன்றோட்படைத்தல்செய்தாய்வாய்
வழியால்விழுங்கியாறுமுனைப்படைப்பேனென்றுமாயவனை
விழைவால்விழுங்கிப்புகுவதனைத்தனிநின்றுவிட்டனனால். (௧௨)

என்றகாலைநெஞ்சுருகியேத்துமன்பரல்லார்க்குத்
தோன்றாமுதல்வன்றிருடித்தோன்றிநின்றவனைநோக்கிக்
கான்றவொளிசேர்மலர்மறையோன்கண்ணேறுமடிவணங்கி
யான்றவறிவாற்றுதித்திடலுமண்ணலருளிமறைந்தனனால். (௧௩)

பிரமவிட்டுணுவுற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௩௪.

---

## உருத்திரோற்பத்தியத்தியாயம்.

---

மறைத்தாயென்றுவாயுமுதல்வருத்துவழங்கலுற்றனனாற்
சிறந்தகமலத்தோன்முன்னம்படைக்குந்தொழில்கடெரிகலனு

யுறைந்தேயுயிர்த்துமிகவாடியுருகியயரும்வகைநோக்கித்
துறந்தோருணருஞ்சிவனருளாத்தோன்றுநின்றானுருத்திரனே. (க)

ஒருங்கேயோராயிரம்பரிதியுதித்தென்னவொளிகான்று
திருந்தாநின்றதிருமேனிதிகழவெயிற்றிற்றீயவிடஞ்
சொரிந்தேயழலும்படநாகஞ்சுற்றித்தடந்தோள்களிற்கிடப்பக்
கரிந்தேதோன்றுமிடறிலங்கக்காதிலரவக்குழைதிகழ. (உ)

முன்னம்பிறந்தமால்பிரமன்றலைகண்மூவாயிரங்கோடி
பொன்னந்தடந்தோள்களுமார்பும்பொலியப்புதுநாண்மலர்சிந்திப்
பின்னுந்திரைபாய்கங்கைநதிப்பெருக்கிற்கீற்றுப்பிளவுமதி
மன்னியலையுண்டீர்ஞ்சடிலமவுலிமிசையேமறைந்தொளிர. (ங)

வடவையுமிழுங்கண்ணுமுழைவயதளாற்பொலிந்தவட்டுடைமேற்
படவெஞ்சினத்தபொறிநாகக்கச்சுவயங்கப்பாற்கடல்வாய்ச்
சுடுநஞ்சுமிழுமுத்தலைவேல்சுடர்பொற்கமலக்கரத்தொளிர
வடுவெங்கூற்றினுயிருண்டவம்பொற்கழற்காலழகெறிப்ப. (ச)

கயிலைவரைபோல்விடையேறிக்கண்மூன்றுடையோன்றோன்றுதலுஞ்
செயலற்றிருந்தநான்முகத்தோன்சென்றுமலர்த்தாள்பணிந்தேத்தப்
புயல்பற்றியபூங்கூந்தலாள்பங்கன்பொருவிறனைப்போல
மயலற்றொழியவிறவாதுமன்னியுறைவோர்தமைப்படைத்தான். (ரு)

படைப்பப்பிறப்போடிறப்பின்றிப்பரிவற்றுறைவோர்தமைப்படையேல், கடுத்தாழ்மிடற்றோயெனவணங்கக்கண்மூன்றுடையோனிவ்வாறிங், கடுப்பதன்றாலெமக்குநீயவ்வாறியற்றுகெனவியம்பி, விரைந்தேபடைப்பைமுனம்படைத்தோரோடும்விளங்கியுறைந்தனனால். (சு)

உருத்திரோற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசo.

# உருத்திரன்வெளிப்படுமத்தியாயம்.

உறையுமலரோன்படைத்தனனாங்குப்படைத்தபடைப்பெல்லா
நெறியேமலிந்துவளர்ந்திடாவகைகநோக்கிநெய்பூட்டு
கறைவேலெனெடுங்கண்மகளிர்தமைக்கலந்தேபடைக்கவேண்டுமென
நறைதாழ்கூந்தல்பங்கினனைநினைந்துநவைதீர்தவம்புரிந்தான். (௧)

தவநன்காகப்புரிந்திடுதற்கிரங்கித்தன்றோடலகிலாப்
புவனமெவையுமோர்வயிற்றிலீன்றாளிடப்பாற்பொலிந்திலங்கக்
கவனவிடையின்மீதேறிக்கடவுண்முதல்வன்றோன்றுதலு
மிவனேயெனையாளுடையானென்றிறைஞ்சியிறைஞ்சித்துதித்தனனால்.

மன்னியெவர்க்குமாதேவனாவோய்நின்னைவணங்குவா
முன்னியறியுமகேச்சுரனாமுதல்வாநின்னைத்தொழுதிடுவா
மன்னைநிகர்க்குங்கலியாணியாவோயடித்தாமரைதொழுவா
முன்னிலெவைக்குமூலமாயுறைவோயுனதுதாள்பணிவாம். (௩)

உறையுமாயையுடன்கூடியுறைவோய்நின்னைத்தொழுதிடுவா
நறைதாழ்மாலைமுடியமரர்நாடுமுதலேவணங்கிடுவா
நிறையுமுலகமெவற்றினுக்குந்தாயாய்நின்றோய்நினைத்தொழுவா
மறையுமந்தலையுருவாயமருமணங்கேயடிபணிவாம். (௪)

அழியாமுதலாயென்றுமமர்வோயறைபொற்கழல்பணிவாஞ்
சுழிவெண்டிரைபாய்கங்கையணிசுடர்பொற்சடையோய்தொழுதிடுவா
விழைவாலான்மாமூன்றினையும்*விளக்குமுமையேநினைப்பணிவாம்[ம்
வழியாருளான்மற்றவற்றைப்புரக்குமயிலேவணங்கிடுவாம். (௫)

நோக்காலுலகமெவற்றினையும்படைப்போய்தொழுவாநொடிவரையிற்
றீக்கான்றதனையெரிந்துவிடச்செய்வோய்செம்பொற்கழல்பணிவா
நீக்காதுலகெல்லாமன்னிநிறையுங்கொம்பேநினைத்தொழுவா
மாக்காநின்றதத்துவங்களுடையவணங்கேயடிபணிவாம். (௬)

உருத்திரன்வெளிப்படுமத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௬௬.

---

* விளக்குமென்பதூஉம் பாடம்.

## மகளிருற்பத்தியத்தியாயம்.

என்றுதுதிப்பக்கயிலைவரையிருப்போனிடப்பான்மெனிமெலா
மொன்றியுறையுமுமையவளைப்பிரிந்தான்பிரிந்தங்குற்றிடலு
நின்றமுதல்விதனைவணங்கிநிகரிறக்கன்புதல்வியாய்ச்
சென்றுபிறக்கவேண்டுமெனச்செழுந்தாமரைமேலயனுரைத்தான். (௧)

உரைப்பவெவர்க்குந்தாயாகியுறைவாள்புருவத்திடைநின்றும்
விருப்பாலொருபொற்கொடியளித்தாளவளைநோக்கிவிரைமலர்மே
லிருப்பான்சொன்னபடிநிற்றியென்றங்குரையாவிறைமுதல்வன்
மருக்கால்கூந்தல்வல்லியொடும்வடவான்கயிலைசென்றடைந்தான். (௨)

வடிக்குஞ்சுடர்கான்மழுவலத்தோன்வலப்பாலுதித்தமறைமுதல்வ
*னொடிக்கச்சுடர்கால்குருமணிப்பூணொளிமென்கூந்தன்முனமெய்தி
யடிக்கீழ்வணங்கித்தக்கனுக்குப்புதல்வியாகியடைதியெனத்
தொடித்தோளவளுமற்றவற்குப்புதல்வியாகித்தோன்றினளால். (௩)

அன்றுமுதலாவளிபாடியலர்த்தவரும்புமுகைவெடித்த
மன்றல்கமழும்பசுந்தொடையல்வயங்குமார்பத்தெழின்மாத்தர்
பொன்றுஞ்சிளமென்முலைமடவார்ப்பொருந்திக்கலந்துதருபவை
நின்றுபெருகிநிறையுமெனநிகரிறவத்தோர்நிகழ்த்துவரால். (௪)

முறையேபகர்ந்தவிக்கதையைக்கேட்போர்முழுதுமுரைசெய்வோ
ரிறவாப்புதல்வர்தமையீன்றிங்கெந்நாள்களினுமின்புற்றே
யுறைவாரென்னவேயியம்பியுலவைவேந்தனொழிவின்றி
மறையோர்நான்கும்வழுத்துபுகழ்மழுவாளிறைவனடிபணிந்தான். (௫)

மகளிருற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௭௧.

* ஒடித்தல் - ஒளிசெய்தல்.

# பிரமவமிசவுற்பத்தியத்தியாயம்.

மழுவாளிறையவனடி பணிந்தவாயுமுதல்வன்வழங்குவான்
றழைநாண்மலரோன்சுவாயம்புமனுவுக்குச்செய்யதளிர்போல
வெழில்சேர்மேனிச்சதரூபையென்னுமனைக்குமாதியே
விழைவாலிருகூறாய்ப்பிரிந்தான்விண்ணோரொருவரும்வியப்புறவே. (௧)

மருவாரலங்கற்சுவாயம்புமனுவின்மணித்தோள்வளைபுல்லி
பரிசேர்நெடுங்கட்சதரூபையென்னுமம்பொற்கொடியிடையாள்
பிரியவிரதனுத்தானபாதனெனும்பேர்ப்புதல்வரையு
முறையாகூதிபிரசூதியெனுமாதரையுமுவந்தளித்தாள். (௨)

அலங்கலொளிர்வேற்சுவாயம்புமனுவாங்குறையாகூதியினைப்
புலன்கள்வழிபோகாவளத்தூவுருசிக்களித்தான்பொற்கொடியுங்
கலந்தாங்கவனைமெய்ச்சனையுங்கன்னிக்கவின்கமருங்கசைத்த
நலத்தேசர்வனப்பார்தக்கனையானங்கைத்தனையுநயந்தளித்தான். (௩)

பிறைபோனுதலாள்பிரசூதிதன்னைப்பெரியதக்கனுக்கு
முறையேயளித்தான்வையகனைமேகிற்றனின்குவணமுலையுங்
கறைவேலகற்றிக்குமிழ்மறித்தகண்பொற்குழைபாய்கருநெடுங்க
ணறவேர்கூந்தலிருபத்துநான்குமகளிர்தமையளித்தான். (௪)

எழிலார்சிரத்தைதிருதிதுட்டிபுட்டிமேதைதந்§யிலக்குமியைங்
கழைபார்தடந்தோட்கிரியைபுத்திகன்னற்றுதலையிலச்சைவபு
மழைநேர்கூந்தற்சாந்திசித்திகீர்த்தியெனும்வாட்கண்ணியரை
யழியாதோங்குதருமனுக்குமுறையேயன்புற்றளித்தனனால். (௫)

கன்னற்றுதலைக்கியாதியினைப்பிருகுமுனிக்குங்கவின்சதியைப்
பொன்னாருஞ்சடிலத்துருத்திரற்கும்பொருவிலெழிற்சம்பூதியினைப்
பன்னுமறைதேர்மரீசிக்கும்படைக்கண்பிருதியென்பாளை
மன்னியுறையுமங்கிராவென்பான்றனக்குமகிழ்ந்தளித்தான். (௬)

---

§ இலக்குமியை இரண்டாவது மனைவியாக்கி ஏனையவை முறையேகொள்க.

பூத்தகொடி நேர் * பிரீதியினைப்பொருவின்மறைதேர்புலத்தியற்குங்
கூர்த்தவடிவேல்விழிக்கமையைக்கோதின்றுயர்ந்தபுலகனுக்கு
மார்த்ததொடையற்சந்ததியையாசொன்றில்லாக்கிரதுவுக்கு
மேத்துமெழிலாரனசூயைதனையத்திரிக்குமினிதளித்தான். (௭)

மைந்நேர்கரியகுழலூர்ச்சையென்பாடன்னைவசிட்டனுக்கும்
பைந்நேரல்குற்சுவாகையினைப்பைந்தாரழலின்கடவுளுக்கும்
பொய்ந்நேர்மருங்குற்சுதைதன்னைப்பொருந்தியுறைதென்புலத்தவர்க்கு
மெய்ந்நேரறிவாலுயர்தக்கன்விண்ணோர்புகழவளித்தனனால். (௮)

தருமன்மனையார் $ காமமுதற்றுவிலாதயசசீறும்
பொருவில்பதின்மூன்றையுமெவரும்போற்றிமகிழவீன்றனரா
லுமைசெய்கின்றவதன்மத்தினுரவுத்தடந்தோளிங்கிசைதான்
மருவிநிகிர்திமுதலாயநால்வர்தம்மைமகிழ்ந்தளித்தாள். (௯)

சதிதன்றுதையாகியுறைதக்கன்சடைமேற்பிறைசூடும்
பதியாமிறைவன்றனையிகழ்ந்தபான்மையதனூற்றனதுள்ளங்
கொதியாவெழுந்துவெள்ளருவிகுளிர்முத்தெறிந்துகுதித்தொழுகு
மதிதோய்குடுமியிமவான்றன்மகளாய்வந்துதோன்றினளால். (௧௦)

பிருகுவென்பான்மனைவியாங்கியாதியெனச்சொல்பெண்ணணங்கு
கரியகூந்தலிலக்குமியாங்கன்னற்குதலைக்கன்னியையு

* பிரீதியைப் புலகருக்கும், கமையைக் கிரதுவுக்கும், சந்ததியைப் புலத்தியருக்கும், மனைவியாகக் கூறுவதும், சந்ததியைச் சன்னதி யெனப் பாடம் ஓதுதலும் உண்டு.

$ காமமுதலியன:—காமம் தர்ப்பம் நியமம் மகிழ்ச்சி இலாபம் சுருதம் தண்டம் சமயம் போதம் அப்பிரமாதம் விநயம் விவசாயம் க்ஷேமம் சுகம் யசசு எனப் பதினைந்தாகவும், இவற்றுள் தண்டம் சமயம் என்பனவற்றைக்கிரியையும், போதம் அப்பிரமாதம் என்பனவற்றைப் புத்தியும், மற்றையர் தனித்தனி ஒவ்வொன்றையும் ஈன்றனவொனவும் இலிங்கபுராணத்தும் கூர்மபுராணத்தும் கூறப்பட்டுள்ளன.

முறைசெய்தாதாவிதாதாவென்றுறையும்புதல்வரிருவரையு
மரியதவங்கண்மிகவாற்றியன்பால்வயிறுவாய்த்தனளால். (௧௧)

மரீசிமனையாள் * சம்பூதிவயங்குமெழிற்பௌரணன்றனையும்
விராயமலர்பெய்கூந்தலார்நால்வர்தமையும்விழைந்தளித்தாள்
பராயதவவங்கிராவுக்கு†மிருதிபரதனொடுமுயர்வா
னுரியபுகழாக்கினித்திரனைமகளிரொருநால்வரையுயிர்த்தாள். (௧௨)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புலத்தியன்மனையாள் ‡ பிரீதியென்றுரைக்கும்பொற்கொடிபொருவறுசிறப்பார், நலத்தருதவத்தினகத்தியன்றன்னைநவையறவளித்தனண்மும்மை, மலத்தினையறுத்தபுலகனன்மனையாள்கமைகருத்தமன்மதன்றன்னொ, லலைப்பருங்குணத்துச்சயிட்டிணுவோடுமருவரியானிவர்ப்பயந்தாள். (௧௩)

பொறையினாலுயர்ந்தகிரதுவென்றெவரும்போற்றருந்தவத்தினிற் சிற
மறுமறுபன்னிமாங்குயிற்குதலைமதிநுதற்சந்ததியென்பா [ந்தோன்
ளறைதருவாலகில்லியரொன்னுமறுபதினாயிரர்தம்மை
நெறியினிலளித்தாளிரவியைச்சூழ்ந்துநெடுவிசும்பியங்குவரிவரோ. ௧௪

அத்திரிமனைவியாமனசூயையறைந்திடுசத்தியநேத்திரன்சொன், மெய்த்தவம்புரியும்பவ்வியனொடுபோமூர்த்திமெய்தெரிந்திடுசனீச, னெத்திசையேனும்விளக்கிடுசோமனெனுமிவரைவரோடெழில்சேர், தத்தரிநெடுங்கட்சுருதியென்றுரைக்குந்தாழ்குழலணங்கையுமுயிர்த்தாள். ௧௫

---

* சம்பூதிபுத்திரிகள் துட்டி திருட்டி கிருட்டி அபசிதி.

† மிருதிபுத்திரிகள் குகு சினீவாலி இராகை அநுமதி.

‡ பிரீதியினுடைய புத்திரர் தத்தோத்திரி எனவும், இவரே சுவாயம்பு மநுவந்தரத்திலே அகத்தியராக அவதரித்தனரெனவும் வடமொழிப்புராணங் கூறுகின்றது.

பழுதறுதவத்தான்மிக்குயர்ந்துறையும்வசிட்டமாமுனிவரன்பன்னி, தொழுதகுகற்பி * யூர்ச்சையென்றுரைக்குந்துணர்மலர்க்கொம்பரன்னவடான்,மழைமதர்நெடுங்கட்புண்டரீகையெனும்வாணுதன்மடந்தை தன்னையுமால், விழைவறவமரும்புதல்வரோரெழுவர் தம்மையுமேதகவளித்தாள். (௧௩)

ஆரழன்மனைவியாகியசுவாகையமர்ந்துறைபாவகனோடு
மேர்பெறவிளங்கியியல்பவமானன்சுசியெனுமிவர்களையீன்றுள்
காருமிழ்மின்னினனலிபாவகனுமரணியிற்கனல்பவமானன்
சூரியனிடத்தினழலினைச்சுசியென்றுரைப்பராற்றுகளறவுணர்ங்ஙேரார்,

அறைந்திடுமூவர்தங்களுக்கடைவேயவ்வியவாகனோடமூன்று
சிறந்திடவுறையுங்கவ்வியவாகன்றிகழ்சகரக்கனென்றுரைக்கு
முறைந்திடுமூவருதித்தனரிவர்தாமுயர்ந்திடுதேவர்தென்புலத்தோர்
மறந்திகழசுரரிவர்களுக்கழலாய்மன்னியேவரன்முறையுறைவார். ௧௪

இயம்பியவிவர்தம்மரபுதித்திரண்டோடிருபதிற்றிரட்டிசெந்தழல்கள்
வயங்கியேயுறையுமவற்றினின்முறையேமாசறவவியினைச்சொரியிற்
புயங்கமெண்டோளும்புனைந்துறைகின்றபுரிசடையண்ணலுவந்தளிப்
பயன்படுமதனாற்பழவினைமுழுதும்பற்றுவிட்டகன்றிடுமென்றே. (௧௫)

சுதையெனுமணங்கு † தென்புலத்தவர்க்குத்துணைமுலையிருவரையீன்
மதிநுதலவருண்மேனையாமணங்குவயங்கியவான்புயமருவி [றன்

* ஊர்ச்சையின் புதல்வராவார்:—இரசன், காதரன், ஊர்த்தவாகு, சவனன், அநகன், சுதபா, சுக்கிரன்.

† இவரே பிதராவெனப்பட்டு இருவகைப்படுவர். இதை "உரைத்திடுமக் கினிச்சுவத்த ரொனுந்தேவர் பிதிர்க்களுநீ ருலப்பில் சீர்த்தி, நிரைத்தவரு கிடதரொனு மானுடர்தம் பிதிர்க்களுநன் னெறியை யூரது, முருக்கிதழ்மென் சுவதைதுணை முலைமுகடு புயந்தழைப்ப முயங்கிச் செய்ய, திருக்கிளர்மே னையைத்தூய வைதரணி தனையெயுஞ் சிறப்பவீன்றார்." என்னும் கூர்மபுராணச் செய்யுளானுணர்க.

யெதிரின்மைமந்நாகமுயர்கிரவுஞ்சமொடுமெழில்வாய்த்தகங்கையினைத்
றைதமலர்க்கூந்தற்பூங்கொடியன்னதளிரடியுமையினைத்தந்தாள். (௨௦)

தரணியாமணங்குமேருவைமணந்துதகைபெறவுயர்ந்தமந்தரத்தை
நிரைவளைமகளிர்மூவரைப்பயந்தாண்மூவருணிகழ்த்துமாடியியு
மரிதவழ்நெடுங்கண்குழைபொருதலைக்குமணிமுலைநிடியியாமணங்கும்
பிருகுவின்புதல்வராகியதாதாப்பின்விதாதாவினைமணந்தார். (௨௧)

வண்டிரைத்துறையுமறுமலர்க்கூந்தல்வேலையாம்வருமுலைமடந்தை [ள்
தெண்டிரைக்கடலைப்புணர்ந்துசாவன்னியெனுமகடனைச்சிறந்தளித்தா
ளிண்டவழ்புகழ்சேர்தருபிராசீனபருகிச்சின்விழைப்புயமணந்து
தண்டலில்பிரசேதசெனவுரைக்குந்தாவில்சீர்ப்புதல்வரைப்பயந்தாள்.

ஈங்கிவர்தமக்குமலரவன்புதல்வனாகியேயியைந்திடுதக்கன், மாங்கு
யிற்கினவிமலைமகள்பங்கன்முனிவிறல்வந்துதித்தனனு, லோங்குயர்பிர
மன்மரபினையெல்லாமுணர்ந்திடவிரித்துரைத்தனமாற், றேங்கமழ்தொ
டையலரசர்தம்மரபைத்தெள்ளிதிற்றெரிந்திடத்தெரிப்பாம். (௨௨)

அறைகழலிக்குவாகுவோடம்பரீடன்விண்டலர்மலர்த்தொடைய
னறைகமழ்தடந்தோளொயாதிவார்கழற்கானகுடனுநாமவேளுழவர்
செறிகதிர்ப்பரிதிமதிமரபுதித்தவேந்தரீங்கிவர்வழிதெரிக்கி
லுறுபயனுளதேயுமையொருபாகன்கதையினையுறவிரித்துரைப்பாம். ()

பிரமவம்சவுற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௩௫.

---

## தேவிதக்கன்முதலியோரைச்சபித்து அவதரித்தவத்தியாயம்.

---

என்னனுந்தக்கன்புதல்வியாமடந்தையெழிலிமவான்மகளாகி
மன்னியவாறுந்தக்கனம்மிறையையிகழ்ந்ததுமீசன்வைதுரைப்பப்

பின்னவன்மனிதனாகியேவந்துபிறந்ததும்பேசுதியென்று
பன்னருந்தவத்துமுனிவர்களுரைப்பவாயுவும்பாற்படவுரைத்தான் (௬)
முன்னைநாளுயர்ந்தகண்ணகன்விசும்பின்மூளைத்தெழுகற்பகநீழன்
மன்னியாங்குறையும்பாகசாதனனேமுதலியவானவர்யாரு
மென்னநாளேனுமியற்றியபாவம்யாவையுமிரிந்துகெட்டோட [தார்.
வன்னமீதுயர்த்தோன்காண்கலாமுதல்வனமர் தருமிமையம்வந்தடைந்

கலித்துறை.

வெள்ளியங்கிரிக்கோட்டினின்மேவலனாகி
யுள்ளருந்தனிக்கடவுளிங்குறைந்தனனென்று
வள்ளிக்கொள்ளலாமானந்தமிக்குயரிமவான்
வள்ளிதழ்ப்பொலிமலர்க்கணீர்வாரவைகிடுமால். (௧)

இடைவிடாப்பொழிபனியினால்வெண்ணிறமேய்ந்து
நெடியவானகமுருவிமேனின்றுயர்வரைக்கீ
ழிடிசெய்மைம்முகில்கிடத்தலேர்வெள்ளியங்கிரியி
னடியுறக்கிடந்தார்த்திடுமரக்கனைநிகர்க்கும். (௨)

மின்னிவிட்டொளிர்மணிபலவிளங்குறநிரைத்த
பொன்னங்கோட்டுயருச்சியிற்பொழிகதிரிரவி
மன்னித்தோன்றுதல்வயங்கொளிமணிசெய்பொன்முடிமேற்
றுன்னுசெங்கதிர்ச்சுடர்மணியெனத்தனித்தோன்றும். (௩)

கரியமைம்முகில்பிடிதருகயந்தலைக்கன்றோ
டெரிநிறச்சிலாதலமிசைத்தவழ்ந்துசென்றேற
விரிகதிர்ப்பிறைக்குழவியோடியக்கியர்விருப்பா
ருருவின்மிக்குறைகுழவியுமுடன்றவழ்ந்துறையும். (௪)

சுடர்ந்துவீழ்குளிரருவிதோய்துடியடிக்கன்று
நடுங்கினின்றிடல்கண்டுமென்பிடிசென்றுநண்ணி
யொடுங்கப்புல்லுதலோடரித்தடங்கணுறநோக்கி
யிடைந்தநுண்ணிடையரம்பையரிளநகைபுரிவார். (௫)

விரியுஞ்சேயொளிவிடுசுடர்விளங்குபாறையின்மே
லுருவநீலவொண்மணிபலவுற்றுறக்கிடத்த
லெரியும்வெங்கனன்மன்னியேயிடையிடைகிடக்குங்
கரியின்பான்மையையொத்துறத்தோன்றுமாற்காணில். (அ)

சூழ்த்தபூந்தொடைக்கின்னரர்துணைவியரோடுங்
காழ்த்தகாமமேற்கைம்மிகக்கலந்திடற்காக
வீழ்த்தகார்நிறத்துகிலெனலாருமால்விரிந்து
தாழ்த்தமைம்முகின்முழைதொறுந்தவழ்ந்துதோன்றுவதே. (௯)

பண்ணிசைக்குலப்பருமணிவண்டினம்விடாத
வண்ணநாண்மலர்மதுத்தழைவயங்குபூங்க
ணண்ணனம்முழையெய்தினனெனவணிவரைமேல்
விண்ணகந்தொடவிரித்திடுகம்பலநிகர்க்கும். (௧௦)

தவ்வளமுத்தெறிதண்புனலருவிகடூங்கல்
கவளயானையினுரிபுனைகண்ணுதலொருபா
லவளொடுங்கலந்துறைந்தனனென்றுயரடுக்க
லுவகைவெள்ளம்வார்ந்தொழுகியதொத்துளதன்றே. (௧௧)

நண்ணுகாரிருட்போதினிற்காதலர்நண்ணி
வண்ணமேகலைபற்றறுமணிவிளக்கெடுப்பப்
பண்ணுலாவியபணிமொழியியக்கியர்வெள்கித்
தண்ணந்தாமரைத்தண்டளிர்க்கரத்திறுற்றடிப்பார். (௧௨)

இன்னதாகியவிமையநீண்முகட்டிலேழ்நிலைத்தாய்
மன்னுமாடமொன்றுளதில்வாய்த்தமண்டபத்திற்
பின்னுவார்சடைகட்டியபெருங்கணத்தலைவர்
பொன்னந்தாமரைப்பூநிகர்சேவடிபோற்ற. (௧௩)

அசும்புபொன்னிறப்போர்வையாங்ககற்றியாழ்பண்ணி
விசும்புளோரொலாம்விழைந்திடவிண்ணுயர்வரையுங்

கசிந்துவார்ந்திடக்கற்பகக்கனிபடுதேத
மிசைந்துதும்புருநாரதனோடிசையெடுப்ப. (கச)

எங்குமின்னிசைக்குழலொடுமுழவெழுந்தொலிப்ப
வோங்கிநின்றுயரொளிமணிவரைகளோரிரண்டு
தாங்கிநின்றவோர்வல்லியிற்றளர்ந்துநேர்ந்தொசிந்து
வாங்குநுண்ணிடையரம்பையர்வட்டணைபோக்க. (கரு)

நோக்கிவானுயர்வடவரைப்பசும்பொனுனித்தாங்
காக்கிவைத்ததோர்மடங்கலாசனத்தினினம்பொன்
வீக்குவார்முலைமுதல்விதான்விழைந்திடப்பாலி
னீக்கலாதொளிர்மின்னெனநிலவிவீற்றிருப்ப. (கசு)

குடிலைநின்றிறையுண்மையைக்குறித்தறிந்துரைப்ப
வடைவினுன்மறையறைகழலடியிணைபோற்ற
நடையறிந்தமாமுனிவர்கணவையிலாகமத்தைக்
கிடையறத்தனியுணர்ந்துநின்றேத்தொலிகிளர. (கஎ)

வெள்ளைவாணிலாவொழுகுவெண்ணீறெடுத்தணிந்து
வள்ளலாங்குறைசெவ்வியில்வணங்குநந்தி
யுள்ளிநின்னருள்வானவருற்றனரொன்னார்
தள்ளிவெம்மிறையருளினுற்றருநியென்றுரைத்தான். (கஅ)

மாதுபாகனல்லருளினுல்வாயில்சென்றெய்தித்
தாதுசேர்தொடைவானவர்தங்களைநோக்கிப்
போதர்வீரெனப்புகுந்துபூங்கோதையோடிறையு
மாதிவானவனடியிணைதொழுதுநின்றனரால். (கக)

நின்றவானவர்நிழலுமிழ்ந்திலங்குபொன்முடிமேன்
மன்றலந்தொடைநந்திகைம்மணிப்பிரம்புழுத்தித்
துன்றிடாவகைநீக்கினனீக்கலுந்துணர்த்தார்க்
கொன்றைவேணியனருளினைக்குறித்தனர்சூழ்ந்தார். (உo)

சூழ்ந்தவர்க்கெலாம்விடையினிதருளிநந்தொல்லோன்
றாழ்ந்தவார்குழையணங்கொடுங்கோயிலுட்சார்ந்தா
னாழ்ந்தபேருணர்வொன்றிலாத்தக்கனாழ்நரகில்
வீழ்ந்துபோவதற்காகியேயுளமிகவெகுண்டான். (உக)

உற்றவானவர்தம்மொடுமொருவனையென்னை
மற்றிங்கெண்ணினர்புதல்வியுமருகனுமென்னாக்
கற்றைவார்குழலவளொடுங்கண்ணுதலோனைப்
பற்றறத்தணந்தொருதனிவேள்விபண்ணினனால். (உஉ)

பண்ணுறுங்காலையினுனுநிடைபதைத்திடவீங்கும்
வண்ணவார்முலைப்புதல்வியரோடுமற்றவர்தோ
ணண்ணுறுங்காதலர்யாரையுநகைமுடியணிந்த
வண்ணல்வானவரெவரையுமழைத்தனனடைந்தார். (உ௩)

வந்துளோர்க்கெலாம்வான்முறைமுகமனன்கியம்பிச்
செந்தழற்கவிசொரிந்திடல்கண்டுநீந்தொடையா
ணந்துநாரதனொருமுதலவனுழையெய்தி
யிந்தவாறெலாமிறைவியைத்தொழுதனனிசைத்தான். (உச)

தொழுதிசைத்ததுகேட்டலுஞ்சுடர்நுதல்வல்லி
குழவிவெண்மதிபுனைந்தவன்குரைகழல்வணங்கிப்
பொழிகதிர்ப்பசும்பொன்னினுற்பொலிவுறவமைத்த
மழைமுகட்டியன்மணிமிளிர்விமானமேறினளால். (உரு)

ஆயகாலையிலணிமுகமவிழ்ந்ததாமரைப்பான்
மேயவோரிரண்டன்னம்வீழ்ந்தெழுவனபோல
வேயமென்கொடியிறைவிவான்முகத்திருமருங்குங்
காயும்வேல்விழிமடந்தையர்கவரியாலசைத்தார். (உசா)

வட்டவெண்மதிவான்முகச்செவ்விகண்டஞ்சி
விட்டகன்றுபோய்நின்றெனவிரிகதிர்முத்த

முட்டிகழ்ந்தவோர்குடையிணையொளிர்மலர்க்கரத்தாற்
கட்டுவார்முலைச்சுமாலினிகாண்டகவுயர்த்தாள். (௨௭)

தூயவாணகைச்சுபாவதிருதுநன்காடி
நாயகிக்குளமகிழ்தரவுறைந்தணைந்தி
மேயநன்மனைக்கிழத்தியாஞ்சுயசைவெம்முலைமேற்
சேயபொன்னடிச்செருப்பிணைச்சேர்த்துபுகின்றாள். (௨௮)

அலங்குபூணினுக்கழகுசெய்யாயிழையொருத்தி
யிலங்குபொன்னிறவடைப்பைதாங்கினளிருகுழைபோய்
மலங்குவாள்விழிமதிமருள்வாணுதலொருத்தி
துலங்கிநின்றொளிதாங்குகண்ணாடிதாங்கினளால். (௨௯)

கதிருமிழ்ந்திடுகலனிறைபேழைகைப்பற்றி
மதியமன்னதோர்வாணுதலொருத்திநின்றனளாற்
றதைமலர்த்தொடை*மூழிகைப்பற்றியோர்தையல்
பொதியவிழ்ந்தலர்பூத்தபூங்கொடியெனநின்றாள். (௩௰)

கிள்ளைபாடிடவேந்தினளொருத்திகேழ்கிளரும்
வெள்ளியாலியலாலவட்டம்வினைந்தெடுத்தாள்
புள்ளிமான்விழியொருத்திமற்றொருத்திபொற்கரத்தாற்
றெள்ளுதீந்தமிழ்த்தென்மலைச்சாந்தமேந்தினளால். (௩௧)

இன்னணந்தனிமருங்கிலாரிருபுடைசூழ
மின்னணங்கிடையிறைவிதன்குறைவதுவிரிவான்
மன்னுதாரகைசூழ்தரமதியமன்னிடுத
லென்னதேயெழிலன்னதேயாகுமாலியம்பின். (௩௨)

முரசங்கண்ணதிர்ந்தார்த்தனமுடக்குவெண்டிரைபாய்
விரியும்பாற்கடல்வெண்ணிறச்சங்கம்விம்மினவா
லெரிபடைக்கலமேந்தியெண்ணாயிரங்கணங்க
ளுருவத்தோன்வலிமிக்கெழவொலித்துமுன்னடந்த. (௩௩)

* மூழி - பூங்கூடை.

யொன்றுடம்பினைமாயையாலொழித்திமவானுக்
கன்றுசெய்தவப்பயத்தினற்புதல்வியாயடைந்தாள். (சo)

அன்னவாறுகண்டாற்றியவேள்வியிற்கமைந்து
மன்னுமந்திரம்யாவையுமறைந்தனவந்து
துன்னிநின்றுளோரொவர்களுந்துளங்கினர்துளங்க
வின்னவாறெலாமிணர்மலர்க்கொன்றையோனுணர்ந்தான். (சக)

உணர்ந்துசாக்குடனெனுமனுவந்தரமுற்றுன்
மணங்கொடார்ப்*பிரசேதச்சுவென்பவர்மகனாய்க்
குணங்களொன்றிலாத்தக்கநீகுவலயமதனி
லணங்குநெஞ்சுடைமனிதனாய்வருதியென்றறைந்தான். (சஉ)

அறைந்துமற்றவன்புதல்வியர்மகிழ்நராமவரை
மறங்கொண்மானவேற்றடக்கைவைவச்சுதமனுவாங்
குறைந்தகாலையின்மலரவனுஞற்றுவேள்வியினிற்
பிறந்துவைகுதிரென்றுவைதுரைத்தனன்பெம்மான். (சங)

ஆயகாலையிற்றக்கனீயழகுறவன்பா
லேயவாற்றிடுதருமமற்றியாவையுமிரிந்து
மாயுமாறுசெய்திடுவெல்யாளென்றனன்மறங்கொள்
காயுமூவிலைச்சூலவேலேந்துகண்ணுதலே. (சச)

என்றுமற்றவர்பிறந்துநன்கியற்றிடுதரும
மொன்றிடாவகையழித்தனனெனவுரைத்திடலுங்

*பிரசேதச்சு என்பவர் பதின்மரொன்பதாமுதலியவற்றை "களி
க்கும் வேந்தரொருபதின்மர் கலந்து கடவு ளருங்கற்பிற், றுளிக்குந்
தேன்றூர் நறுங்கூந்தற் றுவர்வாய்த் தீஞ்சொன் மாரிடையாங், களித்
தாள் தக்கன் றனைமகவா யெனவு மவனீண் டுதித்தெவன், றெளித்
தீண் டுரைத்தி யெனலோடுந் திருமாலதனை யுரைசெய்வான்." என்
னும் கூர்மபுராணச் செய்யுளாலறிக.

துன்றுமாதவராங்கதுதுன்பறவெமக்கு
நன்றுகூறெனவாயுவுநவையறவுரைத்தான். (௪௫)

தேவிதக்கன்முதலியோரைச்சபித்து
அவதரித்தவத்தியாயமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-௨௪௦.

---

# பார்ப்பதிதிருமணமும்வீரபத்திராவதாரமும்
## உரைத்தவத்தியாயம்.

---

விரியும்வார்கடனஞ்சமுதாக்கியமிடற்றோன்
கரியபூங்குழற்றேவியைப்பிரிந்துளங்கலங்கிப்
பரிவுகொண்டதுமற்றவடனைப்பரிவகல
வரியநன்மணஞ்செய்ததுஞ்சிறிதெடுத்துரைப்பாம். (௧)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எட்டுணைப்போதும்பிரிவதற்கஞ்சியெழிலிடப்பாலெலாமிமைய [மே
வொட்டிநன்குறையுமொட்டுவிட்டகன்றேயுறைந்திடற்குருகிடாதுற
விட்டலர்ந்தறுகாலளவறுகோடிவீழ்ந்துவீழ்ந்தழக்கிவாய்மடுப்ப [னே.
மட்டுவார்ந்தொழுகுபொன்னிதழ்க்கடுக்கைமாலைதாழ்மௌலிவானவ

னெரியழனடுவண்மெய்குளிர்ந்தாடமழுவலானெரிதிரித்தன்ன [சி
புரிசடைவைத்தவெண்பிறைக்கொழுந்துபொழிநிலாச்சூட்டினுக்கஞ்
வெருவினனென்னிற்கலையெலாநிறைந்தவெண்மதிச்சூட்டினைவிரிய
வுரைசெயற்பாற்றோமலரவனுள்களாயிரஞ்செல்லினுமுணர்ந்தே. (௩)

அடிமலர்த்துணையுநுணுகுநுண்ணிடையுமம்பகட்டிளமுலைத்தடமும்
வடிநெடுங்கண்ணுங்கரியமைக்குழலும்வள்ளைவாட்டியவடிகாது [ந்
மொடிவறங்கையும்பதைக்குமுள்ளுருகுமொலிகனலெனவுயிர்ப்பெறியு
கொடிதறமென்னுமலமருமேங்குங்குழைந்திடுமுளமயல்கூரும். (௪)

வடவரைகுழைத்தமாபெருவில்லிமதனனோர்வாய்த்தபூங்கரும்பின்
முடுசிலைகுழைக்குஞ்சுடிகணையேவிச்சுட்டிடுந்தொல்லைநாமிழைத்து
படுபகைதீர்க்குங்களித்திடுநகைக்கும்பணைப்புயம்வரையெனவீங்கு
மடுகொலைக்கென்னிற்சிறந்தவர்யாரென்றுரைத்திடுமெனவயர்ந்திடுமால்.

பொன்வரைமருட்டித்திணிதடந்தோளிற்பூட்டியபொங்கழலனை,
மன்னிநின்றுயிர்க்குமுயிர்ப்புமெய்சூழ்தல்வாலிதென்றேமகிழ்ந் துறை
வோன், றென்வரையுயிர்த்தகுளிரிளந்தென்றல்சிறிதுமெய்தீண்டுதற் கு
ஞ்சி, யென்னையாஞ்செய்வதெனவுளங்கலங்கியிருந்தனனெழுந்தனன்றிரி
ந்தான். (௫)

திரிந்தனன்கரியமுகில்சுவல்சொரியச்சேணுயரிமையமால்வரை
க்கு, வருந்துநுண்மருங்குன்மலரணிகூந்தற்புதல்விபாய்வந்தனை துயுணர்
ந்து, விரிந்தலர்மலரோன்றனைமகட்பேசவிடுத்தனன்விரைந்தவனிசை
ப்பச், சுரந்தபேரருளாற்கொடுப்பதற்கிசைந்தோர்தூமணிமண்டபம்
வகுத்தான். (௬)

பாணிறப்பளிக்குத்திண்ணைநன்கியற்றிப்பாய்கதிர்ப்பரிஇருஞ்சோதி
மேனிவந்தோங்குவடவரைப்பசும்பொற்பலகையால்விரிநிலம்படுத்து
தானணிவிளங்குமரகதத்திணிதூண்டகைபெறநிறுவிமற்றதன்மே
லானநல்வயிரமழகுறப்பரப்பியணிந்தொளிர்போதிகைகொளுத்தி. ()

கலிவிருத்தம்.

வாளொளிநிலாக்கதிர்மாய்க்குமுத்தணி
*நாளொடுபெயரியநவையிலாமர
நீளுறக்கிடத்திவானிவந்துபோதருங்
கோளுறநீலவொண்பலகைகூட்டியே. (௮)

விண்டொளிர்வெள்ளிவெண்சுவரியற்றிமேல்
வண்டுணக்கற்பகமலர்செய்மாலையுங்

* நாளொடுபெயரியமரம் - உத்திரம்.

கண்டிரண்முத்தமுங்கலந்துதூக்கிவான்
கொண்டெழவகிற்புகைகுழுமிவிம்மவே. (௧௦)

விண்ணுறுவீழ்ந்திருந்தெனவியப்பமிக்கொளிர்
வண்ணவான்மண்டபமியற்றிமற்றதி
னுண்ணிகழுவகையாலோங்கல்வேந்தனம்
மண்ணறன்வரவுபார்த்தமர்ந்துளானரோ. (௧௧)

ஆயதோர்போதினிலமரர்போற்றிடக்
காய்கதிருமிழ்படைக்கணங்கள்சூழ்தரச்
சேயதோர்வரைதிகழ்கயிலைசேர்ந்தெனப்
பாய்விடையேறிநம்பரமனெய்தினான். (௧௨)

எங்கணாயகனவணெய்திவைகலுங்
கங்கையானாறுறக்கங்கைநீரினைச்
செங்கையான்மணிக்குடத்தேந்திச்சேடிய
ரங்கலுழ்மேனியையாட்டினார்களே. (௧௩)

மணியறைந்தனையமீன்கூந்தல்வார்ந்துபே
ரணிபெறத்திருத்திமட்டழிந்துவள்ளிதழ்ப்
பிணியவிழ்பூந்தொடைசூழ்ந்துபெட்புற
விணர்மலருகுத்ததாதேந்தித்தாவினார். (௧௪)

கருநிறமறுவுடைக்கதிர்செய்வெண்பிறை
திருநிறச்சேயொளிமறுவைச்சேர்ந்தென
வெரிநிறச்சிந்துரங்குழைத்தங்கேர்பெற
வரிநிறநுதலின்மேல்வாய்ப்பத்தீட்டினார். (௧௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காதுவடிவேலைமிளிர்ந்துகனபொற்குழைமேற்சென்றுபொரு
மாதர்மழைக்கணிணைமுடிவளவுங்கரியமைபோக்கித்
தீதிலெழில்சேரோர்காதிற்செம்பொனோலைபடச்சுருக்கிச்
சோதிமணிசேர்குண்டலமோர்காதிற்சுடரவைத்தனரால். (௧௬)

கழைத்தோட்கேற்பக்கழையெழுதிக்கனிந்துதிரண்டவிருள்கிழிந்
தழைக்குங்கதிர்கான்றொளிர்பதுமராகத்தோடுதனிவயிர
மழுத்துபசும்பொன்வளைசேர்த்திமயிர்வார்முன்கையழகெறிப்பக்
கொழிக்கும்வயிரேரியத்திழைத்தகோலவளையுஞ்செறித்தனரால். (கஎ)

கொட்டுசாந்தநறுங்கலவைகுளிரவேந்தியடிபரந்த
வட்டமுலைக்கண்மணிமுத்தவாரங்கிடந்தவகைநோக்கிக்
கெட்டதிடையின்றெனத்தாயிரங்கிக்கேழ்த்தபசும்பொனொளி
விட்டுமிளிருங்கலைசேர்த்தியதன்மேன்மணிமேகலைவிரித்தார். (கஅ)

விசும்பிலயிராவணப்பகட்டின்வீசுகரம்வீறற்றொழிந்தே
யசைந்துதூங்கத்திரள்குறங்குக்கணியாய்*மகரவாய்சேர்த்திப்
பசும்பொனணிபாடகம்பரட்டின்மிசையேயொளிரப்பருமுத்த
மிசைந்தவரிபெய்சிலம்பேற்றியெழில்சேராழிவிரற்கணிந்தார். (கசு)

இவ்வாறணிந்துசேடியர்களடியீடிசைப்பத்தாமரைப்போ
தொவ்வாவடிகள்குஞ்சித்துப்பதைப்பவணிச்சமேலொதுங்கி
மைவ்வான்முழக்கின்முரசொலிப்பவளையார்ப்பெடுப்பமலர்வானோர்
செவ்வேதூவமலைவல்லிசெழும்பொன்மாடஞ்சேர்ந்தனளால். (உ௦)

சேர்ந்தகாலைநான்மறைகளொலிப்பச்சேண்போம்வரைக்கிறைவ
னார்ந்தவன்பாற்புதல்விதனையழல்சான்றாகவளித்திடலும்
வார்ந்தசடிலநாயகனுமலைவாழ்வல்லிகைப்பற்றித்
தீர்ந்தங்கொழியாவன்பினொடுஞ்செந்தீவலம்வந்தான்மன்னோ. (உக)

வந்தவேலைமணிமுழவம்வானஞ்செவிடுபடவார்த்த
வுந்துதிரைநீர்வலம்புரிகளொருகோடியினுமேலொலித்த
வந்தணறுங்கற்பகப்போதுசொரிந்தங்கண்பால்வானவரும்
பந்தமறுத்தமுனிவர்களும்பணிந்துபணிந்துபோற்றினரால். (உஉ)

---

* மகரவாய் - ஒருகூறு கிம்புரிவடிவாயிருக்கும் ஓராபரணம். இது மகரிகையெனவும் குறங்குசெறியெனவும் பெயர்பெறும்.

மலரோனொடுமாயவனும்வலப்பாலிடப்பால்வந்தெய்தித்
தலையான்மறையின்முடிபுனையுந்தடந்தாமரைப்பொற்றாள்வணங்க
வலையாவன்பின்மிகுதியாலண்ணலணிபூங்கோதையொடு
நிலையாவுயர்ந்தவிமையவரைமுகட்டினிலவியுறைந்தனனால். (௨௩)

கலித்துறை.

உறைந்துபற்பலவுகங்கள்சென்றிறந்ததற்பின்னர்
மறங்கொள்வேற்பிரசேதசுமகிழ்தருமகவாய்ப்
பிறந்துநன்குறைதக்கன்வைவச்சுதனெனப்பேர்
சிறந்துவாழ்மனுச்செய்யகோல்செலுத்திடுநாளில். (௨௪)

உரியமுத்திசென்றடைவதற்காகவுற்றுணர்ந்த
வரியமாதவரமர்ந்த*கங்காத்துவாரத்திற்
றரையின்மிக்குயர்கனகலமெனுந்தலமதனிற்
புரவிமேதநன்கியற்றுவானெண்ணினன்புகுந்தான். (௨௫)

புகுந்தகாலையிற்பூத்தொசிகற்பகநீழற்
றிகழ்ந்தவாசவன்முதலியதேவர்கள்யாரு
முகிழ்ந்தவார்முலையரம்பையரொவருமுந்நீரோ
மகிழ்ந்தமாயவனொடுமவியருந்துவான்வந்தார். (௨௬)

வந்துவைகலுந்ததீசிமாவடைவயிற்சீறி
யந்தகாரமேயடைந்தநெஞ்சொடுமெறிவின்றி
முந்தியாங்குறைதக்கனைநோக்கிமுன்னைய
வெந்தைதன்னையென்னினைவாங்கிலையென்றிசைத்தனனால். (௨௭)

இசைப்பமற்றவணியம்புவானேறுகைத்தேறும்
வசைக்கணீங்கியமாபதினோருருத்திரர்க
ளசைத்தவாளராவொடுமமர்ந்தனரிவரன்றி
விசித்தசெஞ்சடையுருத்திரனெவன்விளம்பென்றான். (௨௮)

* கங்காத்துவாரம் - அரித்துவாரம்.

என்னவாற்றிருலிசைத்தனையிஃதெனுமுனிவன்
மன்னுகின்றவிம்மாசறுவேள்விக்குமுதலா
முன்னவன்றனைப்பூசியாதொழிந்துமுன்னல்லாப்
பின்னவர்க்கெலாம்பூசனைபேணிலென்பயனே. (௨௯)

பங்கயத்தயன்முதலினோர்தமையெவன்படைத்தா
னங்குறைந்திடுபகுதியோடமர்புருடனுக்குந்
துங்கமாகியேசுடர்ந்துநன்குறைபவன்யாவ
னிங்கவன்றனையறிவிறுற்பணிந்திடலியல்பே. (௩0)

வாவுதெண்டிரைத்துயில்புரிமாயனேடியாரு
மேவுமேவலினியங்கிடச்செய்பவன்யாவ
னேவின்மாதவமுனிவராலுணர்பவன்யாவன்
மூவின்மற்றவன்றன்னையேதாழ்ந்திடன்முறையே. (௩௧)

கண்ணிற்கண்டவைகண்டிடப்படாதவையெவையு
மெண்ணிற்றன்னுருவாகவேயிருப்பவன்யாவ
னண்ணுமாதியோடந்தமிலாதவன்யாவ
னண்ணியாங்கவன்றன்னையேநாந்தொழல்கடனே. (௩௨)

அறையும்க்கரமாகிமேலமர்பரம்பொருளாய்
முறையின்முத்தொழின்முனிவறச்செய்பவன்யாவ
னெறியின்மற்றவன்றன்னையேநிகழ்த்துவேள்வியினிற்
குறைவில்பூசனைவரன்முறையாற்றுதல்குணனே. (௩௩)

என்னவாடகப்பசும்பொனுலியன்றபாத்திரத்திற்
றுன்னியீங்குறையவியினைக்கொடுப்பல்யான்றலங்க
மன்னுவேள்வியின்மாயனுக்கென்றிசைத்திடலு
முன்னம்வந்தெழுவெகுளியின்மும்மடிவெகுண்டான். (௩௪)

வெகுண்டுதக்கநீமேதகவியற்றியவேள்வி
நகர்ந்துமாய்ந்துகெட்டழிந்துபோகெனக்கொடுஞ்சாபம்

புகன்றெழுந்தும்புரிசடையண்ணலைப்போற்றித்
திகழ்ந்துதானுறைசாலையிற்சென்றுசேர்ந்தனனால். (௧௫)

மன்னவிவ்வகையியன்றிடுசெயலெலாமதித்துக்
கன்னனேர்மொழியுமையவள்கடவுளைவணங்கி
யின்னநாளினிற்றக்கனிங்கியற்றிடுவேள்வி
தன்னையொன்றறவழித்தியென்றிரந்துசாற்றினளால். (௧௬)

சாற்றவாயிரந்தலைகளுமாயிரந்தடந்தோ
ளாற்றன்மிக்கெழுகால்களோராயிரமமைந்து
தோற்றிநின்றிடவீரபத்திரன்றனைத்தொடர்ந்து
பாற்றினஞ்சுழன்மூவிலைப்படையினோன்படைத்தான். (௧௭)

படைப்பமற்றவன்பணிதலும்பரமனுங்கவனை
யெடுத்துநோக்குபுகனகலமெனுமிடமதனி
லடுத்துநன்கிலாத்தக்கனங்காற்றிடுவேள்வி
துடைத்துநம்முழையெய்துதியென்றுசொற்றனனால். (௧௮)

வரைமடந்தையுமாசறுதன்னுளம்வெகுண்டு
கரியகாளியைப்படைத்துநீகாசறுவெள்ளை
விரியுமேனியிவ்வீரபத்திரனுடனேகிப்
புரியும்வேள்வியைச்சிதைத்தியாலெனப்புகன்றனளால். (௧௯)

காமன்வெந்திடக்கனல்படவிழித்தகண்ணுதலோ
னுமுமேதகுரயிப்பியனவையிலாச்சிரமம்
வாமமேகலையுமையவளொடுமவண்மன்னி
யோமவேள்வியையொன்றறவழித்தல்காண்குவமால். (௨௦)

என்றகாலையிற்சூலம்வேலெழுமழுத்தண்டு
வென்றிவாள்கனபரிசைவில்வெதும்புவாய்த்திகிரி
துன்றுபோர்வலிக்கரங்களிற்பற்றிவிண்டொடுத்து
நின்றமால்வரைநடந்தெனநேடியேகினனால். (௨௧)

எரும்வேலையின்மயிர்முதலுறுப்பினின்றெரிகா
ளுகமொத்துறவழன்றுமால்வரைநவிறிணிதோண்
மாகமூடுறவளர்தருகணங்கள்பல்கோடி
வேகமிக்கெழப்படைத்தனன்விரைந்தவைசூழ்ந்த. (௬௨)

சூழ்தலும்பசிதப்பிரியனென்பவன்ருெக்க
பாழிமொய்ம்பிறைப்பனிமதிக்குடையுயர்த்தனறு
லாழிசூழுலகஞ்சிடுமாற்றல்சாலிருவர்
வாழியென்றுளிர்வாணிலாக்கவரிவீசினரால். (௬௩)

நின்றமாபெருநீள்வலிக்கணங்களின்றலைவர்
துன்றுபோழல்பிதிர்ந்தெனத்தூங்கலங்குழைய
கன்றுவெஞ்சினமடங்கன்மேற்கொண்டுகண்ணழன்று
வென்றிவாள்கொடுவிறன்மிகுவீரன்முன்னடந்தார். (௬௪)

முழவதிர்ந்திடவெழுந்தவான்முகையவிழ்நறும்பூ
மழைபொழிந்திடப்பானுகம்பன்வளைமுழக்கக்
குழவிவெண்மதிபுனைந்தொருவிடையின்மேற்கொண்டான்
கழியுமற்றவன்வேள்விசெய்சாலைசென்றடைந்தான். (௬௫)

பார்ப்பதிதிருமணமும்வீரபத்திராவதாரமும்
உரைத்தவத்தியாயமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-௨௬ரு.

---

## தக்கன்யாகமடைந்தவத்தியாயம்.

---

அடைந்துநின்றபேரண்டம்விட்டுதிர்ந்திடவதிர்ந்து
தடங்கண்மாயவனெடுமுறைதக்கனைநோக்கி
மடந்தைபாகனைமறந்துநீவருத்திடும்வேள்வி
நடந்துசென்றதோநன்கிவணவில்கெனநவின்றான். (க)

நவின்றியாவருந்தொழுதிடுநம்மிறைபாக
முவந்துதந்திடப்பெறுதியோவல்லதுன்றவி
யவிந்துபோதியோவாவதிங்கறையெனலோடுங்
கவன்றனெஞ்சுடைத்தக்கன்மற்றிதுகழறினனால். (உ)

உன்னிறைக்கொருகூறிலையுளதெனவீங்கு
மன்னுநான்மறையுரைத்திடல்வழங்குவலென்று
சொன்னவாசகங்கேட்டலுந்துகளிறன்மறைக
ளொன்னையீங்கிவைபடுகின்றனையென்றுநின்றிசைக்கும். (௩)

அறிவிலாயினைத்தக்கனென்றேயறைந்திடுதன்
முறையதன்றுமுக்காலமுமுதல்வனுமுறையு
மிறைவன்பாகநீயளித்திலையீங்கியாமன்னி
யுறைதநீதெனப்பிரமன்வாழுலகமுற்றனவே. (௪)

உற்றகாலையினுடன்றுயர்சாலைகளெல்லா
முற்றும்வெந்திடமுனிந்துகண்ணழலிறெரித்தான்
சுற்றும்வெங்கணநாதர்வானவர்களைத்தொடர்ந்து
பற்றிநின்றயூபத்தினிற்பதைப்பயாத்தனரால். (௫)

இடித்துவேதிகையேற்றியகுழிசிமற்றவையு
மடித்தடித்துறப்பொடிப்பொடியாக்கியாரொலிகோ
லொடித்துவெள்ளியிற்புரவியையோங்குயரடுக்க
ளெடுத்துவார்ந்திழிகங்கைநீர்ச்சுழியிடைமடுத்தார். (௬)

சொரிந்தசோற்றுமால்வரையெலாமுண்டனர்சுவையாய்
விரிந்தநற்றசையானையும்விழுங்கினர்விழுங்கிப்
பரந்துநெய்யொடுபால்வழிபடுதிரையாற்றைத்
திரிந்துநோக்கிவாய்மடுத்துறவுண்டுதேக்கெறிந்தார். (௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முழங்குவானத்திடைவாழ்வீர்மொத்தையாட்டின்றசையுண்ண
வழுங்காதடைந்தீரத்தசையோவிதுவோசுவைத்திங்கறைதிரெனக்

குழங்கன்மாலைத்திணிதடந்தோளீர்ந்துகொண்டதசையெல்லாம்
விழுங்கவிட்டுக்கணநாதர்விண்ணுடைதிரநகைப்பரால். (அ)

ஈட்டுபசியால்விமிசையவடைந்தீர்வம்மினெனவிழுத்துத்
தீட்டுகதிர்வேன்முடியமரர்செவ்வாய்நெரித்துத்திக்கொள்ளி
மாட்டிமாட்டாதவர்மார்பில்வடிவேலோட்டவழிகுருதி
மோட்டுமுதுநீராகுகிமுழங்கியெழுந்துபரந்ததால். (௯)

கலித்துறை.

காளிவானவர்மகளிர்தங்கதிர்முலைத்துணையுந்
தோளுநாசியுங்கூந்தலுஞ்சுடர்மணிக்குழையும்
வாளின்வாயினலரிந்துவாட்டடங்கண்மற்றவரைத்
தாளிணைனுறவுதைத்துதைத்தேதளர்வித்தாள். (௧௦)

தளர்ந்தமங்கையர்தாமகிழ்கணவரைத்தயங்கி
விளங்குபூணணிகுமரரைவிரைமினேவந்து
வளைந்துகொண்டதுபேய்க்கணமென்றுவாய்புலம்பித்
துளங்குநெஞ்சொடும்விழிபுனல்சோர்ந்தலமருவார். (௧௧)

மட்டுவார்தரவரம்பையர்வடித்தவார்கூந்தல்
கட்டினேடரிந்திடநிலங்கிடத்தல்கார்க்கடன்மேற்
றொட்டவேற்றிறற்சுடர்முடிவழுதிமுன்சுளியா
விட்டகாற்றளையொடுமுகில்கிடந்ததையேய்க்கும். (௧௨)

ஈர்ந்துவீழ்த்தியவார்குழைமீதுறவிலங்கி
யார்ந்தநீலவொண்மணிபலவழகுறத்தோன்றல்
வார்ந்தவள்ளையங்கொடிமிசைமணிநிறவண்டு
சேர்ந்துபற்றியங்குறைந்திடல்கடுக்குமாற்றிசழ்ந்தே. (௧௩)

தக்கன்யாகமடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உ௯அ.

# தக்கன்யாகமழித்தவத்தியாயம்.

ஆயகாலையில்வீரபத்திரனழன்றெழுந்து
காயும்வேல்கொடுகடிமலர்நாறுதண்சுனையைப்
பாயுமாகளிறுழக்கியதெனப்பலதேவ
ரேயபல்குழுக்கலங்கிடவிடித்துழக்கினனால். (௧)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

படுமதஞ்செருக்கிமுகிறவழ்கோட்டுப்பானிறக்கயிலையிற்றிகழு
மிடுமணியயிராவதத்தின்மேலிருந்தவிமையவர்கோன்முனமெய்தி
யடுகொலைத்தண்டாற்புடைத்தலுமெய்யிலணிந்தவோராயிரங்கண்ணு
முடனுதிர்ந்திடலுநின்றநூலச்சையொத்துயிர்தளர்ந்துவாடினனால். (உ)

எட்பகவாகவாரழற்கடவுண்மெய்யினைவாளினாலீர்ந்து, மட்கிடமண்ணினிடையினிற்கிடத்திவலிகெழுகையினையறுத்துக், கொட்குமாகடலின்மடுத்துறவெதும்புகொழுஞ்சுடர்தண்ணெனக்குளிர்ந்து, வெட்கிடச்செய்துநின்றபேரண்டம்வெடித்திடநகைத்திடுமாதோ. (௩)

கலித்துறை.

கூற்றினுக்கொருகூற்றம்யானென்றிடுங்கூற்றை
யாற்றன்மிக்கெழவங்கையாற்பற்றுபுபிழிந்தாங்
கூற்றியுள்ளுயிரொன்றறக்குடித்துவெற்றுடலை
நாற்றிசைக்கணுமெறிந்தெறிந்தேநடந்திடுமால். (௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இடியெனமுழங்கிநின்றநிருதிதோளீர்ந்துவாளாற்
றெறுகொடிற்கிறைவனுந்திதொட்டகழ்ந்தெடுத்துக்கொண்ட
குடர்நெடுமாலைசூடிக்கூளிகள்பலவுஞ்சூழ
வடிபெயர்ந்தாடியாடியகமகிழ்ந்தார்க்குமன்றே. (௫)

கலிவிருத்தம்.

முறித்துமெய்யினைமூச்செறிகாற்றினைற்
§ பறத்திவாயுவைப்பாவுதிரைக்கடன்

§ பறத்தி - பறக்கச்செய்து.

மறித்துமற்றவன்சேனையைவாளிறு
லறுத்துவீழ்த்தியழலவிழிக்குமால். (௯)

கறுவிப்பற்றிக்குபேரனைக்கச்சிறு
விறுகவீக்கியிருபெருந்தோளையுங்
குறவன்பற்றுங்குரங்கெனக்கோதிலா
வறிவுமாழ்கனின்ருட்டிமகிழுமால். (௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வடிநேர்தடங்கணுண்மபாகன்றன்னைநினையாதேமறந்து
நெடியோன்ருளேபொருளென்றுநினைந்துவிரிந்தநூலெல்லா
மடியோடவற்றின்முடியளவுமாராய்ந்தாவிகளைப்படுக்குங்
கொடியீர்தவத்திரல்லீர்களென்றுகுழைடமோதினனுல், (அ)

உருவப்பசும்பொனணிப்பேழையொளிகான்முத்தஞ்சொரிவதெனப்
பரிதிச்செவ்வாயுள்ளணிந்த * பல்லங்குதிர்ந்துவிழப்புடைத்திட்
டருகேயிருந்தவோர்பரிதி † தடங்கண்விரலினுலகழ்ந்து
விரியுங்கதிர்கால்வெண்மதியைமிதித்துக்கழற்கால்கொடுதேய்த்தான்.

கதிர்செயிருவர்தமையிங்ஙன்கண்டபின்னர்க்கனன்றிருந்த
‡ பதின்மர்தமையுமுளம்வெதும்பப்பரிதிவாளாற்போழ்ந்திடலுங்
குதிகொளுதிரமெழுந்தெழுந்துகூடிக்குலவிமெய்யெல்லாம்
பொதியச்செம்மைமிகக்கேழ்த்துப்பொங்கியெழுந்துபொலிந்ததே. ௧௦

கொச்சகக்கலிப்பா.

வடிநூலுக்கிறைவியொடும்வானவர்கடாயான
கொடிபோலுமதிதியர்கொடிமூக்குங்கொடிபோல
விடைவாடுசுவாகையெழில்வலமூக்குமிடமுலையு
மிடல்சேர்ந்தவிரலுகிராற்கிள்ளிவெகுண்டெறிந்தனனுல், (௧௧)

தக்கன்வாழ்மனைவியவயிறலைத்துமனந்தளர்ந்தலற
வக்கணமேயவன்றலையையழற்படையினுலரிந்து

---

* பல்விழந்தபரிதி-பூடா. † கண்ணிழந்தபரிதி-பகன்.
‡ பதின்மரொன்றது தக்கனுடையபுத்திரிகளை மணந்தோரை.

பக்கமேயுறைகாளிகைக்கொடுப்பப்பந்தறைந்துஞ்
செக்கர்வானுறவெறிந்துஞ்சிரித்தழன்றேதிரிந்தனளால். (கஉ)

அலங்குகுழையரம்பையயையங்கையினுலுறப்பற்றிப்
பொலங்கொண்மணிப்பூணணிந்தபுணர்முலைசளுறப்புல்லி
யிலங்கெயிற்றுப்பூதமுடனெரியும்விழிப்பேய்க்கணங்கள்
கலந்துகலந்தேயெழுந்தகாமவிடாய்தீர்ந்தனவே. (கங)

அலையுமுளத்துடனேங்கியாவதினியிலையென்றே
கலையுருவமெடுத்தெச்சன்கையகன்றேயேகுதலுஞ்
சிலைவளையவுறவாங்கித்தீயுமிழுங்கணையேவித்
தலையரிந்துதனிவீரன்றடந்தோள்கொட்டினனார்த்தான். (கச)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னவாறிவணிகழ்தல்கண்டுளமெரியின்வெம்பியெழுந்துநீள்
பொன்னெடுங்கிரிமீதிலேறியபொழியுமைம்முகில்போலவே
மன்னிமுன்னுறுகலுழன்மீதினிலேறிவன்றிறன்மாயவன்
மின்னிமேலுயர்கயிலைபோல்வரும்வீரன்முன்னம்விரைந்தனன். (கரு)

விரையவந்தவனுற்றவேலையின்விரியுநாண்மலருறைபவன்
பரிதிகோடியெழுந்தவொத்தொளிபாயதேர்கொடுவந்துநங்
கரியமைம்மிடறுடையகண்ணுதல்கதிர்செய்தேர்மிசையேறியே
பொருதியென்றுபுகன்றுவிட்டனனென்றுபொன்னடிபோற்றினன். கசு

போற்றவீரனுநின்றுயர்ந்திடுபொன்செய்தேர்மிசையேறலு
மாற்றலான்மிகுபானுகம்பனுமலைசெய்சங்கமுழக்கினு
னேற்றுவந்தவர்வயிறெரிந்திடவெரிதவழ்ந்தனவிளநரு
ஆற்றுநாண்மலருறையுமந்தணனொலிகொடேயொதிருந்தினன். (கஎ)

சிறகர்வீசியகலுழன்விஞ்சியதிண்டிறற்றிணிதோளின்மே
லுறையுமாயனொடேழலும்வெஞ்சினமுற்றெழுந்திடவோடிமுன்
குறுகிநின்றெதிர்குறுகலார்தமைநோக்கியேகுறுநரியினை
விறல்கொள்சீயநகைத்தல்போனகைசெய்துநின்றனன்வீரனே. (கஅ)

இடிக்குமைம்முகில்போலவந்திழியிளநருவிரிதுளவமால்
கடுத்துநெஞ்சகமங்கைவெஞ்சிலைகடைகுழைத்தழல்கான்றுமுன்
னடுத்துநின்றெதிரும்பர்யானையுமலறமோதியவீரன்மேல்
வடித்தவாயழல்வெய்யவெங்கணைமழைபொழிந்தெதிர்மண்டினன். ()

உருமுநாணிடநின்றதிர்ந்தெழுமுடல்சினங்கடவுற்றுநீள்
வரிகொள்வெஞ்சிலைபூட்டுவெங்கணைமாயனெற்றியின்மாட்டினன்
கரியன்வெம்பியழன்றுதன்னிருகண்சிவந்தழனஞ்சுவாய்
சொரியும்வாளிகள்வீரன்வீங்கியதோளின்மீதிலழுத்தினன். (உ0)

மடங்கலொத்தடர்வீரன்வெஞ்சிலைவாங்கியேவிவிவாளிதாங்
குடைந்துவன்றசைதின்றுவந்திழிகுருதியாறுகுடித்துராய்த்
தடங்கொண்மார்புகிழிந்ததாகமெய்தாங்குவீங்கியவாவிபோய்
நடந்ததென்றிடமாயன்மாநிலநண்ணிவீழ்ந்துகிடந்தனன். (உக)

எழுந்துவார்சிறைவீசிமுன்னுறுகலுழன்மீதினிலேறியே
விழைந்துதன்பெயர்தீட்டுவாளிகள்கோடிகோடிவிடுத்தலுங்
குழந்தைவெண்பிறைசூடுவீரனுங்கோட்டுதன்பெயர்வாளியா
லழன்றொரொன்றிணையக்கணத்தினிலாறுகூறுபடுத்தினன். (உஉ)

பின்னும்வார்சிலைகோட்டிவெங்கணைபூட்டிவீங்கியபீடுசால்
கன்னியந்துளவோன்வளைத்திடுகார்முகத்தொடுகலுழனீண்
மன்னிருஞ்சிறையோரிரண்டையும்வன்றிறற்பெருவலியினு
லன்னகாலையில்வெய்யவீரனறுத்துவீழ்த்தியழன்றனன். (உ௩)

கொண்டல்வண்ணனும்வானுளோர்களநேகர்கூடிநெருங்கிட
மண்டுமாயையினல்வகுத்தெதிர்மண்டவேவிவிடுத்தலும்
பண்டைநாளெயின்மூன்றும்வெந்தழல்பற்றமுன்னவனேக்கல்போற்
கண்டுவீரனும்வந்தசேனைகரிந்துவெந்திடநோக்கினன். (உ௪)

கடிதெழுந்துமுகுந்தனஞ்சழல்கக்குமோர்திகிரிப்படை
மிடலினேடுமெடுத்தெதிர்ந்துவெகுண்டுமேவலும்வீரனங்

கிடியின்வெம்பியிடித்தாரப்பகுவமெழுதவல்லவனெழுதிய
படிவமொத்தடலாழியோடுபடர்ந்திடாதவணின்றனன். (உரு)

இன்னவாறிவனைய்நலாலுமைபாகனின்னருளின்றியே
நன்னயம்படுகாரியம்பலசெய்யினும்மவைநன்குறு
வன்னவன்னருள்மேவிவாழ்பவரல்லபற்பலசெய்யினு
மன்னுவெந்திறல்வினையினுற்றுளமாழ்கிடார்மிகவாழ்வரோ. (உசா)

தக்கன்யாகமழித்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉசா.

---

# தேவாதியர்தோத்திரஞ்செய்தவத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தானணிவிளங்குவீரபத்திரனேவத்தாழ்ந்து
தேனுலாந்துளவிரேனைமுதலியதேவர்தம்மை
யீனமுற்றிரங்கக்காலிற்கையினிலெழுந்ததோளி
லானபேர்வல்விபூட்டிக்கூளிகளார்த்தவன்றே. (க)

உற்றவிங்கிவைகரேறைக்கியோங்குயர்திணிதோள்வீங்கிக்
கொற்றமோடுறையும்வீரபத்திரன்கொழும்பொற்றாள்கள்
பொற்றசெங்கமலத்தண்ணல்போற்றுபுவணங்கிநின்று
மற்றவன்கருணைபெற்றுவாய்புதைத்திணையசொன்னான். (உ)

முனிவொழிந்திமையோர்தம்மைமுரண்வலிக்கணங்களெல்லா
மினிநலிந்திடாதவண்ணமிசைத்திடவேண்டுமென்னச்
சினமிகுந்துறையும்வீரபத்திரன்சினத்தினீங்கி
யனையவையுரைத்ததொல்லையந்தணற்கருளிநின்றான். (௩)

அருளியாங்குறைதரேறைக்கியன்றுயிரிறந்தோர்போக
வெருவியவுளத்திரேறுடும்விட்டகன்றுடைந்துபோகித்

திருமுடி துறந்துவிட்டசிலசிலவமரர்கூடிப்
பரிவுறத்தாழ்ந்துவீரபத்திரற்பரவலுற்ருர். (௪)

சிவனுருவாகிவைகுந்தேவனேபோற்றல்செய்வா
மவனடிக்கன்புசெய்யுமமலனேபோற்றல்செய்வாங்
கவர்படுசூலமேந்துங்கடவுளேபோற்றல்செய்வா
நவையுறவேள்விசெற்றநம்பனேபோற்றல்செய்வாம். (௫)

தக்கன்வன்றலையைவாளாற்றடிந்துளோய்போற்றல்செய்வா
மிக்குயர்வானோர்தம்மைவீட்டினேய்போற்றல்செய்வா
முக்கணல்விளங்கித்தோன்றுமுகத்தினேய்போற்றல்செய்வாங்
கொக்கிறகணிந்தசெய்யகுஞ்சியோய்போற்றல்செய்வாம். (௬)

மதியினைக்காலாற்றேய்த்தவரதனேபோற்றல்செய்வாங்
கதிரவன்கண்கடொட்டகையனேபோற்றல்செய்வா
மதிதிபொற்கொடிமூக்கீர்ந்தவண்ணலேபோற்றல்செய்வாங்
கொதியழன்மனைவிகொங்கைகுறைத்துளோய்போற்றல்செய்வாம். ௭

என்றடிதுதித்துத்தக்கனேடியாமிணங்கிவைகி
யின்றுறச்செய்தகுற்றம்பொறுத்தியென்றிரத்தலோடு
மன்றுகாற்றனைகணிக்கியவரொடுமலர்ந்துவிண்ட
கொன்றைறதாழ்மவுலியண்ணல்குளைகழல்குறுகினனே. (௮)

ஆக்கியவேள்விமுற்றுமழித்திடல்விண்ணினின்று
நோக்கியேயுறையுமீசனேன்கழலடியிற்ருழத்
தேக்கமழ்கரியகூந்தற்றேவியைச்சிறிதுநோக்கி
மாக்கவினழிந்ததேவர்ப்பார்த்திதுவழங்கலுற்ருன். (௯)

அறிவற்றீர்செய்தகுற்றம்பொறுத்தனமென்னவார்த்து
நிறையுற்றமகிழ்ச்சியோடுமொடினராடநேரி
னறைபற்றுகமலத்தண்ணனலிருகையுங்கூப்பிக்
கறைபற்றுமிடற்றோன்செவ்விகண்டிதுகழறலுற்ருன். (௧0)

அடியவர்செய்தகுற்றம்பொறுத்தனையடிமைநோக்கிப்
படுதிறல்வீரன்மோதப்பட்டழீஇக்கிடந்தோரொல்லா
மொடிவறவங்கமுன்போலடைந்துமுள்ளாவிபெற்றுங்
கடிதெழுந்திடுதற்கின்னேகண்ணுதலருள்வாயென்றான். (கக)

என்னலுமுமையைநோக்கியிளநகைசிறிதுகோட்டி
யன்னவாறாகவென்றானக்கணத்தாவியாக்கை
முன்னைநாள்போலப்பெற்றுமொய்ம்முகிலூர்தியோடு
மன்னியேயமரர்யாரும்வள்ளலைத்தொழுதுநின்றார். (கஉ)

மறையொருநான்கும்வல்லான்மணிமிடற்றண்ணலேவ
வறைதருதக்கற்காட்டின்றலையினையளித்தானன்றே
னிறைவனைப்பணிந்துபோற்றவிறைவனுமிரங்கிநம்பா
லுறைதருகணங்கட்கெல்லாநாதனுயுறைதியென்றான். (கங)

என்றலுமணிவாய்ச்சங்கமேந்தியமாயனெய்தி
மன்றலங்கமலவீட்டின்வாழ்வுபெற்றுறைவோனோடும்
வென்றிவான்மழுவோன்றாளிலாங்கவனிடப்பான்மேவுந்
துன்றுபூங்கோதைதாளிற்றொழுதனன்றுதிக்கலுற்றான். (கச)

முன்னைநாட்கமலமொன்றுகுறைந்திடமுடைநாறியாக்கை
மன்னுமென்கண்ணிலொன்றுமலர்புனையடியிற்சாத்த
வன்னநாளருளிவென்றியாழியொன்றளித்தோட்புல்லே
னின்னநாட்செய்தகுற்றம்பொறுத்திடவேண்டுமெந்தாய். (கரு)

எற்றுநீர்க்கடலினிட்டவெழில்வரையிறுகவீக்கிச்
சுற்றியநாகங்கக்குஞ்சுடருமிழ்நஞ்சமுண்டாங்
கற்றம்வந்தடையாதெங்களாவிகாத்தருளிநின்ற
பொற்றசெஞ்சடையோய்குற்றம்பொறுத்திடவேண்டுமெந்தாய். (கசு)

மாய்விலராகியாங்கண்மயங்கிடவந்துமெய்வா
ழாவியுண்டிடுதற்காகவடர்ந்திடுமசுரரோடு

மூவெயிலழலின் வேவமுருக்கியன்றெம்மைக்காத்த
பூவலர்சடையோய்குற்றம்பொறுத்திடவேண்டுமெந்தாய். (௧௭)

பொறுத்திடல்வேண்டுமென்றுப்போற்றியமாயனோடு
மறத்தொழிலறியாராகியழிந்தவானவரைநோக்கி
மறத்தினுற்செய்தகுற்றம்பொறுத்தனமயங்கல்வேண்டா
துறக்கமீதடைதிரென்னச்சுடர்முடியமரர்போனார். (௧௮)

இறைவியாங்குறையும்வீரபத்திரன்றன்னையீர்ந்தா
ரறுமுகனென்னவன்புற்றளப்பரும்வரங்கணல்கி
மறமிகுசூலமேந்துகாளியைமகிழ்ந்துநோக்கக்
கறைகெழுமிடற்றோன்றேவிதன்னொடுங்கரந்தானென்றான். (௧௯)

தேவாதியர்தோத்திரஞ்செய்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௪௯.

---

# தேவிதவமான்மியமூனாத்தவத்தியாயம்.

---

மறைந்தனனென்றுகூறமறைந்துபோயிறைவன்யாங்க
ணுறைந்தனன்யாதுசெய்தானுணரநீயுரைத்தியென்று
வறங்களையந்தணாளரறைந்திடவண்ணல்பாதஞ்
சிறந்திடப்போற்றிவாயுமன்னவன்செப்பலுற்றான். (௧)

கலிவிருத்தம்.

முன்னைநாண்மந்தரமுதல்வன்றன்னுழை
மன்னிடவேண்டுமென்றழிவின்மாதவம்
பன்னெடுங்காலமங்கியற்றும்பான்மையான்
மின்னணங்கிடையுமையோடுமேவினான். (௨)

மேவியமந்தரம்விளங்குகோட்டினில்
வாவுவெள்ளருவிகடேங்கன்மற்றுள

தாவில்பேர்வரைக்கெலாந்தலைமையாகவே
யோவறப்புனல்சொரிந்தாட்டலொக்குமால். (௩)

மால்வரையுச்சியில்வட்டவெண்மதி
மேலுறவோங்கியேவிளங்கித்தோன்றுத
லாலமுண்டவனருளளித்தபண்பினாற்
பாலொளிவெண்குடையெடுத்தபான்மைத்தே. (௪)

தூமவார்சடையினேன்றயங்கிவைகிய
பூமலர்ச்சோலைசூழ்பொருப்பின்பாங்கரிற்
காமுறக்கவரிவால்சைத்தல்காண்டகச்
சாமரம்வீசியதகைமைசாலுமால். (௫)

மதிதொடவோங்கியவயங்குமால்வரைக்
கெதிருறப்பனிக்கடலெழுந்தசேயொளிக்
கதிரவன்றோன்றல்கண்ணாடிகாட்டிய
வதிசயம்விளைக்குமாலறியுங்காலையே. (௬)

அறையுமாசிறப்புடையண்ணல்வெற்பினிற்
கறைமிடற்றிறையவன்கருதிவைகுநா
ளுறுழ்வலிச்சும்பனோர்நிசும்பனென்பவர்
மறையவன்விரும்பிடத்தவத்தின்வைகினார். (௭)

ஆயதோர்காலையிலரியநான்மறை
நாயகனெய்தலுநன்றெனவெழுந்
தேயவன்சேவடியிறைஞ்சித்தாழ்ந்துள
மேயவையாவையும்விளம்பினாரரோ. (௮)

ஒருத்திதன்மெய்யினிலுதித்தகன்னியே
வருத்திமற்றெம்முயிர்மாய்ப்பதல்லது
விரித்தபேருலகினின்மேவும்யாவரு
முருத்தெமைக்கொன்றிடாதுதவுவாயென்றார். (௯)

என்றலுமவ்வகையருளியேகினான்
மன்றலந்தாமரைக்கிழவன்மற்றவர்
வென்றிகொள்குலிசியைவென்றுமிக்கொளி
துன்றுவானுலகினிற்றுலங்கிவைகினார். (க0)

வெய்யவர்வைகியேவெம்பிவாழுநாள்
வையகமுழுதையும்வகுத்தவானவ
னையணதிருக்கையிலடைந்துளன்பிறா
லொய்யெனவணங்கியீதுரைக்கலுற்றனன். (கக)

செய்யபொன்னுலகினிற்றேவர்கோன்மனை
மையலுற்றிடும்படிவாட்டிமண்டிய
கையழல்வேலுடையசுரர்கைத்திட
வெய்யகோல்செலுத்தியேவிரும்பிவாழ்கின்றார். (கஉ)

ஆயவர்தங்களையாவிவீட்டுவான்
சேயரிக்கண்ணுமைதிகழ்ந்தமேனியி
லேயவோர்கன்னியையீகுவாயென
வாய்விரிகமலத்தோன்வணங்கிக்கூறினான். (கங)

நறைமலரந்தணனவின்றுபோதலு
முறைதருமுவளகத்துமையைநோக்கியே
கறைமிடற்றிறையவன் * காளிவாவென
வறைதலுமற்றவளழன்றுகூறுவாள். (கச)

கன்னலஞ்சிலையனைக்காய்ந்துளோய்க்குளத்
தென்னைகொல்காமமிக்கிறந்தநாளெலா
மன்னினைமகிழ்ந்திவண்மகிழ்ச்சியின்றியே
யின்னவாறுரைத்தனையென்கொலாவதே. (கரு)

புகலருங்கவினொடுபொலிந்துபொற்புடை
வகைநலப்பேரணிவயங்கப்பூணினு

---

* காளி - கருநிறமுடையவள்.

நலைகழுநக்கணவனுன்னையக்கிலானெனின்
மகளிருட்பதாடியம்மடந்தையென்பவே. (௧௬)

உரியவிம்மெய்யினிற்கடவுணீமகிழ்
திருவுளமில்லையேற்செய்யமேனியை
யரியமாதவம்புரிந்தடைகுவேனென
வருபனிகண்ணுறநவைமுந்தமன்னினாள். (௧௭)

மன்னியதேவிதன்மலர்ச்செஞ்சீறடி
பொன்னலர்சடையினோன்பொருந்திப்புல்லியே
யென்னைகொலசதியிலிசைத்தவார்த்தையா
லன்னமேவெருண்டதிங்கதறதியென்றனன். (௧௮)

என்றியாமுடனுறைநந்தையயிலேர்பெற
நின்றபேருலகெலாநிலவுமன்றெனிற்
பொன்றுமாலனைத்தெழும்வெருளிப்பொங்கழ
லின்றுமீதனிதியென்றிரந்துகூறினான். (௧௯)

இராத்தலுமிவ்வகையெத்திநாளெலா
மருந்திபோனுறைவைதயருந்திலேனினி
விரிந்தநாண்மலரினோன்மிக்கவாய்மையாற்
றிருந்துருமேனியைச்சேர்வன்யானென்றான். (௨௦)

என்றிறைமுதல்வனைவலங்கொண்டேர்பெற
நின்றுயரிமையவெற்படைந்துநேரிலா
வொன்றுபேரிலிங்கத்திருவந்துபூசைசெய்
தன்றுநல்லருந்தவமாற்றினாளரோ. (௨௧)

ஆயகாலையினிலோருழுவையண்ணியே
காய்சினத்துடனவணுறைந்தகைகள்கா
லேய்வுறவியக்கமற்றிருப்பயாவர்க்கு
நாயகிதிருவுளநயந்துநோக்கினாள். (௨௨)

நோக்கலுமும்மலங்கழிந்துநோவொழிந்
தாக்கியபேருணர்வடைந்தங்கண்ணறன்
மாக்கவின்றேவியென்றுணர்ந்துவந்தநம்
பாக்கியமிதுவெனப்பணிந்துநின்றதே. (௨௩)

கூறியவசுரர்தங்கொடுமதீமையால்
வீறுசேரமரர்கள்சூழவேதியன்
மாறிலாத்தவமுமைமன்னியாற்றிய
நாறுபூங்காவினினண்ணித்தாழ்ந்தனன். (௨௪)

தாழ்ந்துமாதவப்பயனுகித்தாயுமா
யாழ்ந்தமாமுனிவர்களறியவைகுநீ
சூழ்ந்தபூங்காவினுட்டவத்திற்றுன்னியே
வாழ்ந்தனையறிகிலேன்மதித்தவண்ணமே. (௨௫)

என்னலுங்கரியவிந்நிறத்தினீங்கியான்
பொன்னிறம்பெறவிவண்புகுந்துளேனிதற்
குன்னுளமுனைத்தியாலென்னலுமுங்குறை
யன்னவாகனனடிபணிந்துகூறினன். (௨௬)

ஈங்கிதற்கோதவமியற்றுகின்றது
தாங்கியவிவ்வுருநீங்கித்தங்கொளி
வீங்கியபொன்னிறமேனிதாங்கிமுன்
ஞங்குறைறமேனியாலமைத்தியொன்றெறு. (௨௭)

விடுத்தவம்மெய்யிலோரணங்கைவீறெழப்
படைத்துவல்லசுரரைப்பாறவீட்டியே
யிடுக்கணிங்ககற்றிவானிமைப்பிலோர்கடம்
வடுத்துடைத்திடுதியாலென்றுவாழ்த்தினன். (௨௮)

உரைத்தலுங்கரியவவ்வுருவநீங்கியே
தரித்தனள்பொன்னுருத்தரித்தகாலையில்

விரித்தபூமலர்மழைதூவிவிண்ணவ
ருருத்தியாற்பாடிநின்றூர்த்துளார்களே. (௨௯)

விட்டவக்காருருமிக்கபோர்வலி
யெட்டுடைக்கரங்களோடியைந்துதுர்க்கையா
யட்டுயிருண்டிடத்தோன்றியன்னையா
மட்டுலாங்கோதையைவணங்கிநின்றதே. (௩௦)

வணங்கியதுர்க்கையைநோக்கிமாமறை
பிணங்கியநாவினன்பேச்சினின்றுநீ
குணங்களில்லசுரனைக்கோறியென்றனள்
பணங்கிளர்பாம்பணிப்பரமன்றேவியே. (௩௧)

என்னலுமடங்கலொன்றியற்றிநான்முக
னன்னவட்களித்துவானணவுவிந்திய
மன்னிவார்மதுத்தசைமகிழ்ந்துவாள்வலி
துன்னுபோரசுரனைத்தொலைத்தியென்றனன். (௩௨)

மற்றவனுரைத்தலுமடங்கலேறியே
பொற்றநீள்விந்தியங்குறுகிப்பொங்கிய
கொற்றவாளசுரனைக்குறைத்துநாடொறு
முற்றுவானவர்தொழவுறைந்துவைகினள். (௩௩)

தேவிதவமான்மியமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௭௬.

---

# தேவிபுலியொடுமெந்தரமடைந்த அத்தியாயம்.

---

ஆங்கதுநிற்கநாறலரினேன்முகம்
வாங்கியமருங்குமைநோக்கிவன்றிற

ருங்கியமறப்புலிதறுகணீங்கியே
யீங்குநம்முழையமர்ந்திருந்ததென்றனள். (௧)

என்னவோரரக்கனிப்புலியுருக்கொடு
மன்னினன்பாம்பின்வாயமிர்தம்வார்ப்பபோ
னின்னருளளித்திடனீதியாகுமோ
வன்னையென்றுரைத்தலுமன்னைகூறுவாள். (௨)

அரக்கனேயாகமற்றல்லனுகுக
வருத்தமற்றிவ்வுழைவணங்கிநின்றதென்
றுரைத்தலுநான்மறையுடையவந்தணன்
றிருத்தகத்தொழுதிவைசெப்பலுற்றனன். (௩)

உத்தமத்திருவுளமுளதிங்கென்பதைப்
பித்தனேனுணர்ந்திலேன்பிறங்குநின்னடிப்
பத்திமையுள்ளவர்பாவஞ்செயினு
மித்தனையேனுமிங்கிரங்கற்பாலரோ. (௪)

துன்னியதாபரந்துலங்குநின்னருண்
மன்னுமேற்பிரமனும்பிரமன்மற்றதா
யின்னருளிலதெனிலெய்துவானரு
ளன்னதாலீங்கிதற்கருளுகென்றனன். (௫)

எனலுமப்புலியொடுமெழுந்தங்கோர்பெறத்
தனையருடன்றைததாய்க்குரைத்துத்தாழ்குழன்
மனவணியல்குலார்சூழமந்தரத்
தனநடையுமையவளடைந்துளாளென்முன். (௬)

## தேவிபுலியொடுமந்தரமடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௮௨.

---

# புலிக்குக்கயிலாயபதவியளித்த அத்தியாயம்.

---

எய்தினனென்னலுமுனிவரோர்செய்பொன்
னைதெழுதின்மேனியங்கடைந்தவாறெலா
முய்திறனடியேயுரைத்தியென்றலு
மெய்தெரிவாயுவும்விரித்துக்கூறினான். (௧)

அந்தநல்லுவகையையறைதற்பாலதோ
நந்தியேமுதலினோர்வணங்கநாயகி
வந்தானடியிணைவணங்கவாங்குபு
சிந்தையார்மகிழ்வொடுகுறங்கிற்சேர்த்தினான். (௨)

சேர்த்தியவுமையவள்செழும்பொன்மாமுகம்
பார்த்தெழில்கண்ணினான்மாந்திப்பண்டுளத்
தார்த்தெழுவெருளியின்றுறிற்றேறுவெழு
கார்க்கவினழிந்தவார்கரியகூந்தலாய். (௩)

நம்முனோநாமிகமாறினன்கொலா
வெம்மையாலுலகெலாம்விளியுமிக்கெழு
செம்மைவெந்தீயெனவுருவந்திங்களிற்
கொம்மைசேர்வனமுலைகுலவிவைகுவாய். (௪)

எரியும்வெய்வழுதிகழ்ந்திலங்குவெண்மதி
யுருவமாமுலகமிங்குரைக்குஞ்சொற்பொருட்
டிரிவருந்தன்மையாஞ்சிறக்குஞ்சொற்கணீ
யரிதுணர்பொருள்களியானறையுங்காலையே. (௫)

குறைவறுவிஞ்சைசமீகோதில்விஞ்சையா
லறிதருமறிவுநாறுணையீயவைத
நெறிகெடவிகந்திடினிலவியானிவ
னுறையுமீச்சுரனெனவுறையற்பாலனே. (௬)

இன்னதாலென்னைநீபிரியுமாறெவன்
மன்னுமால்வானவர்கருமம்வாய்ப்பவே
யுன்னைநான்காளியென்றுரைத்தல்செய்தன
னன்னதுநன்மையின்பகுதியாயிற்ருல். (எ)

நாயகனிவ்வகையுரைப்பநாயகி
வாயணிமணியெயிறிலங்கவந்தெழு
பாய்நிலாப்படநகைமுகிழ்த்துப்பாற்பட
வேயுறுதுர்க்கைதன்னியல்புகூறினுள். (அ)

படைத்துறைதுர்க்கைதன்பழுதிலாத்திற
லடிக்குவந்தந்தணனைறவனென்றணி
மடத்தகையுரைப்பவோர்மடந்தைவன்புலி
பிடித்துநம்மிறைவன்முன்பெட்பினெய்தினுள். (கூ)

எய்தியகாலையினெழில்செய்மாதவஞ்
செய்திடுபோழ்தினிற்சினவுமிப்புலி
மைதிகழ்மிடற்றிறேய்வணங்கியென்னுழை
யுய்திறனடியங்கொடுங்கிக்காத்ததால். (க0)

நவையறவுயர்கணநாதனுகியே
தவளவெண்ணீறணிதாவினந்தியோ
டுவளகங்காத்தினிதுறையநல்குவாய்
குவளையங்களத்திறேயென்றுகூறினுள். (கக)

உரைத்தலுமிறையவனருளவொண்மணி
நிரைத்திடுகஞ்சுகமணிந்துநீடொளி
விரித்திடுபொற்பிரம்போடுவெய்யவா
டரித்துழியாதேோர்தகைமைசார்ந்ததே. (கஉ)

தகைமைசார்ந்துயர்புகழ்நந்திதன்னெடுந்
துகளிலாதோங்கியசோமநந்தியென்

றகமகிழ்ந்தியாவருமமைறயவாசிலா
மகிழ்வொடுமுவளகவாயின்மன்னிற்றால். (கரு)

மன்னுமணிமிடற்றிறைறவன்மாசிலாப்
பொன்னெழிலுமையவண்மகிழப்பொற்புடைப்
பன்மணிப்பல்கலன்பாப்பிப்பூட்டியே
யின்னகையவளொடும்வைகினனென்றான். (கசு)

புலிக்குக்கயிலாயபதவியளித்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருகூரு.

---

# அக்கினிசோமமயமூலகென்பது உரைத்தவத்தியாயம்.

---

வைகினனென்னுமதியம்வெங்கனன்
மெய்தெரிசொற்பொருளுருவம்வீங்குல
கையயிலீசனதாணைதேவியென்
ஞெய்யெனவுரைத்தவைமுனிவரோதென்றார். (க)

ஓதுமென்றுரைத்தலும்வாயுவோதுவா
ஞேதியாமிறையழலுருவம்வெவ்வழல்
சீதமாமவளமிர்தருவந்திங்களஃ
தேதமிலுலகி * ஞதாரமென்பரால். (உ)

அழலொளிவிஞ்சையவ்வமிர்தொடாரொளி
மொழிதருதூலசூக்குமங்களாகிமொய்த்
தெழிறிகழ்பூதமற்றவையுமன்னியே
யொழிவிலாவிரதமுமொளியுமாகுமால். (ரு)

* அக்கினியிலே அமிர்தமுண்டாதலும், அதனால் அக்கினிவிருத்தியடைதலும், அவ்வக்கினியிலே அவிசொரிதலால் பயிர்விருத்தியாகமழையுண்டாதலும், இவ்வேதுவினால் உலகம் அக்கினிசோமசொரூபமென்பதும், பிறவும் வடமொழிப்புராணத்துட்காண்க.

தயங்கொளிபரிதிசெந்தழலென்றாகியே
வயங்குமின்னமிர்தம்வெண்மதியம்வார்திரை
யியங்கிடுபுனல்தாமிவற்றினூலுறப்
பயன்படுமூலகெலாம்பழுதின்றாகியே. (ச)

நிறைதருசிவமயமாகுநீடழ
லுறைதருங்கீழதாயொழிவில்சத்திதன்
னறைதருமயமதாமமிர்தமேலதாய்ச்
செறிவுறுமிவ்வகையுலகஞ்சேருமால். (ரு)

மன்னியவெங்கனற்கொழுந்துவாய்க்குமாற்
றுன்னியவமிர்தினிலமிர்தந்தூங்கியே
மின்னியகனலினில்வார்ந்துவீழுமா
லின்னதாற்சிவசத்திமயமிங்கென்பரால். (சா)

அறைந்திடுவெங்கனலமர்ந்துவைகியே
நிறைந்திடுமூலகினைநீற்றுநீற்றினைச்
சிறந்திடவணிபவர்செய்தபாவங்க
ளிறந்திடச்சிவமயமாவரென்பரால். (எ)

மூலவாதாரத்தின்முழங்குதீயினைச்
சாலவேமெய்யினைச்சுட்டசாம்பலை
மேலுறையமிர்தினையனைக்கில்வெய்யதாங்
கால்பாசத்தினைக்கடந்துமன்னுவார். (அ)

மன்னியோகத்தினன்வயங்குமேலவர்
பின்னியகதிர்மதிபிறங்குவெங்கன
றுன்னியேயுறைவதைப்பிளந்துதொன்மறை
பன்னிடுமுத்தியிற்படர்குவாரொன்றான். (கூ)

அக்கினிசோமமயமூலகென்பதுரைத்த

அத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சOரு.

# அத்துவாக்களினியல்புரைத்த அத்தியாயம்.

பின்னரும்வளிக்கிறைபேசலுற்றனன்
றுன்னியபகுதிசொற்பொருளின்றோற்றமாய்
மன்னுமாற்சொல்லுமைவிபூதிவண்பொருண்
மின்னுவார்சடையவன்விபூதியாகுமால். (௧)

நாட்டியசொல்லுமூவகையினண்ணுமாற்
கேட்டிடனூலமாங்கேடினெஞ்சினில்
வாட்டமற்றுணர்தல்சூக்குமமன்னெஞ்சினூற்
கோட்டிடாததுபரையாகுங்கூறிலே. (௨)

பரைதிரிவிதசத்தியாகும்பாற்பட
வுரைசெயிச்சாசத்தியொழிவின்றாகியே
மருவியஞானசத்தியினைமன்னியே
தருகிரியாசத்திதனைவளர்க்குமால். (௩)

பகர்செய்குண்டலினிபாம்பழுதில்சத்திதான்
றுகளிலாறத்துவாவாகித்தோன்றுமாற்
புகல்சொலத்துவாவொருமூன்றுபோற்றிடத்
தருபொருளத்துவாமூன்றுசாற்றிலே. (௪)

அடைவினிலுரைத்தவிவ்வாறுங்கேடுசெய்
வடுவிலாதுறையுமான்மாவின்சுத்தியா
லொடிவறுலயமுடனுரைக்கும்போகங்கண்
மிடையதிகாரத்தைவிளைக்குமென்பரால். (௫)

விரித்தசொல்லத்துவாவிளம்புமந்திரந்
திருத்தியபதம்வன்னமென்னச்சேருமாற்
பொருட்டிகழத்துவாப்புவனந்தத்துவ
முரைத்திடுகலையெனவுற்றுநண்ணுமால். (௬)

மந்திரவத்துவாவதனைவண்பத
நந்தலிலத்துவாநிறைக்குநன்கதை
வந்துநாமுறைசெய்தவன்னவத்துவா
முந்தியேநிறைந்திடநிறைக்குமுன்னிலே. (எ)

ஆங்கதைநிறைக்குமாற்புவனவத்துவா
வீங்கிதைதத்தத்துவவத்துவாவெய்திப்
பாங்குறநிறைக்குமாலதனைப்பல்கலைத்
தீங்கிலாவத்துவாநிறைக்குஞ்செப்பிலே. (அ)

சிறந்திடுபிரகிருதிக்குத்தெள்ளிதி
னறைந்திடிலவகைத்தோற்றமுண்டவை
நிறைந்திடுநிவிர்த்தியேமுதலவாய்நிரந்
துறைந்திடுங்கலைகளோரைந்துமோதிலே. (கூ)

மன்னுமத்துவாக்களைநிறைக்குமாசத்தி
யன்னதைமுதலகன்ஞாலமீறதாத்
துன்னுதத்துவங்களைநிறைக்குஞ்சொல்லிடிற்
றன்னிகரிலாச்சிவதத்வமென்பவே. (க0)

நிறைதருசத்திதானிகழ்த்திலேந்தெனுங்
குறைவறுபதங்களைக்கோதின்றாக்குமா
லறையுமத்துவாக்களோராறுமாசிலா
மறுவறுசிவபதந்தன்னில்வைக்குமால். (கக)

மலல்சேர்நிவிர்த்தியான்மாசின்றாகியே
சொல்லுருத்திரபதமளவுஞ்சுத்தியா
மெல்லையிலாப்பிரதிட்டையாலிய
லொல்லுமவ்வியத்தமட்டுணரிற்சுத்தியாம். (கஉ)

விளம்பியவித்தையால்வித்தியேசுரத்
துளங்கொளிப்பதமளவாகச்சுத்தியாங்

களங்கமில்சாந்தியாற்கழறுசத்தித
னளந்தறிபதமளவாகச்சுத்தியாம். (கங)

திருத்தியவுணர்விஞற்செய்யுமாதவத்
தருக்கிஞலுணர்ந்திடுமதீதசாந்தியாற்
பரப்பிரகிருதியாம்பதநற்சுத்தியாம்
விரித்திடுமிவைகளால்யாவுமேவுமால். (கச)

திருந்திடவிவையறியாததேசிகன்
வருந்திடநரகிளையளிக்கவந்தவன்
விரிந்திடுசத்திபாதத்தைமெய்ம்மையாற்
றெரிந்துதத்துவசுத்திசெய்யவேண்டுமால். (கரு)

சத்தியெக்காலமுந்தளர்வின்ருயுறை
யத்தனதாணையாந்தேவியாங்கவண்
முத்திபந்தங்கண்மற்றல்லண்முன்னிடி
லுத்தமஞானநல்லுருவமாவளால். (கசு)

தாங்கியசடைமுடியிறைவன்றன்னிடப்
பாங்கினிலுறைதருபனிமென்வார்குழ
லீங்கிவர்சந்ததியாகுமோர்பெற
வீங்கியபகுதியால்விரிந்தயாவுமே. (கஎ)

ஒருருவாகியங்குறையுமண்ணலே
வார்குழலுமையவளுருவமன்னியு
மீருருவாகியீங்குறைவனென்றுமெய்
தேர்தருமுணர்வுடைச்சிலருரைப்பரால். (கஅ)

உருவஞாயிறுஞ்சுடரொளியும்போலவே
யிருவரும்வைகுவாரொன்பராற்சிலர்
தெரியிலிவ்வகையிஞற்சிவனுந்தேவியும்
பிரிவிலராகியேபிறங்கிவைகுவார். (கக)

மூலமாம்பகுதிதான்முகிழ்ந்தவார்முலைக்
கோலவார்தொடியுமைகுறித்தவேவலாற்
சாலுமாமாயைசொன்மாயைசாற்றிடு
மேல்பிரகிருதியென்றியைந்துமன்னுமால். (உ0)

மன்னியாறத்துவாக்களைவகுக்குமா
லன்னவைசொற்பொருளாகுமத்துவாத்
துன்னுபேருருவமெவ்வுலகுஞ்சொன்னதே
பன்னுபுரிற்குநூலெனப்பகர்ந்தனன். (உக)

அத்துவாக்களினியல்புரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சஉசு.

---

## சிவன்விசயமுரைத்தவத்தியாயம்.

நிற்குமாலென்னலும்பற்றுநீங்கியே
யற்புதனுகியேயமருநஞ்சிவன்
பற்பலகருமங்கணேடிப்பல்லுருப்
பொற்பொடுதாங்கியேபொருந்தல்கூடுமோ. (க)

புரிசடையீசனெப்பொழுதும்பொற்புற
வருளினையேபுரிந்தமர்வனென்பதென்
றெரிமறையந்தணன்றலையைச்சீறியே
யிருவிரனுதியினுற்கிள்ளியேந்தினன். (உ)

மானுடமடங்கலைச்சரபவல்லுருத்
தானுறத்தாங்கியேசாயமோதினு
னதோர்வீரனலன்றுதக்கனை
வானவர்தம்மொடுமொயநூறினன். (ங)

வயங்கெயிலெரித்தனன்மதனைநீற்றினன்
றயங்கொளிவானுறைபசுக்கடன்றலைப்

பயன்படுபாலினைச்சொரியப்பண்டுள
மியைந்திடாதாங்கவையெரியநோக்கினான். (சு)

இலங்கொளிக்கழலினாலெழுநேமியாற்
சலந்தரன்றலையினைத்தடிந்துவீழ்த்தினான்
கலங்கிடவந்தகன்கரியமார்பினில்
வலங்கொண்மூவிலைபவேன்மாட்டியேந்தினான். (ரு)

மாறியேயனந்தனான்மாலைக்கட்டியே
நூறியோசனைவிழநுனித்தெறிந்தனன்
வீறுசேர்தூர்க்கையால்வெய்யவஞ்சினங்
கூறியவசுரனைக்கொன்றுவீழ்த்தினான். (சா)

அறுமுகக்குமரனையருளியாண்டகை
விறலுடைத்தாரகாசுரனைவீட்டினான்
சிறுவனுக்காகமுன்சினவிவந்தடர்
மறலியையுதைத்துயிர்மாய்த்துவீழ்த்தினான். (எ)

கயிலையைக்குலுக்கியவரக்கன்கல்செய்தோ
ளுயர்வலிகெடவிரலுநியினூன்றினான்
செயலிவையருள்வகைதெரியக்கூறென
மயலெறிமுனிவர்கண்மறுத்துக்கூறினார். (அ)

சிவன்விசயமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சகூச.

## சிவாநுக்கிரகவியல்புரைத்தவத்தியாயம்.

கூறலும்வாயுவுங்கூறலுற்றன
னுறமுனிவிர்காளண்ணறண்டித்தல்
சீறியபாவத்தைச்சிதைத்துச்செவ்வனே
மாறிலாவருளினைவழங்கல்வேண்டியே. (க)

உருவமாயமர்ந்திடுசிவனையுற்றுநாந்
தெரிதரக்காண்பதையன்றிச்சேகற
வருவமாயமர்ந்திடுமரியசோதியை
மருவியேகண்டிடவல்லர்யாவரோ. (உ)

விறகினைப்பற்றியேவிளங்குதீயினைக்
குறைவறக்காண்குவதன்றிக்கோதிலா
துறைதருதீயினைக்காணவொண்ணுமோ
மறைதெரிபொருளினைவகுக்கவல்லிர்காள். (௩)

மன்னியேபரம்பொருளாகிவைகுவோன்
முன்னிடுசதாசிவன்முதலமூர்த்தியாய்ப்
பன்னிடுபல்லுயிர்பழுதின்றுய்யவே
யின்னருள்புரிந்துநன்கினிதுவைகுவான். (௪)

மற்றவன்றேன்வழிமலரிணைமுத
லுற்றுறைந்தமர்ந்திடுமுயிர்வர்க்கங்களைத்
தெற்றெனத்தண்டங்கள்செய்துசேர்ந்துறப்
பற்றியபாவங்கள்பறியநீக்குவான். (௫)

ஆதலாலன்றுகொலரசரன்பிலாத்
தீதுசெய்மாக்களைத்தண்டஞ்செய்கின்று
ரோதியதண்டத்தையுணர்ந்துறுத்தலா
லேதமொன்றில்லையால்வேந்தர்க்கென்றுமே. (௬)

தந்தைதான்புதல்வனைத்தண்டஞ்செய்தவன்
சிந்தைகொடிவினைசிதைக்குமாறுபோ
லெந்தைதான்றண்டங்களியற்றியெய்திய
பந்தமங்ககற்றிநல்லருள்பணிப்பனால். (எ)

அணங்கிடமருத்துவனரிந்துஞ்சுட்டுமாங்
குணங்குநோயாளனையுய்யக்கொள்ளல்போற்

பிணங்கியவல்வினைதீரப்பிஞ்ஞகன்
வணங்கிடவருத்தியேவருத்தந்தீர்ப்பனால். (அ)

மண்டுவெஞ்சினவராவுயுள்வைத்துற
வுண்டிடுமொருவனையுய்யக்கொள்வதே
கண்டனபாவங்கள்பறியக்கண்ணறத்
தண்டஞ்செய்திடுவதுதவத்தின்வைகுவீர். (௯)

மூர்த்தியாயுறைந்திடுமுதல்வர்யாவர்க்குந்
தீர்த்திடாவாசையேமுதலதீமைக
ளார்த்திடப்படுமவையண்ணற்கில்லையென்
றோர்த்துநான்மறைகளுமொருங்குகூறுமால். (௧0)

மன்னியமாசினையாயக்காய்ந்திடுந்
துன்னழறன்னையம்மாசுதுன்னிடா
தன்னதுபோல்வினையறுக்குமீசனை
யென்னவல்வினைகளுமீண்டியெய்திடா. (௧௧)

இரும்புதான்சுட்டிடலெரியின்றன்மைபோல்
வருந்திடாதமர்ந்துறவயங்குமூர்த்திகள்
பொருந்தியவீச்சுரத்தன்மைபோற்றிடத்
திருந்தியேயுறைசிவன்செயன்மற்றாகுமால். (௧௨)

மண்ணினிற்கல்லினின்மரத்தின்மன்னியே
யண்ணனன்குறைதலாலவற்றையண்ணலென்
றெண்ணியாந்தொழுதுறவேத்திவாய்விரி
வண்ணநாண்மலர்பலதூவிவாழ்வதே. (௧௩)

சித்தசித்தெவற்றையுமிதத்திற்சேர்த்தினுந்
தத்தமகுணங்களாலிதத்திற்சார்ந்திடா
மொய்த்தலர்கதிரவன்விரிப்பமுண்டக
மொத்துடன்விரிந்திடாவகையையொத்தரோ. (௧௪)

ஆசுறுமலமுழுதற்றுளோர்க்கலான்
மாசறுமுத்தியைவழங்கிடான்சிவ
னேசுறுமலஞ்சிவன்றனக்கிங்கில்லைபாற்
பாசவான்மாக்களுக்கன்றிப்பார்க்கிலே. (கரு)

ஆதலாலன்றுகொலமருஞ்சீவன்மற்
றோதியவின்பத்துன்பங்களுற்றிட
றீதுறுமாயைசெய்கருமமார்த்திட
வேதமோடுறைவதேயிவற்றிற்கேதுவே. (கசா)

கருமமுமாயையுங்கட்டப்பட்டுறப்
பரிவொடுமுறையுமாற்சீவன்பார்த்திடி
லுமைசெய்தவிரண்டும்வந்துழுதற்றோங்கியே
திரிவறவுறைவனாற்சிவனெந்நாளுமே. (கஎ)

அறைந்திடுஞ்சீவனுட்பந்தமற்றிட
வுறைந்திடுஞ்சிலசிலபோகமுற்றிடுஞ்
சிறந்திடச்சிலவதிகாரஞ்செய்யுமா
னிறைந்தஞானத்தொடுநிலவுமாற்சில. (கஅ)

மாசறுமூர்த்தியாய்மருவுமாற்சில
வாசனமாகவேயமருமாற்சில
காசிலத்துவாக்களைக்கடந்துமேலதாய்த்
தேசுடைச்சதாசிவமூர்த்திசேருமால் (கசு)

நவிலுமத்துவாக்களினடுவுங்கீழுமா
யுவமையின்மகேச்சுரருயருருத்திர
ரொவர்களும்புகழ்ந்திடவிருப்பராலெனத்
தவமிகவுடையவர்சாற்றுவார்களே. (உ0)

மாயையின்மேலதாய்மன்னிவைகியே
யேய்வுறுகாரணமூன்றுமெய்துமா

லாயவைதம்மை * மூன்றுவியந்தணன்
றாயமாலுருத்திரனென்றுசொல்வரால். (உக)

தயங்கியசைவர்களதீதசாந்தியென்
றியைந்திடுபதத்தினிலெய்திவைகுவார்
வயங்குமாகேச்சுரர்மன்னுசாந்தியாம்
பயன்படுபதத்தினைப்பற்றிவாழ்வரால். (உஉ)

விரித்திடுவித்தியாபதத்தின்மேவுவா
ருருத்திரபத்தர்மாலன்பரொன்றுவார்
பிரப்பியபிரதிட்டாபதநிவிர்த்தியாந்
திருத்தகுபதத்தயனன்பர்சேர்வரால். (உங)

† தேவர்தம்வருக்கத்திலெட்டுச்செவ்வனே
பாவுறுமனிதர்தம்வருக்கத்தொன்றுபார்
மேவுறு ○ பசுமுதல்வருக்கத்தைந்துமே
லோவறக்கீழதாயுறைந்துவைகுமால். (உச)

இன்னணம்வைகியேயின்பத்துன்பங்கண்
மன்னிடவருந்துமான்மற்றையநீங்கிவை
பொன்னலர்சடைமுடிபுனைந்துவைகிய
முன்னவன்றனக்கிலையாகுமுன்னிலே. (உரு)

ஒருமலமுற்றவான்மாவுக்குன்னிடி
லிருமலமுற்றவான்மாவிழிந்திடு

---

* மூன்றுவி - ஆன்மா அந்தரான்மா பரமான்மா.

† தேவவருக்கமாவன:—வித்தியாதரர் இயக்கர் இராக்கதர் கந்தருவர் கின்னரர் பிசாசர் குய்யகர் சித்தர் பூதர் அரம்பையரெனப் பத்துவகைப்படுமெனவும், இவற்றுள்ளே இயக்கரையும் குய்யகரையும் ஒன்றாக்கியும் பூதரையும் பிசாசரையும் ஒன்றாக்கியும் எட்டுவகைப்படுமெனவும் வழங்குவர்.

○ பசுவருக்கம் பதினான்கென்கின்றார் வடமொழிப்புராணத்தார்.

முறைசெயுமவற்றினுக்குற்றமும்மல
மருவுமான்மாக்கடாந்தாழ்ந்துவைகுமால். (உ௫)

உருத்திரர்சகத்தினையுறைந்திங்கேவுவார்
தரித்திடுசடைமுடிச்சதவுருத்திரர்
பொருத்தியவண்டங்கண்முழுதும்பொற்புறத்
திருத்தியவாணையேசெலுத்திவைகுவார். (உ௬)

அந்தரத்திடையினிலாணைபோக்குவார்
முந்தமரோசனேமுதலுருத்திரர்
நந்தலில்சுவர்க்கமங்கேவிநண்ணுவார்
கந்தநாண்மலர்முடிக்கயவுருத்திரர். (உ௭)

பொருந்தியமும்மலப்பொங்குநோயினைத்
திருந்தியவுயர்சிவஞானமாந்திகழ்
மருந்தினாற்றீர்த்திடுமருத்துவன்கட
லெரிந்தெழுநஞ்சமுதாக்குமீசனே. (உ௮)

மன்னியேதொடர்ந்திடுமலமுமாயையு
முன்னவன்முன்னநின்றூடுமுன்னிடி
லன்னவனியக்கிடானமருங்காந்தமுன்
கொன்னுனையூசியின்கொள்கைத்தாகுமால். (௩0)

இறைவன்முன்யாவையுமியங்கலன்றியே
யறைதரிலணுவுமிங்கியங்கலாவதோ
பிறிதுளத்தெண்ணுவோர்பெருகுவெஞ்சின
மறலியால்வருந்துவரொனவழங்கினான். (௩௧)

வழங்கலும்வானிடையெழுந்தொர்வாணிதான்
மொழிந்ததிங்குண்மையாமெனமுழங்கிற்றால்
விழைந்ததுகேட்டுறைமுனிவர்வெண்ணிலாக்
கொழுந்தணிசடையனைக்குழைந்துபோற்றினர். (௩௨)

போற்றலுந்தெளிந்திலர்புரையறும்படி
தேற்றுவதுளதெனவாயுச்செய்தவ
மாற்றல்சான்முனிவர்களாசிலாவுளத்
தேற்றிடவரன்முறையியம்பலுற்றனன். (௯௯)

தெரிதரவுளத்திறற்றேர்ந்துநோக்கினும்
விரிவுறவெளிப்படாஞானமென்றுமே
லரிறபவெளிப்படுஞானமென்றுமாங்
கிருவகையுளவுணர்ந்தெடுத்துக்கூறிலே. (௯௪)

விரிந்திடுமுத்தியான்மேவுஞானமே
திருந்திடவெளிப்படாஞானந்தீதறப்
புரிந்திடுகருமத்தாற்பொருந்துஞானமே
வருந்தறவெளிப்படுமாசின்ஞானமே. (௯௫)

மாசறவெளிப்படுஞானமன்னிட
வாசிலாவுத்தமகருமமாற்றுமின்
றேசுடைமுனிவிர்காளென்றுபேசுற
வீசிடும்வளிக்கிறைவிளம்பினரோ. (௯௬)

சிவானுக்கிரகவியல்புரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪௭௦.

---

## பாசுபதயோகமுமெண்வகைநாமமும்
## உரைத்தவத்தியாயம்.

---

கலித்துறை.

விளம்பமுத்தியைவிளைத்திடுமுத்தமகரும
முளங்கொளும்படியுரைத்தியென்றுரைத்தலும்வாயுத்
துளங்குநீடொளிமதியணிசடையனைத்தொழுது
தெளிந்துமற்றவருணர்ந்திடத்தெள்ளிதிற்றெரித்தான். (௧)

தீங்கிலாதுயர்சைவநற்றருமமேசிறப்ப
வோங்குமுத்தமகருமமென்றுரைத்திடப்படுமாற்
பாங்கின்மாசிலத்தருமத்தைப்பாற்படவியற்றின்
வீங்குவெம்முலைபங்கினன்வெளிவந்துநிற்பான். (௨)

அழிவின்மறைமுடிவினிலறைந்திடுதருமம்
பழுதிலாப்பரதருமமென்றுரைத்திடப்படுமான்
மொழியுமம்மறைமுதலினின்மொழிந்திடுதருமம்
விழையவெய்திடுமபரநற்றருமமாம்விரிக்கில். (௩)

உரைத்தவிந்தமாபரதருமத்தினையுள்ளந்
திருத்துஞானிகள்சேகறப்புரிவராற்றெரிந்தே
யருத்திமிக்கவரபரமாந்தருமத்தையன்பால்
விரித்தியற்றுவார்விண்ணவர்வியப்புறுமாறே. (௪)

பழுதில்சைவவாகமங்கணற்பரதருமத்தை
மொழியுமற்றவைதமிற்சிலமுதியநான்மறையைத்
தழுவிநிற்குமா * விருபத்தெட்டாகமந்தழுவா
தழிவிலாதசித்தாந்தத்தின்பகுதியாயமரும். (௫)

* இருபத்தெட்டாகமங்களுள்ளே, காமிகம் யோகஜம் சிந்தியம் காரணம் அசிதம் என்னும் ஐந்தும் கௌசிகமுனிவர்பொருட்டுச் சிவபெருமான் தமது சத்தியோசாதமுகத்தினும், தீப்தம் சூக்குமம் சகச்சிரம் அஞ்சுமான் சுப்பிரபேதம் என்னும் ஐந்தும் காசிபமுனிவர்பொருட்டு வாமதேவமுகத்தினும், விசயம் நிச்சுவாசம் சுவாயம்புவம் ஆக்கினேயம் வீரம் என்னும் ஐந்தும் பாரத்துவாசமுனிவர்பொருட்டு அகோரமுகத்தினும், இரௌரவம் மகுடம் விமலம் சந்திரஞானம் முகவிம்பம் என்னும் ஐந்தும் கௌதமமுனிவர்பொருட்டுத் தற்புருடமுகத்தினும், புரோற்கீதம் இலளிதம் சித்தம் சந்தானம் சருவோக்தம் பாரமேசுரம் கிரணம் வாதுளம் என்னும் எட்டும் அகத்தியமுனிவர்பொருட்டு ஈசானமுகத்தினுந் தோற்றுவித்து அனுக்கிரகிக்கப்பட்டன. இவற்றுள், காமிகமுதலியபத்தும் சிவபேதமெனவும், விசயமுதலிய பதினெட்டும் உருத்திரபேதமெனவும் பிரிவுபட்டு, சித்தாந்தமெனவும் மாந்திரமெனவும் தந்திரமெனவும் பெயர்பெறும்.

மலைவினான்மறைமன்னியமறுவிலாகமங்க
ளலகில்கோடியாய்விரியுமாலங்கவைதம்முட்
பலரும்போற்றிடப்பழுதறச்சிறந்தபாசுபத
வுலைவிலாவிரதத்தொடுஞானமுமுறுமால். (௬)

கடியதாகியகலியுகம்வந்துறுங்காலை
வடிநெடுங்கண்ணிபங்கினன் † மாதவம்பூண்டு
முடிவினான்மறைதழுவியவாகமமுழுது
மொடிவின்றாகியேயுறவிரித்துரைத்துறைதருவனால். (௭)

விரியுமாகமம்யாவையும்விளங்குறச்சுருக்கி
யரியநான்மறைறுருவுடனகத்தியன்றந்தி
பொருவிலாவுபமன்னியுவெனப்புகன்முனிவர்
கரியகண்டன்வார்கழலிணைதொழுதுசொற்றனரால். (௮)

சொற்றவாகமஞ்சொல்லுமாற்றுகளில்பாசுபதக்
குற்றமொன்றிலாவிரதத்தையாங்கதுகூடக்
கற்றைவார்சடைக்கறைமிடற்றிறைவனதருளா
லுற்றநாமமோரெட்டுளவன்னவையுரைப்பாம். (௯)

உணருமாசிவன்மகேச்சுரனுருத்திரன்விண்டு
விணையிலாருறைபிதாமகனியல்சமுசாரப்
பிணிவயித்தியனுயர்சருவக்கியன்பெரியோர்
பணியவைகிடும்பரமவான்மாவெனப்படுமால். (௧௦)

ஆதியாகியமலத்தினையகன்றுறைதலினாற்
சோதியாய்க்கலியாணனாய்ச்சுடர்ந்துவைகுதலான்
மாதவத்தினாலொழுகியமறைதெரிவல்லோ
ரோதுவார்களாற்சிவனெனவுணர்வினாலுணர்ந்தே. (௧௧)

துன்னுகின்றதோர்பகுதியைநுகர்ந்துறத்துன்னி
மன்னிவாழ்பிரகிருதியிலிருக்குமேன்மன்னி

---

† மாதவம் - யோகாசாரியர்கொள்கை. இது பின்னர்வரும்.

முன்னமேயுறைமுழுமுதற்பொருளையென்நாளும்
பன்னுமான்மறைமகேச்சுரனென்றுபாற்படவே. (கஉ)

துன்பமோடுறைதுன்பகாரணத்தையுந்துடைத்தே
யின்பநல்குதலாலுருத்திரனெனவிசைப்பா
ரன்பினுலுறைதத்துவங்களைநிறைத்தமரு
மின்செய்வார்சடையண்ணலைவிண்டுவென்றுரைப்பார். (கங)

தயங்குதென்புலத்தவர்கடந்தந்தையேயாகி
வயங்கிவைகலாற்பிதாமகனெனவழங்குவரான்
மயங்குவன்சமுசாரத்தைமாற்றலான்மறைக
ளியம்புவன்சமுசாரநல்வயித்தியனென்னும். (கச)

மேவும்யாவையும்விளங்குறவேயறிந்திடலாற்
றேவிலாதுணர்ந்திடுசருவக்கியனென்பா
ராவியாவைக்குமேலதாயமர்தலாலறிந்தோ
ரோவிலாதுறைபரமவான்மாவெனவுரைப்பார். (கரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மார்புகழுத்தோடுண்ணாக்குவயங்குபுருவநடுமற்றை
யேர்செய்பிரமரந்திரமாமிவற்றிற்சிவனென்னுமமுத
லோருநாமமைந்திணையுமுணர்ந்துநிவிர்த்திகலைமுதலா
மாருங்கிரந்தியைந்திணையுமடைவிற்சுத்திசெயவேண்டும். (கசா)

உரைக்கும்*புரியட்டகவுடம்புஞ்சுத்திசெய்தாங்குச்சிமேல் [ங்க
விரிக்கும்வெண்டாமரைப்பொகுட்டினுமையாளொருபாலினில்விள
விருக்குஞ்சிவனைப்பாவனையாலிணர்சேர்மலராற்பூசித்துத்
திருத்தியுளத்தைச்செவ்வனேபிராணயாமஞ்செயவேண்டும். (கஎ)

---

* புரியட்டகமாவது-எட்டுத்தத்துவங்களாலியைந்த சூக்குமதேகம். இது "வாய்ந்தமனம் புத்தியாங் காரந்தன் மாத்திரையு, மாய்ந்துபுரி யட்டகமென் றூர்." என்னும் இறைவனூற்பயனாலுணர்க.

உந்தியெழுந்தகனலிடையின்முன்னமுரைத்தவோரெட்டா
மந்தமில்லாநாமத்தாலவிதான்சொரிந்தாங்‡கட்டபுட்பஞ்
சிந்தைசெய்துகரங்கடமிற்றெண்ணீர்வாங்கிச்சிவன்பொருட்டா
லிந்தவாவிதனைக்கொடுக்கவேண்டுமறியவியம்பிடிலே. (கஅ)

இவ்வாறியற்றிற்பாசுபதயோகஞானமிவையெய்தி
மைவ்வார்கூந்தலுமைபாகன்மலர்ப்பூங்கமலத்தாள்சேர்வார்
செவ்வேயிவ்வாறினிதியற்றித்திகழ்நான்முகத்தோன்முதலினோ
ரொவ்வாப்பாசுபதராகியுவந்துவைகுவாரென்றான். (கக)

பாசுபதயோகமுமெண்வகைநாமமும்
உரைத்தவத்தியாயமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-சஅக.

## பாசுபதவிரதமுரைத்தவத்தியாயம்.

உவந்துவைகுவாரென்னவுரைத்தலோடுமுவந்தோங்கு
தவஞ்செய்முனிவர்பாசுபதவிரதமியற்றுதன்மையினைப்
பவந்தீர்ந்திடவேயுரைத்தியெனவுரைத்தலோடும்பாயழலிற்
சிவந்தமேனியிறைவனடிதொழுதுவாயுத்தெரித்தனனால். (க)

மறைசொலிந்தவிரதத்தைமழுவாளேந்துமணிமிடற்றோ
னுறையுங்கோயிறனிற்றருக்கனுற்றவனத்திற்சித்திரையென்
றறையுந்திங்கடனிற்பதின்மூன்றாயபக்கம்வந்தெய்தி
னிறையும்புனலிற்குடைந்தாடிக்கருமம்யாவுநிரப்பியே. (உ)

‡ அட்டபுட்பமாவன "இலகிய புன்னைவெள் ளெருக்குச் சண்பக, நிலவிய வலம்புரி நீலம் பாதிரி, யலரிசெங் தாமரை யட்ட புட்பமாம், புலரியம் போதொடெப் பொழுதுஞ் சாத்தலாம்." என்னும் புட்பவிதிச்செய்யுளாலுணர்க.

அருத்தியோடுந்தன்குருவையண்ணலடியைப்பூசித்து
விரித்தோர்வெள்ளைவெண்டுகிலன்கணிந்து நீறும்விரைச்சாந்துந்
தரித்துக்கீழ்பால்வடபாற்முன்பார்த்துத்தருப்பைபமிசையிருந்து
கரத்திற்றருப்பைபதனைப்பற்றிப்பிராணாயாமங்கனிந்தியற்றி. (௩)

கயிலைவரையின்மிசைவாழுங்கண்மூன்றுடையதனிமுதலை
மயிலஞ்சாயலுமையவளைமனத்தினிடையேயுறநினைந்து
முயலுமிந்தவிரதத்தைமுடிக்கவருள்வீரெனவுரைத்தாங்
கியலப்பல்காலெடுத்தெடுத்துத்துதித்துமனத்தாலிறைஞ்சியே. (௪)

பகரும்பன்னீராண்டுதானன்றிப்பத்தோடிரண்டாய
துகளினாட்கடாமன்றியுடலந்தொலையுமளவுதா
னிகழும்விரதந்தனைக்கணித்துநெய்யோடிசில்விறகிவற்றைப்
புகைகால்வெய்யசெந்தீயிற்பொருந்தச்சொரியவேண்டுமால். (௫)

மயநீர்தருதத்துவசுத்தியோமம்வயங்கவாற்றியபி
னியலக்கையாற்கோமயத்தையெடுத்துச்செந்தீயிடைவைத்தாங்
கயலேயவியுண்டற்றைநாண்முழுதும்வைகியடுத்தநாண்
முயலுங்கருமமெவற்றினையுமுன்னைநாள்போன்மிகமுடித்தே. (௬)

முடித்தங்கருந்தாதற்றைநாண்முழுதுமிருந்துபூரணையில்
வடுத்தீர்கருமமியற்றிமுனம்வளர்த்தேசெந்தீவைத்தநீ
றெடுத்துச்சடைகணீட்டியன்றிமழித்துக்குடுமியெழில்பெறச்செய்
துடைக்கும்புனலினிடைமூழ்கிக்கற்றோய்கலிங்கமொன்றுடுத்தே. (௭)

உடுத்தோர்தண்டங்கைப்பற்றியுச்சிமுதலாத்தாளளவும்
வடித்தவெண்ணீற்றினைப்பூசித்திரிபுண்டரம்வாய்த்திடவணிந்து
தொடுத்துச்சிவயோகத்தினைநன்கியற்றவேண்டுந்துகளறயா
மெடுத்திங்குரைத்தபடிகாலமூன்றுமியற்றலியல்பாமால், (௮)

வசைதீரிந்தப்பாசுபதவிரதம்வகுத்தபடியாற்றிப்
பசுவாந்தன்மையினைநீங்கிப்பசும்பொன்றன்னால்வெண்பொடியா

லசைவில்கமலந்தனையியற்றிவைக்கவிவைகளாங்கிலவே
ணசையற்றியைந்தவுளத்திறனன்பொற்கமலந்தனைநினைந்தே. (கூ)

படிகலிங்கந்தனையாவினைந்தானெய்யாற்பாலிற
றொடியுமோராயிரங்கலசநீராலாட்டிநுண்டுகிலாற்
கடிதினந்தநீரெல்லாந்துடைத்துக்கமலந்தனிலிருத்தி
யொடிவிலைந்துமுகமுடையவொருவனுகவுன்னியே. (கO)

மலயமலையிற்செஞ்சாந்தும்வாசங்கமழுங்குங்குமமும்
விலையில்கருப்பூரத்துடனேகுழைத்துச்சாத்திமிகுவாச
மலருமலர்மென்றொடைசேர்த்தியம்பொற்கலன்களொடுத்தணிந்தாங்
கிலகுதண்டாமரைகுவளைவில்லமிவையாயிரஞ்சொரிந்தே. (கக)

தூபமொடுதீபமுமுதவித்தூயகரியநிறத்தவா
மாவின்பாலாலட்டசுவையடிசிலளித்தங்கார்ந்தெழுந்த
வோவாவன்பாற்பூசனைநன்காற்றவேண்டுமுற்றடர்ந்து
மேவுங்கொடியவெய்யவினையாவுங்கரிந்துவீழ்ந்திடவே. (கஉ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆயிரங்கமலங்குவளைவில்லங்கள்கொடுநனியருச்சனைபுரிந்த [வியற்றி
தேய்வறுபலத்தையடையலாம்வகைக்கோரொன்றொளிர்செம்பொனு
யேய்வுறத்தூவியியம்பு*மட்டாங்கவருக்கியந்தன்னையோர்பெறவே
நாயகன்றிருமுன்னளித்திடவேண்டுமென்பரானவையறவுணர்ந்தோர்.

காரகிலகோரமுகத்தினுமற்றைறக்கழறிடுசத்தியோசாத
வோர்பெறுமுகத்தின்†மனோசிலைதனையும்வாமதேவம்மெனுமுகத்தி
லாரமுமொளிர்தற்புருடமாமுகத்திற்பொன்னரிதாரமுமழகா [ர்.
ரோருமீசானமுகத்தில்வெண்ணீறுமணிந்திடவேண்டுமென்றுரைப்பா

வெள்ளகிலகோரமுகத்தினுமற்றைறவிளங்குதற்புருடமாமுகத்திற்
றன்னரில்காரகிலுஞ்சத்தியோசாதமுகத்தினிற்றூவில்குங்குலவு

* அட்டாங்கவருக்கியம் - கிரியாபூசை விதியுரைத்தவத்தியாயத்துட் காண்க. † மனோசிலை - வெள்ளரிதாரம்.

முள்ளிடும்வாமதேவமாமுகத்திற் ‡ சௌகந்திகமுமுறக்கமழுந்
தெள்ளு $ சீதாரிதன்னையீசானமுகத்தினும்புகைத்திடல்சிறப்பே. (கரு)

கருப்புரதீபங்கொடுத்ததன்பின்னர்முகங்களோரைந்தினுங்கவினை
வருக்கியமளித்துச்சிறப்புடைமுதலாவரணத்திலங்கரன்றனையு
நெருப்புமிழ்வடிவேற்குகனையும்பஞ்சப்பிரமங்கடமையுநேரில்லாத்
திருத்தகவுறையாறங்கங்கடமையுஞ்சேகரப்பூசிக்கவேண்டும். (கசு)

பிறங்கிடுமிரண்டாமாவரணத்திற்பெட்புடை ○ யனந்தனைமுதலாஞ்
சிறந்திட்டுறையும்வித்தியேச்சுரரைப்பூசனைசெய்திடல்வேண்டு
மறைந்திடுமூன்றாமாவரணத்திற்பவன்முதலட்டமூர்த்திகளை
யுறைந்தமாதேவன்முதற்பதிணொருவர்தங்களைப்பூசித்தலுரித்தே. (கஎ)

காசறுநாலாமாவரணத்திலுறைகணநாதர்கடம்மைப்
பூசனைசெய்யவேண்டுமாலைந்தாமாவரணத்தினிற்பொருந்த
வேசிலாத்திசைகாவலர்தமையன்னோரெரியுமிழ்ந்திலங்கிடப்பற்றுந்
தேசுடைப்படைகடம்மைநாண்மலராற்பூசனைசெய்திடல்வேண்டும். ()

தாவிலாச்சனகன்முதலினோர்தம்மைச்சாற்றிடுகோட்களைத்தகைசா
றேவரைத்தேவகன்னியர்தம்மைச்சித்தசாரணர்தமைச்சிந்தி
மேவுநாகரைவாளசுரரைமற்றைறமுனிவரைவிளங்குயோகிகளை
வாய்விரிநறியமலர்பலதாங்கிப்பூசனைவகுத்திடல்வேண்டும். (ககூ)

குரவரைக் § கோமாதாக்களாயினரைக்கோதிலாவயிரவர்தம்மை
யரியவாங்கணங்கடம்மையும்பூசையாற்றிடல்வேண்டுமாலதன்பின்

---

‡ சௌகந்திகம் - நீலோற்பலக்கிழங்கு. $ சீதாரி - சாம்பிராணி.

○ அனந்தனாதியரைக் காமியகன்மபலமுரைத்தவத்தியாயத்துட்காண்க.

§ கோமாதாக்கள் - ஐவகைப்பசுக்கள். இவற்றின்பெயரும் நிறமும் "தோன்றியிடு நந்தைபத் திரைசுரபி சுசீலையொடு சுமனை யென்ன, வான்றிறமோ ரைந்துமெழிற் சத்தியோ சாதமுத லரன்மு கத்தி, லேன்றமுறை கபிலைநிறங் கருமைமிகும் வெண்மையெழுந் திலங்கு செந் திக், கான்றபுகை நிறஞ்செம்மை யெனுமைந்து மவற்றினிறங் கண்டு கொண்மோ." என்னும் சித்தாந்தசிகாமணிச்செய்யுளானுணர்க.

புரிசடையிறையைப்பூசனைசெய்துபொங்கழலிடையவிசொரிந்து [ம்.
மருவுறுவினைபோம்படிமிகத்துதித்துவலங்கொடுபணிந்திடல்வேண்டு

தொழுதுநம்மிறைவன்செய்யபொற்கமலத்துணையடிக்காவியைய ளித்து, விழைவொடுகுருவையெழுதுபுத்தகத்தைத்விரைமலர்தூவியேய ணிந்தாங், கழிவிலாவன்பாலருக்கியமுதவியட்டபுட்பங்களுஞ்சாத்திக், குழகனையாவிதன்னிடையாவாகித்திடல்வேண்டுமாற்குறித்தே. (உக)

இவ்வகைபூசைசெய்துநன்காகவெடுத்தநல்விரதமாற்றியபின்
செவ்விதிற்பூசைபுரிந்தலிங்கத்தைதச்சிறந்தபொற்குமரையோடு
மவ்வியமவித்தகுருவினுக்களிக்கவன்றெனிலமரர்கள்போற்றக்
கௌவைநீொழுந்தகருவிடமுண்டகண்டனுக்களித்திடல்வேண்டும். ()

அளித்துமாமறையோரநேகருக்குண்டியளிக்கவிவ்விரதமாற்றிடு வோன், களித்துநல்லுண்டியொழிகமற்றன்றேற்காய்கிழங்கருந்துகவ ன்றேற், றெளித்திடுமான்பானுகருகவன்றேலையமேற்றுண்கதேர்ந்தன் றேல், வளைக்கையாள்பங்கனடியிணைமுன்னியோர்பகன்மாசறநுகர்க.

மண்ணினினீற்றிற்சருகினில்விரிந்தமரவுரிமீதினிற்கிடக்க
நண்ணியேபிரமசரியமாய்மன்னியீருவாவட்டமிநன்கா
மெண்ணுறுபதிறைன்கிரவியின்கிழமையியறிருவாதிரையிவற்றி
லுண்ணல்செய்யாதுநல்விரதத்தையாற்றிடல்வேண்டுமாலுவந்தே. உச

பதிதர்சண்டாளர்முதலினோர்தம்மைப்பார்த்திடாதொழிந்துளமிக்க
கொதியழற்கோபத்தாலுயிர்யாவுங்கொன்றிடறவிர்ந்துநன்காக
விதிமுறையுரைத்தபடிநனியுறைந்துவெள்ளைவெண்ணீறெடுத்தணிந்து
மதியணிசடையோன்றனக்குறுபூசைவகுத்திடவேண்டுமான்மகிழ்ந்தே.

இனையவாறிந்தவிரதநன்காற்றியீற்றினிறுகிளங்கன்றுங்
கனைகுரலாவுந்தானமாங்குதவிக்கடுநடையேற்றையும்விடுத்து
முனைவராயாங்கணுறைமறையோர்க்குப்பூசனைமுடித்திடவேண்டு
மனமுளமற்றைறத்திங்கள்கடோறும்பூசனையாற்றிடல்வகுப்பாம். (உரு)

வயிரமோடொளிருமரகதமுத்துநீலம்வண்பதுமராகத்தோ
டியல்பெறுகோமேதகந்துவர்வயிடூரியமெழிற்புருடராகஞ்செவ்
*வெயில்செய்மாணிக்கஞ்சந்திரகாந்தமிவற்றினல்வித்நலிங்கத்தி
லயலவாம்பதினேர்திங்களுமடைவேபூசனையாற்றிடல்வேண்டும். ௨எ

மாசிலிம்மணிகள்கிடைத்திலவென்னில் வயங்குபொன்வெள்ளி
யொண்செம்பாங், கேசலில்சிலைமண்சந்தனமிவற்றாலியற்றியவிலிங்கத்
திலன்பா, லாசறப்பூசைபுரிந்திடவேண்டுமாற்றியவிரதவீற்றினிற்றன்,
றேசுடைக்குருவின்வாய்மையான்மிகவுஞ் சின்னுணித்தருப்பைபயைவி
ரித்தே. (௨அ)

விரித்திடுதருப்பைபமீதினிற்கீழ்பாலல்லதுவிளங்குறுவடபாற்
றிருந்தகநோக்கியிருந்துதன்கையிற்சேகறத்தருப்பைபயைப்பற்றி
வருத்தமில்பிராணுயாமஞன்கியற்றிமலைமகளோடுறைமுதலை
யருத்தியான்முன்னியஞ்செழுத்துணர்ந்துதலைமிசையங்கைகள்கூட்பி·

அண்ணனின்னருளாலாசிலிவ்விரதமாற்றினேனென்றுரைசெய்து
தண்ணிளந்தருப்பைபவடதிசையெறிந்துதண்டமீர்மரவுரிதனைந்து [ட்டி·
வெண்ணிறத்துகிலொன்றணிந்துமும்முறைறநீர்குடித்துறுப்பினில் விர
நண்ணியபாவமகலவைஞ்செழுத்தைநாவினுலுரைத்திடவேண்டும். [றி

இத்தகைவிரதமுடல்விழுமளவுமாற்றுவோனயிட்டிகனென்று
மத்தியாச்சிரயியென்றும்பாசுபதனென்றுமறைறந்திடப்படுவா
னுத்தமவிரதம்பன்னிருநாட்களுண்டிவிட்டாற்றுவோனைய்ய
முத்தினம்பூசியாற்றுவோனுரைத்தநயிட்டிகனெப்பரான்மொழியில். ()

ஆசறமுற்றத்துறந்தவனிந்தவிரதத்தையநுதினமாற்றின்
மாசறநசையொன்றின்றியேயொருவன்வரன்முறைறவயங்குறவாற்றி
லேசலிலிவர்கட்கியாவரேயொப்பாரிலங்குவெண்ணீற்றினைமெய்யிற்
பூசுவோர்பாவமுழுவதுந்தணப்பப்பொருவறுமுத்திவீடடைவார். ௩௨

* வெயில்செய்மாணிக்கம்-சூரியகாந்தமணி.

சிவாக்கினிதனக்குவீரியமாகுந்திகழும்வெண்ணீறுவெண்ணீற்றை
யுவாக்கடல்விருப்பினணிபவர்தம்மையுற்றிடுபேய்பலபூதந்
தவாத்திறல்கெட்டுநலிந்திடாதகலுஞ்சடைமுடிபுனைந்திடுசிவனை [ர்.
யவாக்கெடத்தோற்றுவித்தலாலதனைப்பசிதமென்றறைவரால்றிந்தோ

பன்னிடுபாவம்பற்றறப்பறியப்பறித்தலாற்பசுமமென்றுரைப்பார்,
மன்னயிச்சுரியம்வழங்குதன்மையினுன் மாசறுவிபூதியென்றுரைப்பார்,
துன்னிடுபேபுராத்தல்செய்தலாலிரக்கையென்பராற்சொல்வதென்னெடு
த்தீங்,கின்ன *வெண்ணீற்றையணிந்துநல்விரதமாற்றுவோன்சிவனென
ப்படுவான். (கூச)

மாறியதொல்லைவல்வினையாவுமாய்ந்துகெட்டழிந்திடவெள்ளை
நீறெடுத்தணிந்தேயுயர்ந்தனன்யார்க்குநிகழ்த்துபமன்னியுவென்பா
றுைறறிமுனிவிர்காளெனவுரைத்தானலைகடலுலகெலாந்தனது
வீறிஞற்றுங்கியுறைந்திடும்வாயுவிண்ணவனறிவுறவிரித்தே. (கூரு)

பாசுபதவிரதமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருஉச.

---

## உபமன்னியுவின்பேறுரைத்தவத்தியாயம்.

விரித்தலுஞ்சிறுவனுயவம்மறையோன்வெள்ளைவெண்ணீற்றின்வீறறிந்
திருத்தியவுணர்வாலாகமமுணர்ந்துசேகறுதவநனியியற்றி [அ
வருத்தமின்ஞானமடைந்துளமகிழ்ந்தவாறுரையென்னலுமுனிவர்
கருத்திஞலிறைவனடிமலர்நினைந்துவாயுவுங்காசறவுரைத்தான். (க)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகில்வாழுஞ்சிறுவரைப்போற்சிறுவரேமற்றிவரேங்கி
நிலவுவானிலுறைசித்தனிலவுமந்தவானீங்கி

---

* வெண்ணீறு உயிர்களது மலத்தைக்கழுவுதலால் சாரமெனவும்
பெயர்பெறும்.

யலகிறவத்துவியாக்கிரபாதனுக்குமகவாயடைந்தனனாற்
கலைவெண்டிங்கண்முடித்தசடைக்கண்மூன்றுடையோனருளினால். ௨

அடைந்தசிறுவனன்னைமுகநோக்கிப்பால்வேட்டழுதிடலு
மடந்தையவளும்பாலென்றுமாவைக்கரைத்துத்தான்கொடுப்பத்
தடங்கண்கலுழமீட்டுமவள்சிவனைநோக்கித்தவம்புரியா
திடைந்தேமாவின்றீம்பாலுக்கெங்ஙன்செல்வேமெனவுரைத்தாள். (௩)

உரைப்பச்சிவனிங்குளனென்னிலொலிபாற்கடலைப்பெறுவனென
வருத்தமகற்றுசிவனுளனோவென்னவெவன்கொல்வழங்கினையால்
விரித்தமலரோன்முதற்றேவர்தம்மைப்படைத்துமெய்யேவ
றிருத்தியுறையுஞ்சிவனுளனேயவன்றாட்கடிமைசெய்தியால். (௪)

அடிமைபூண்டுமந்திரங்களவைக்குமேலாமஞ்செழுத்தை
யொடிவின்றாகச்செபித்திடுதியோங்குவிரசாக்கினியிலுள
பொடிநீறிதுநின்றாதையெனக்களித்தான்வினைகள்போயகல
விடுநீ † யகோராத்திரத்தினாலிதனையென்னக்கொடுத்தனளால். (௫)

கொடுப்பவேட்டுச்செங்கலாற்கோயிலியற்றிமண்ணினாற்
கடுத்தாழ்மிடற்றோனிலிங்கத்தைவகுத்துக்கடிநாண்மலர்தூவி
யடுத்துத்தாழ்ந்துமலரடியைவாழ்த்தியாசின்மாதவத்தைத்
தொடுத்துப்பன்னாட்சிறிதுமுளந்துளங்காதுகியுறைந்தனனால். (௬)

உறையுங்காலைமரீசிமுனம்வைதங்குரைப்பப்பேயாகிச்
செறியுமுனிவர்புதல்வர்சிலர்செங்கட்பூதமுடன்பொருந்தி
யறிவினாற்றுந்தவமழியாவுரப்பியடரவஞ்செழுத்தை
முறையேகூறக்கேட்டிழந்தமுன்னையுருவமடைந்தனரால். (௭)

ஆயகாலைமணிமிடற்றோனமரர்கோமானுருத்தாங்கி
யேயப்பொருந்திமழுவேந்துமிறைவன்றன்னையிகழ்ந்திடலும்
வாயினகோராத்திரந்தன்னைச்செபித்தாங்கவனைமாய்த்திடுவான்
றூயநீற்றையங்கையினால்வாங்கிச்சுளிந்தேயெறிந்தனனால். (௮)

---

† அகோராஸ்திரம்-பஞ்சாக்கரம்.

எறிந்தவகோராத்திரந்தன்னைநந்திவிலக்கவெழிற்சிறுவன்
சிறந்தவாவிவிடுவனெனமூலாக்கினியைச்செவ்வனே
யுறைந்தாங்கெழுப்பச்சிவனுணர்ந்தேயோங்குகனலையவித்தவன்முன்
மறங்கொண்மழுவாள்பிடித்திடபமேறிவரைமாதொடும்வந்தான். (கூ)

முழங்கிவானதுந்துபிநின்றதிர்ந்தமலரோன்முதலமரர்
விழைந்துகோடிபலகணங்கள்சூழ்ந்தவீழ்ந்தமலர்மாரி
யெழுந்துபெருகுமானந்தவின்பவாரிக்கடலினிடை
யழுந்தியுமையோர்பாகன்மலரடியிற்றாழ்ந்துபணிந்தனனால். (௧௦)

பணிந்தவவனையுழைக்கூவியுச்சிமோந்துபரமேட்டி
பிணங்குவிழிமாதினைநோக்கியுன்றன்பிள்ளையிவனென்ன
வணங்குமருங்குன்மற்றவளுமலர்க்கையவன்றன்றலைமேல்வைத்
துணங்கியிறவாப்பதந்தன்னையடைதியென்னவுதவினளால். (௧௧)

புரட்டுதிரையபாற்கடலும்போதாச்சுவையதீம்பாலைத்
திரட்டியவன்றன்கைக்கொடுப்பச்செம்பொன்வடபான்மேருவினை
மருட்டநிதியம்பலகுவியாவளைகவேந்தன்மகிழ்ந்தவன்றன்
பொருட்டாங்குதவமற்றவனும்பொங்குமுவகையாற்கொண்டான். ()

அரன்றான்பாசுபதஞானம்விரதம்யோகமழிவின்றித்
திருந்திவிரிந்தசங்கிதையாகமங்கள்செய்யுஞ்செயல்கொடுத்து
விரிந்தவானத்துறையமரர்முனிவர்விழைந்துபோற்றிசைப்பப்
பொருந்தியடைந்தான்வடகயிலைப்பொன்னஞ்சாரலெனப்புகன்றான்.

உபமன்னியுவின்பேறுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௫௬௭.

---

பூருவகாண்டமுற்றுப்பெற்றது.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# உத்தரகாண்டம்.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகக்கடவுள்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மேருமால்வரையைப்புழைக்கையாற்பழமென்றெடுத்தலும்விரிக திர்ப்பரிதி, யேர்பெறுவெயிலொளியங்கிடாதொருபாலிருண்டதுகண்டு மற்றிதுதா, னூர்தரவின்னும்பழுத்திலதெனத்தன்னகத்திடையெண்ணி யாங்கதனைச், சீர்பெறமுன்போல்வைத்தயனடக்குங்கயமுகன்சேவடி தொழுவாம். (க)

### சிவபெருமான்.

ஆடகப்பசும்பொனணிபெறவணிந்தவலர்மலர்ப்பூவணையதனி, லா டியவுமையாளொடேர்த்தருள்வாளொளிதிகழ்பூஞ்சிலம்போடு, பாடகம ணிந்தசிறடிப்பஞ்சியொளியிறைற்பணிமதிசிவப்பத், தோடவிழ்கொன் றைமவுலிதாழ்த்திறைஞ்சுஞ்சுடர்மழுவண்ணலைத்தொழுவாம். (உ)

### சிவசத்தி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாவிவணங்குமடியவர்தம்பாசமனைத்தும்பற்றொழிந்தே
யிரியநூறித்தன்றுணைத்தாளேர்சானிழலினிடைவைக்குங்
கரியமிடற்றுமறைமுதல்வன்கருணைவாரிச்காரண்ணம்
புரையுமுமையாளிருகமலப்பொற்றாள்பணிந்துபோற்றுவாம். (௩)

சுப்பிரமணியக்கடவுள்.

மேற்படி வேறு.

தாமுறைறபதங்கணீங்கித்தலைதடுமாறிநெஞ்சி
லேமமுற்றிரங்கிவானோரொம்மைநீகாத்தியென்ன
வாமுறையறியாறுசியழலெனக்கொதிக்கும்வெஞ்சூர்
மாமுதறடிந்தவெள்வேல்வலத்தனைவணங்குவாமே. (ச)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

## கண்ணன்சிவதீக்கைபெற்றவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கதிரோனுச்சிதனிலடைந்தகாலைவாயுக்காசிலா
மதியாலுயர்ந்தமாமுனிவர்மாசின்றுகக்கடன்யாவும்
விதியாற்கழித்துமீட்டுமவணுறைந்தவேலைமெய்த்தவத்தோர்
துதியாவாயுத்தனைநோக்கிப்பின்னுமிவைகள்சொற்றனரால். (க)

மாசிறவத்தான்மிக்குயர்ந்தவுபமன்னியுத்தன்பான்மருவி
வீசுங்கதிர்கான்மணியணிந்தகண்ணன்வினைகள்கெட்டோட
வாசின்றுயர்ந்தமெய்ஞ்ஞானமடைந்தவாறிங்கறைதியென
வீசனடித்தாமரைபோற்றியுலவைவேந்தனிசைத்தனறல். (உ)

கண்ணன்ஞானமடைந்திடவுங்கனிவாயமுதச்சின்மழலை, வண்ண மகவையடைந்திடவும்வேண்டிமுனிவன்பால்வந்து,நண்ணிவலங்கொண்டிறைஞ்சுதலுநவைசெய்மலம்யாவையுங்கழிந்த, தெண்ணிமுனிவன்வெண்ணீற்றைறயெடுத்தாங்கவன்றன்மெய்யணிந்தான். (௩)

மேற்படி வேறு.

பன்னிருதிங்கள்பாசுபதவிரதத்தைப்பாங்கா
மன்னுறவியற்றுவித்துமாசிலாஞானஞ்சொன்ன

னன்னைதயடைந்துதூயபுதல்வனையடையவேண்டிப்
பொன்னலர்சடையோன்றன்னைப்போற்றிமாதவங்கள்செய்தான். (௪)

செய்தமாதவத்திற்காகத்திருவுளமிரங்கிமிக்க
வைதெழின்மேனிபாகனுங்கவன்முன்னமெய்த
வையகமுழுதுமுண்டமணிநிறவண்ணனேக்கிக்
கையிறைற்றொழுதுநம்பன்கழலிணைபோற்றிநின்றான். (௫)

போற்றலுமவனைநோக்கிவேட்டதென்புகறியென்ன
வாற்றல்சால்புதல்வன்றன்னையளித்தியாலென்னலோடுங்
கூற்றினைக்கடந்தோன்வேட்டபுதல்வனைக்கொடுத்துத்தீந்தே
னூற்றியமலர்ப்பூங்கோதையுமையொடுமறைந்துபோனான். (௬)

மறைதலுங்கண்ணனுள்ளமகிழ்ந்துவாழ்மனையிலெய்திப்
பொறிநுதற்கருங்கட்சாம்பவதியெனும்பூத்தகொம்பி
னிறுநுசுப்பென்னவீங்குமிணைமுலைகுழையப்புல்லக்
கறைகெழுவேற்கட்செவ்வாய்க்கனங்குழைகருக்கொண்டாளே. (எ)

நாண்பொறைசுமக்கலாற்றாநன்னுதன்மதர்வைநோக்கிற்
பாண்படுகிளவிவாடிப்பனிக்குநுண்ணுசுப்புவீங்கச்
சேண்படுகாதமோரோரடியெனத்தேம்பிமாழ்கிப்
பூண்சுமந்தெழுந்தவெய்யபுணர்முலைபால்கொண்டாளே. (அ)

எய்க்குநுண்மருங்குதோன்றவெழுந்துவாருரோமரேகை
கைக்கும்வெவ்விடஞ்சேர்கண்டன்கனிந்தநல்லருளால்வந்தா
னிக்கடலுலகுக்கெல்லாமிறையவனிவனேயென்ன
மைக்கரிபோக்கிவிட்டவண்ணமேநிகர்க்குமன்றே. (௯)

பசுங்கழையிணையேயென்னப்பணைத்ததோண்மெலிந்தநீங்கா
தசும்புபொன்வளையைப்பற்றியணிபசுங்கொடிகண்மான
விசும்பிணைக்கறுவிவீங்குவெம்முலைமுகட்டின்வாய்ப்ப
விசைந்தனவெழில்சேர்பச்சைப்பசுநரம்பெழுந்துமாதோ. (௧௦)

வட்டவாண்மதியுங்கீற்றுவகிரிளம்பிறையுமாங்கே
யொட்டியதென்னத்தோன்றுமொளிகிளர்முகமுஞ்செவ்வி
விட்டலர்நுதலுஞ்சோதிவிளர்த்திடமெலிந்துவாடுங்
கட்டழகுடையபொற்றேட்கதிர்வளையொழுகிற்றன்றே. (கக)

இன்னணஞ்செவ்விவாய்த்தவிளங்கிளிமருட்டுஞ்சொல்லாள்
மன்னியவெழில்சேர்செய்யபுதல்வனை வயிறுவாய்த்தாள்
பொன்னணிமணிப்பூண்மாயன்புதல்வனைமகிழ்ந்துநோக்கி
மின்றெளிர்மணியும்பொன்னும்வேதியர்வெறுப்பவீந்தான். (கஉ)

அம்மையோடுறைவோன்றந்தபுதல்வனங்காதலாலே
*தும்பறவுணர்ந்துசாம்பனெனப்பெயர்துலங்கக்கூறி
வம்புலாங்கூந்தற்சாம்பவதியெனுமாதினோடு
மும்பருமுவப்பநாளுமுண்மகிழ்ந்துறைந்தானன்றே. (கங)

இருநிலத்தாய்தன்மெய்யிலெழில்பெறத்தவழ்ந்துமம்பொன்
வரிவளையணிந்தகைத்தாய்மடநலாள்வனப்புவாய்ந்த
கரிமுகமுலைப்பாலுண்டுங்கண்ணனுண்மகிழமைந்த
னொருமுதிர்முதியோர்நாளுநடத்திடநடைகற்றானே. (கச)

கனிவுறமுக்காற்பொற்றேர்காண்டகவுருட்டிஞாலத்
தனைவருமபுகழ்ந்துபோற்றவாசறவளர்ந்தபின்னர்
முனிவரர்கொடுத்தஞானமுழுவதுமுணர்ந்துபாயுந்
துணைபரித்தடந்தேரோடுதூங்குகைக்களிறுமூர்ந்தான். (கரு)

அறைந்தவிக்காதைதன்னையாசறவுணர்ந்துகேட்போர்
சிறந்தவைகுண்டந்தன்னிற்சேர்ந்தணிதுளவப்பைந்தார்
மறங்கெழுதிகிரிமாயன்வழங்குமெய்ஞ்ஞானம்பெற்றுத்
திறம்பலின்றிமேவுஞ்சிவகதிசேர்வரொன்றே. (கசு)

கண்ணான்சிவதீக்கைபெற்றவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உ०.

---

* தும்பு - குறைவு.

# சிவன்பசுபதியாதன்முதலியவுரைத்த அத்தியாயம்.

---

சிவகதிசேர்வதென்னச்செப்பலுங்கண்ணன்கேட்ப
நவையறவுரைத்தபாசுபதவுயர்ஞானமேதிங்
கெவர்களும்புகழுமீசன்பசுபதியாவதெங்ங
னவிலெனமுனிவர்வாயுமுதல்வனுநவிலலுற்றான். (௧)

மந்தரவரையிலீசன்வாணுதலுமையாள்கேட்ப
முந்தைநாளுரைத்தஞானமுதுமறையந்தனுள
னந்தமிலறிவின்மிக்ககண்ணனுக்கறைந்தவாறே
யிந்தநாளுரைத்துமென்றேவெடுத்துணர்ந்துரைக்கலுற்றான். (௨)

கவனவேறுகைக்குமுக்கட்கடவுளுக்கடிமைபூண்ட
தவமிகுமறைவலாளன்றன்னுழையடைந்துகண்ண
னெவர்களும்பணிந்துபோற்றுமிருந்தவமுனிவவென்றே
யவனிருதாளிற்றாழ்ந்தாங்கிவையெடுத்தறையலுற்றான். (௩)

அசைவறவிறைவன்றேவிக்கறைந்திடுஞானங்கேட்பா
னசையுடைத்துள்ளம்வெள்ளைநாண்மதிமுடித்ததேவன்
பசுபதியானவாறும்பசுவிவையென்னுமாறு
மிசைவுறப்பசுக்கள்பாசத்தியாத்திடப்பட்டவாறும். (௪)

ஆர்த்திடுபாசநீங்கியகன்றிடுமாறுந்தோன்ற
வோர்த்துநீயுரைத்தியென்னவுரைத்தவக்கண்ணன்பாவந்
தீர்த்திடவேண்டிமுக்கட்சிவன்மலரடியைநெஞ்சிற்
பார்த்துறப்பணிந்துயாவும்பழுதறப்பகரலுற்றான். (௫)

மறையவன்முதலாநிற்பதிறதாமெவையுமன்னி
யுறைதருபசுக்களாகுமுற்றிடுபசுக்கட்கெல்லா
நிறைதருபதியாயென்றுநிலவியேயுறைதலாலே
யிறைவனைவேதநான்கும்பசுபதியென்றுகூறும். (௬)

மாயையேமுதலாய்நின்றமலங்களாங்கயிற்றால்வாங்கி
யெய்வுறப்பசுக்கடம்மைப்பிணிப்பனாங்கிறைஞ்சியேத்தி
லாயவப்பிணிப்பைநீக்கியடியருள்வைத்துமிக்க
தூயவாம்பதத்திற்சேர்த்தித்துலங்கிடச்செய்வனன்றே. (௭)

இருபத்துநான்காய்நின்றதத்துவமியம்புமாயை
விரிவுற்றகருமத்தோடுமுக்குணம்விடயமாகும்
பரிவுற்றபசுக்கடம்மைக்கட்டுறுபாசமென்றே
திரிவற்றநூல்களெல்லாஞ்சிறந்திடச்செப்புமன்றே. (௮)

பொருந்தியசிவனங்கேவப்பகுதியும்புருடன்றானுந்
திருந்திடக்கூடிப்புத்திதனைப்படைத்திடுமாற்செவ்வே
விரிந்திடுபுத்திதானுமிகுமகங்காரந்தன்னைத்
தருந்திறலதனாலென்னச்சாற்றுவாருணர்வின்மிக்கோர். (௯)

மன்னகங்காரஞ்செய்யமனத்தொடிந்தியங்கண்மற்றைப்
பன்னிடும்பஞ்சதன்மாத்திரைகளைப்படைத்தல்செய்யு
மன்னவைபூதமைந்துமளித்திடும்பூதமைந்துந்
துன்னிடுமுயிர்கட்கெல்லாமுடம்பினைத்தருமாற்சொல்லில். (௧0)

புத்திநிச்சயத்தைச்செய்யும்பொருந்தகங்காரமாங்கே
வித்தகவபிமானத்தைவிளைந்திடவிளைத்தல்செய்யுஞ்
சித்தமோர்ந்தறியுநெஞ்சஞ்சங்கற்பஞ்செய்யுந்தீதி
லுத்தமவிடயமைந்துஞானவிந்தியங்களோரும். (௧௧)

கருமவிந்தியங்களென்னக்கழறிடுமைந்துமன்னி
யுரைமுதலானவைந்துசருமமுமோங்குச்செய்யும்
புரிசடைமௌலியண்ணல்புகன்றிடுமேவறன்னை
மருவியீங்குரைத்தயாவுங்கடந்திடவல்லவாமே. (௧௨)

விண்ணகம்யாவுமன்னவிளங்கியேவிரிந்துநிற்குந்
தண்ணெனவுலவுமூதையாவையுந்தாங்குஞ்செந்தீ

புண்ணநன்காகப்பாகஞ்செய்திடுமொலிக்குந்தெண்ணீர்
நண்ணுறுமுயிர்களுய்யநன்கணமியற்றுமன்றே. (௧௩)

தரையுமற்றெறவையுந்தாங்கித்தானமர்ந்துறையும்வானின்
மருவுவிண்ணவர்கோன்மிக்கவசுரரைவாளின்மாய்த்து
விரியுமூவுலகுங்காத்துவிளங்குறவளர்த்தல்செய்வான்
கருநிறக்காலன்பாவஞ்செய்தவர்தம்மைக்காய்வான். (௧௪)

மேவுறுநிருதிதானும்விதிமுறைநீங்கிச்செய்யு
மோவறுகருமந்தன்னிலுற்றிடுபலத்தையுண்பான்
வாவுதெண்டிரைநீர்க்கெல்லாமிறைவனாய்வருணன்றானும்
பாவிகடம்மையென்றும்பாசத்தாற்பிணித்தல்செய்வான். (௧௫)

புரிசைசூழளகைவேந்தன்புண்ணியம்புரிந்தோர்க்கென்று
மிருநிதிவழங்கிநிற்பானிறைஞ்சுமீசானன்றானுங்
கருமனவஞ்சர்தம்மைக்கடிந்துநற்றருமமோர்ந்தாங்
கரிறபவாற்றுவோரையருளினாலளிப்பனன்றே. (௧௬)

மானிலமுழுதுந்தாங்கிமன்னுவானனந்தன்விண்ட
கானமர்கமலத்தோனுமூவுருக்கவினத்தாங்கி
யானமுத்தொழிலுஞ்செய்வானரியுருத்திரருமவ்வா
றீனமிறெழிலிற்கண்மூன்றுமியற்றியேவைகுவாரால். (௧௭)

மன்னுறுகாலந்தானும்யாவையுமன்னச்செய்யு
மின்னொளியிரவிதூங்குமழைபனிவெயிலைச்செய்வான்
பன்னிடுமதியுமோங்கப்பயிரொலாம்வளர்த்தெந்நாளும்
பொன்னுலகவருக்கூணுமுதவியேபொருந்துமன்றே. (௧௮)

இவ்வகையுலகம்யாவுமிணர்மலர்க்கரியகூந்த
லவ்வையோர்பங்கில்வாழுமண்ணறன்னேவலாலே
செவ்விதினுறையுமின்னுஞ்சிவன்விளையாட்டைமுன்னை
வெவ்வினையகலச்சொல்வாமெனமுனிவிளம்பலுற்றான். (௧௯)

சிவன்பசுபதியாதன்முதலியவுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௯.

# யாவுஞ்சிவன்செயலென்பதுரைத்த

## அத்தியாயம்.

மன்னியவசுரர்தம்மைமறலியனாட்பின்வென்று
பொன்முடியமரர்தங்கள்வலிபுகழ்ந்துறையுங்காலைக்
கன்னலங்குதலைபாகனியக்கனுய்க்கடிதினெய்தி
முன்னமோர்துரும்புதன்னையிட்டிவைமொழியலுற்றான். (க)

இட்டவித்துரும்புதன்னையியக்குவோன்யாவனன்றேன்
விட்டலர்தாமவெள்வேலசுரரைவென்றோனென்னக்
கட்டழலென்னவெம்பிக்கடிதெழுந்தமரர்கோமான்
றொட்டதையசைக்கலாற்றானாகியேதுளங்கிநின்றான். (உ)

நின்றிதையறுப்பனென்னாநிழலுமிழ்வயிரவாளை
யன்றவனெறிதலோடுமதனையத்துரும்புதானே
வென்றுவாய்மடியவீழ்த்தவெய்யவெங்கனலிதானு
மின்றியானெரிப்பனென்றுவெழுந்துநின்றெரிந்திட்டானே. (ங)

எரிந்தவனின்றதல்லாலன்னதங்கெரியாதாகித்
திருந்திடவுறைதல்கண்டுவெளிக்கிறைசினவிப்பொங்கி
யிரிந்திடச்செய்வனென்றுச்சுழன்றெறிந்துலவமுன்போற்
பொருந்திடக்கண்டுவெள்ளைவாரணன்புகன்றானன்றே. (ச)

நின்றபேரியக்கன்றன்னையாரைநீயென்னலோடு
மொன்றுமங்குரையாதாகிமறைதலுமும்பர்மீதே
கொன்றைறவேணியன்றனோர்பாலுறைதருருவவுக்கொங்கை
மன்றலங்கோதைவல்லிமற்றவர்காணவந்தாள். (ரு)

மன்னியவிறைவிதன்னைவானவர்குழுமிப்போற்றிப்
பொன்னடிவணங்கித்தாழ்ந்துபொருந்தியேமறைந்தபோது
னென்னனேவறிந்திலேமால்யாமெலாமறியவிங்கே
பன்னுதியென்றுமீட்டும்பணிந்துநின்றுரைத்தாரன்றே. (சா)

உரைத்தலுமுணர்வானல்லனுற்றபேருலகந்தன்னை
விரித்தளித்தழித்துத்தானேமிகவிளையாடுகின்ற
வொருத்தன்மற்றவன்றானென்னவுரைத்துயரும்பருடே
வருத்தமற்றுலகையீன்றவல்லியுமறைந்துபோனாள். (௭)

மறைதலுமிறும்பூதெய்திவானவர்போயினாரொன்
றறிதரவறைந்துதொல்லையண்ணறன்மூர்த்திதன்னா
னிறைதரவுலகமெல்லாநின்றவாறுரைப்பனென்னா
வுறைதருமுனிவனாங்கேகண்ணனுக்குரைக்கலுற்றான். (௮)

யாவுஞ்சிவன்செயலென்பதுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௭.

---

## பஞ்சப்பிரமவட்டமூர்த்தமுரைத்த அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நறைமலர்க்கமலத்தயனரிவார்ந்தநளிர்சடையுருத்திரனென்றுங்
குறைவறவுறையுமகேச்சுரன்மறைகள்கொழித்திடுஞ்சதாசிவனென்ன
வறைதருமைந்துமூர்த்தமுண்டாமாலண்ணலுக்கன்றியும்வேறா [பாம்.
யுறைதருபஞ்சப்பிரமமென்றைந்துமூர்த்தமுண்டவையெடுத்துரைப்

போற்றுமீசானந்தயங்குதற்புருடம்பொங்கருடைழத்திடுமகோரஞ்
சாற்றிடுவாமதேவநாம்புகழுஞ்சத்தியோசாதமென்றைந்தா
யாற்றல்சான்மூர்த்தமுளவவைதம்முளமருமீசானமாமூர்த்தந் [ரும்.
தோற்றியேயுறையுங்*கேத்திரக்கியனைத்தொடர்ந்துநின்றேவியேயம

முன்னுதற்புருடமூர்த்தநாடோறுமுதுபிரகிருதியையேவுந்
தன்னிகரில்லாவகோரமாமூர்த்தந்தயங்கியபுத்தியையேவும்

* கேத்திரக்கியன் - புருடன்.

பின்னரேவாமதேவமாமூர்த்தம்பேசகங்காரத்தைவேவு
மன்னியேயுறையுஞ்சத்தியோசாதமூர்த்தமம்மனத்தினையேவும். (௩)

இயம்புமீசானன்செவியொடுவாக்குச்சத்தமாகாயமாமிவைக்கு, வயங்குமீச்சுரனும்மன்னியேயுறைவான்மாசிறற்புருடனோர்மலர்க்கை, தயங்கிடுதோன்மற்றூறொடுகொற்றுக்கிறைவனாய்த்தானமர்ந்துறைவான், பயன்பெறுமகோரன்கண்ணடியுருவங்கனலிக்குப்பதியெனவுறைவான். ()

நீரொடுநாக்குநிறைந்திடுமிரதநிகழ்த்திடுமெபானமாமிவற்றிற்
கோர்தரும்வாமதேவனேயிறையாயுறைவனூலுயர்ந்திடுமூக்கோ
டார்தருகந்தங்குறியொடுநிலத்திற்கிறைவனாயமர்ந்துறைகுவனூற்
காரணிமிடற்றுச்சத்தியோசாதனென்றிடுங்கடவுண்மாமுதலே. (௫)

நிலவொளிமணிகணூலினிற்கோத்துவைத்தெனநிகழ்த்துபேருலக
மலைமகள்பாகனட்டமூர்த்திகளின்மன்னிடுஞ்சருவனற்பவன்சீ
ரிலகுருத்திரன்சொலுக்கிரன்வீமன்பசுபதியிறைஞ்சுமீசான
னலகிலாக்குணங்களுடையமாதேவனுவராலட்டமூர்த்திகளே. (௬)

மானிலஞ்சருவன்புனல்பவன்கனலேவயங்குருத்திரனியல்வளிதான்
கானமர்தொடையலுக்கிரன்விசும்புவீமனுங்கருதியமானன்
றூனனிவிளங்கும்பசுபதியிரவிதயங்குமீசானன்வெண்மதிய
மேனைமாதேவனுகுமாலறியவிங்குநாமெடுத்தியம்பிடிலே. (௭)

வேரினிற்றெண்ணீர்வார்த்திடத்தருவின்கொம்புகண்மிகத்தழைப்பதுபோற், றூரணிகொன்றையண்ணலைப்பூசைசெய்திடிலுலகெலாந்தழைக்கு, மேர்பெறவாதலான்மணிவண்ணவிறைவனைப்பூசியென்றுரைத்தான், பாரொடுவிசும்புபுகழ்ந்தெடுத்தேத்திப்பணியுபமன்னியுவென்பான். (அ)

பஞ்சப்பிரமவட்டமூர்த்தமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௫௫.

# சிவஞ்சத்தியுருவிபூதியுரைத்தவத்தியாயம்.

உரைத்தலுஞ்சிவன்றன்மூர்த்தியாலுலகநிறைந்திடுமென்பதையு
ணர்ந்தாந், திருத்தகவீசனுமையவளுருவைச்சேகறவுணர்ந்திடற்குள்
ளத், தருத்திமிக்குடையேனறையெனக்கண்ணனறைந்திடவருந்தவ
முனிவன், விரித்தனனுயர்ந்தவெள்விடைப்பாகன்விரைமலரடியிணை (௧)
பணிந்தே.

புரிந்தசெஞ்சடிலத்திறையவனுமையாளுருவினைவிபூதியைப்பொரு
ந்தச், சுருங்கவிங்குரைப்பாஞ்சுடர்மதிபுனைந்ததொல்லைநம்மிறையவ
னும், விரிந்திடவுரைப்பப்படுங்கொலோவிளங்குவெள்வளையுமையவள்
சத்தி, தருந்திறன்மழுவாளேந்தியமுக்கட்டலைவனேசத்திமாறுவான்.()

தயங்கியாவுஞானமாரூபஞ்சடமென்றுசாற்றிடப்படுமாற்
பயன்படுமிவற்றைச்சுத்தமன்னசுத்தம்பரமுறையபரமென்றுரைப்பார்
வயங்கியஞானஞ்சடத்தினைப்பொருந்திவளர்பிரவத்தியையியற்றும்
வியன்படுஞானரூபமேசுத்தம்பரமெனவிளம்பிடவுறையும். (௩)

சாற்றியசடமேயசுத்தமற்றபரமெனநனிசாற்றிடப்படுமா
லேற்றியவிவைகட்கழிவிலாச்சிவனுமிறைவியுமுதல்வராகுவராற்
றேற்றியசகமிங்கிவர்வழிநிற்குஞ்சொல்லியசகத்தறுவழியா
யாற்றல்சாலிவர்களொழுகுவாரல்லரெனவருமறையெடுத்துரைக்கும்.

விரிந்திடுமொளியைநீங்கியேமதியுஞாயிறும்விளங்கிடமாட்டா
திருந்தியவொளியுமன்னவைதம்மைநீங்கியேசேர்ந்திடாததுபோ
லிருந்தநம்மிறையுமிறைவியுமொன்றாயுறைகுவரிறைவியாலிறைவன்
பொருந்திடப்போகமுத்திநன்குதவிப்பொற்புறுசத்திமாறுவான். (௫)

பகர்பராசத்தியபரசத்திகளைப்படைத்திடும்படைத்தவச்சத்தி
தகைபெறுமூலப்பகுதியேமாயைமுக்குணப்பகுதிதானென்னப்
புகல்செயப்பிரியுந்திகழ்பராசத்திபுகழ்சிவதத்துவமுதலா
வகனிலமீறுஞ்சகத்தினைத்தோன்றவணிபெறவிரித்திடுமன்றே. (௬)

இறைவனோடொன்றாயுறைபராசத்தியெள்ளினிலெண்ணெய்தோ
ன்றுதல்போ, னெறியினிற்சிருட்டிகாலத்தில்வந்துதோன்றிடுநிகழ்த்திய
வதன்பின், முறையினிற்கிரியாசத்திதோன்றிடுமான்முளைத்தவச்சத்திதா
ன்பொருந்தி, யுறைதருமூலப்பகுதியையேவநாதம்வந்துற்றிடுமன்றே.

நாதத்தில்விந்துத்தோன்றிடுமதனிற்சதாசிவனன்குறத்தோற்று
மோதியவவன்பான்மகேச்சுரனுதிக்குமுற்றவம்மகேச்சுரனிடத்தி
லேதமில்சுத்தவித்தைதநன்குண்டாமதனைவாகீச்சுரற்கின்பக்
காதல்கூர்வாகீச்சுரியெனுஞ்சத்தியாமெனக்கழறுவரன்றே. (௮)

சுத்ததத்துவமோரைந்துமிவ்வாறேமுறையினிற்றோன்றியபின்னர்
வித்தியேச்சுரனுமனந்தனங்கேவமாயைதான்விளம்பிடுகால
முத்தமநியதிகலையொடுவித்தைதம்மையுண்டாக்குமாலுரைத்த
சித்திரக்கலையிலிராகமோடந்தப்புருடனுஞ்சிறந்திடத்தோன்றும். (௯)

மாயையினின்றுமுக்குணப்பகுதிவந்திடும்வந்தமற்றதனி, லேய்வுறக்
குணங்கண்மூன்றும்வந்திடுமாலவற்றினிலிறைவர்மூவர்களோ, டாயிரு
பத்துமூன்றுதத்துவமுமெய்திடுமவற்றினாலலகி, றாயபேரண்டமுடம்பு
கள்வந்துதொடர்ந்துறத்தோன்றிடுமன்றே. (௧௦)

நீங்கலாச்சத்திமயமுலகாருநிகழ்த்துமிச்சாசத்திநன்கா
யோங்கிடுஞானசத்திநற்கிரியாசத்திகளாலுறைசிவன்றான்
வீங்கியவுலகையேவியேயுறைவான்விளங்குமிச்சாசத்தியொன்றைப்
பாங்குறத்தெளிந்துநாட்டுமாலென்னப்பண்டையநூலெலாம்பகரும்.

இன்னதற்கீதுகாரணங்களிதாம்பலமெனவினிதறிசத்தி
மன்னிடுஞானசத்தியாம்விழைந்தகாரியந்தன்னைவாய்த்திடவே
துன்னிடவிளக்குஞ்சத்திதான்கிரியாசத்தியாஞ்சொல்பராசத்தி
தன்னுடையேவலானனியுலகையபரமாஞ்சத்திதந்திடுமால். (௧௨)

சிவனொடுசத்திதந்திடுமுலகைச்சிறந்திடுசாத்தமென்றுரைப்பார்
நவையறுதாயுந்தந்தையுமின்றிநலனுடைமகவிலாததுபோ

லெவர்களும்புகழுஞ்சிவனொடுதேவியிலதொனிற்சகமிலவாகு
மவைகடாமாண்பெண்ணுருவமாய்மன்னியமருமாலறிந்துகூறிடிலே. ()

அறைதருசிவனேபரமவான்மாவாஞ்சத்தியேமனோன்மனியாகு
முறையுநஞ்சிவனேமகேச்சுரன்றேவிமாயையிங்குற்றிடுசிவனே
மறுவறுபுருடன்றேவியேபகுதிமன்னியசிவனுருத்திரனுங்
குறைவறுதேவிதானுருத்திராணியாகுமாற்குறித்துணர்ந்திடிலே. (௧௪)

போற்றிடுசிவனேவிண்டுவாஞ்சிறந்தபொற்புறுதேவியேகமலை
யாற்றல்சால்சிவனேமலரவன்றேவியமர்பிரமாணிநஞ்சிவனே
தோற்றிடுபரிதிதேவியேபிரபைசொல்சிவனிந்திரன்றேவி
சாற்றுமிந்திராணிசிவனழறேவிதகைபெறுவனப்புடைச்சுவாகை. (௧௫)

மன்னியசிவனேகூற்றுவன்றேவியாமிமாசறுசிவனிருதி
மின்னிடைத்தேவிநைருதிசிவனேவருணனும்விளங்கிடுதேவி
பண்ணிடுகௌரிசிவன்வளிதேவிசிவைசிவன்பகர்ந்திடுகுபேரன்
கன்னலங்குதலைநுணங்குநுண்மருங்குற்கயல்விழித்தேவியே * யிருத்தி.

இறைவனுஞ்சிவனேசந்திரன்றேவியுரோகிணிசிவன்சொலீசானன்
மறைபுகறேவிமன்னுமீசானிமாசறுசிவன்றிறலனந்த
னிறைமலர்க்கூந்தற்றேவியேயனந்தைநிகரிலாதுறைசிவன்றானே
விறல்கெழுகாலாக்கினியுருத்திரனுந்தேவியேகாளியாம்விளம்பில். ௧௭

துலங்கிடுசிவனேசுவாயம்புமனுவாந்தேவியேசொல்சதரூபை
யிலங்கொளிமழுவாட்சிவன்விறற்றக்கன்றேவியேயெழிற்பிரசூதி
யலங்கலுழ்மவுலிச்சிவன்ருசிதேவியணிமுலையணிந்தவாகூதி
புலன்களாலுணராச்சிவனுயர்பிருகுத்தேவியேபொற்புறுகியாதி. (௧௮)

மணிகெழுமிடற்றுச்சிவன்றவமரீசிவருமுலைத்தேவிசம்பூதி
பணியுநஞ்சிவனேயங்கிராத்தேவிபரிதிவேல்புரைவிழிமிருதி
பிணைகரத்தேந்துசிவன்புலத்தியனும்பெய்வளைத்தேவியேபிரீதி
துணையடியடியார்க்கருள்சிவன்புலகன்றேவியேசுடரிழைக்கமையே. ()

---

* இருத்தியைப் புத்தியென்கின்றது வடமொழிப்புராணம்.

அழல்விர்சடிலச்சிவனமர்கிரதாவழகுடைத்தேவிசன்னதியா
மழுவலத்திறைவனத்திரியுமையேமலரணிகுழலனசூயை
கழைமதற்செற்றவண்ணல்காசிபனுந்தேவியேகனங்குழையதிதி
குழவிவெண்மதியம்புனைந்தவன்வசிட்டன்கூர்விழியுமையருந்ததியே.

ஆணெலாமிறைவன்பெண்ணெலாந் தேவியாகுமாலறிந்துநாமுரைக்கி
பேணுறுவிடயமுமையவளவற்றைநுகர்பவன்பின்னுகனுமாற் [ற்
பாணியாதியாவுங்கேட்பவன்சிவனுந்தேவியேகேட்டிடப்படுவ [ல்.
வேணுறத்தொடுவான்சிவன்றொடப்படுவ யாவையுமிறைவியாமியம்பி

காண்பவன்சிவனுங்கண்டிடப்படுவயாவையுங்கனங்குழைத்தேவி
மாண்படுசுவைகள்யாவையுந்தேவிமற்றவையுண்பவன்சிவனுஞ்
சேண்படுநாற்றந்தேவியாமவற்றைநுகர்பவன்செஞ்சடையீசன்
றூண்படுதிணிதோட்சிவனறிபவனுமறிபவை துணைமுலையுமையே.உஉ

ஆவிநம்மிறைவனுங்கதனுறையுளரும்பவிழ்மலர்க்குழற்றேவி, மே
வுறுபகன்மானேந்தியகடவுளிரவுவெண்ணகையுமையவளா, மோவற
விளங்கும்விண்ணகஞ்சிவனுமொலிகடலுடுத்தபார்தேவி, வாவுவெண்
டிரைபாய்கடன்மதியணிந்தோன்வான்கரைமலர்க்குழற்றேவி. (உங)

வெறிமலர்த்தருக்களியாவையுமீசன்மென்கொடியாவையுந்தேவி,
முறையினிலுரைக்குஞ்சொல்லுமையவளாமதன் பொருண்முழுமுதற்
கடவு, ளிறைவனேடுமையாள்விபூதியைச்சிறிதிங் கிசைத்தனமெம்ம
னோர்தம்மாற், குறைவறவுரைக்கவாண்டுபல்கோடிசெல்லினுங்கூட
லாவதுவோ. (உச)

பகுதியைமுன்னும்விபூதியாமிங்கேபாற்படாவிற்றியவிபூதி
புகல்செயற்பாற்றோபகுதியைக்கடந்தவிபூதியைப்பொருவறுகண்ணு
நிகழ்தருசிவன்றனடியருட்சிறந்தாய்நீயதனுற்செறிவினையாந்
துகளறுமாறேயெமதுளத்தறிவாற்றோன்றினவாறெடுத்துரைத்தேம். ()

அறைந்திடுவிபூதிதன்னைமாணுக்கரன்றியேயுறைபவர்தமக்குஞ்
சிறந்திடுபத்தியில்லவர்தமக்குந்தீநெறியொழுகுவோர்தமக்கு

மறங்கெழுமழுவாளண்ணறன்னடியாரல்லவர்தமக்குமாசறவே [ல்.
திறம்பலின்றுநிச்செப்பொணுதென்னச்செய்யநான்மறையுரைத்திடுமா
விரித்தவிக்காதையுரைப்பவர்சுற்றம்யாவையுமிகத்தழைத்தோங்கத்
திருத்தகுபுதல்வர்ப்பெற்றுநம்மீசன்சேவடிக்கடிமைபூண்டடார்ந்து
வருத்திடுபாவமகன்றுகெட்டோடவாழ்வரொன்றுரைத்துமாமுனிவ
ணருத்தியாற்கண்ணன்கேட்டிடப்பின்னுமரிறபத்தெரிக்கலுற்றனனல்.

சிவஞ்சத்தியுருவிபூதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அஉ.

---

# பரசிவப்பிரபாவமுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

நிற்பனநடப்பனயாவுநேர்ந்திடிற்
பொற்புறுசடையவனுருவம்போலுமா
லற்புதப்படவிவ்வாறமர்வனென்பதைச்
சொற்படுபசுக்கடாந்தோன்றவோர்ந்திடா. (க)

பிறங்கியவபரமாம்பிரமமென்றுமாங்
குறைந்திடுமுயர்பரப்பிரமமென்றுமுற்
றிறந்திடாதுறையுமாதேவனென்றுநன்
கறிந்தவர்சிவன்றனையறைகுவார்களால். (உ)

பூதமிந்தியமந்தக்கரணம்போற்றிடு
மேதமில்விடயம்வண்பகுதியென்றெடுத்
தோதியவிவைகளினுருவமாமென
மாதவர்தாஞ்சிலர்வகுத்துக்கூறுவார். (௩)

பகர்ந்தபூதம்முதற்பகுதியீறதாம்
புகழ்ந்திடுமபரமாம்பிரமம்போற்றிடத்

திகழ்ந்திடுஞானமாரூபமேசிறந்
திகழ்ந்திடாப்பரமமாம்பிரமமென்பரால். (ச)

நிறைந்துமற்றியாவையும்படைக்குநீர்மையா
லுறைந்திடுபராபரந்தம்மையோர்ந்துறச்
சிறந்திடுமாதவஞ்செய்யுமேலவ
ரறைந்திடுவாரமர்பிரமமென்றரோ. (ரு)

அறிவுடைவிச்சைமற்றறிவொன்றின்றியே
யுறைதருமவிச்சையினுருவமாமென்று
நிறைதருசத்தசத்தென்றுநின்றவைக்
கிறைமுதலென்றுநன்கியம்புவார்களால். (சு)

சரமொடுமக்கரமென்றுந்தாவிலா
*வுரையவைகளின்பரமென்றுமுற்றுற
மருவியசமட்டிநல்வியட்டியென்றுமன்
னிருவகைக்காரணமென்றுங்கூறுவார். (எ)

சாதிநல்வியத்தியாமென்றுஞ்சால்புற
வோதிடவுறைபிரதானமோங்கிய
வேதமில்புருடன்மாவியத்தமெய்திடு
மாதியாங்காலமாமென்றுமாய்வரால். (அ)

உறைவிராட்டிரணியகருப்பனுற்றுற
நிறைதருமந்தரியாமிநேரிலா
வறைபரன்பிராக்கியனமருந்தைசதன்
குறைவிலாவிச்சுவனென்றுங்கூறுவார். (கூ)

அறிவுநன்கறிவுறப்படுவதன்பினுன்
மறுவறவறிபவன்வயங்கிமன்னியே
யுறைகருத்தாவொடுகிரியையுன்னிடற்
றிறலுடைக்காரியமென்றுஞ்செப்புவார். (க0)

* உரை - வினைத்தொகை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கரணமொடுகாரணமுயர்சாக்கிரஞ்சொப்பனங்காசறுசுழுத்தி
துரியந்துரியாதீதமுறைறவிகுணன்குணவான்சுதந்திரன்மற்
றுரைசெய்கின்றசுதந்திரன்முனல்லான்குரூரனெழிவறவே
பரவவுறையுஞ்சவுமியனென்றுரைப்பார்பழுதின்றுயர்ந்தோரே. (௧௧)

ஆசையுடையன்சிறிதேனுமாசையில்லானமர்ந்தியற்று
மேசில்கிரியையுளன்கிரியையில்லானிறையிந்தியமுள்ளான்
பேசுகின்றவிந்தியங்களில்லான்†றுருவன்பெட்புறவே
மாசிலாததுருவன்முனல்லானென்னவழங்குவரால். (௧உ)

உருவமருவங்கண்ணினாற்காணப்படுவதொருவராற்
றெரியக்காணப்படாததுநாஞ்செப்பப்படுவதென்றொன்றும்
விரியவுரைக்கப்படாததொலியொலியைக்கடந்தேமேவுவது
பொருவில்சிந்தாமயஞ்சிந்தைதன்னைக்கடந்ததெனப்புகல்வார். (௧௩)

மறுவின்ஞானஞானந்தானல்லாததுமன்னுணர்விற்
லறியப்படுவதெவராலுமறிவாலறியப்படாததென
முறையேயிவ்வாறுரைத்திடுவர்பலர்தாமுன்னுஞ்சிவனடியார்
நெறியேயந்தச்சிவன்றன்னையுணர்ந்துநிலவிவைகுவரால். (௧௪)

அருளியுறையுஞ்சிவன்றன்னையறியாதமரும்பசுக்கடா
முருளிபோலச்சுழன்றுசுழன்றுழலும்பிறவிதனிற்சிவனை
மருளின்முகியேயுணரின்மன்னுபசுத்வமொடுபாச
மொருவமழுவாளேந்துசிவனுருவாய்ப்பொருந்துமென்றுரைத்தான். ()

பரசிவப்பிரபாவமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௭.

---

† துருவன் - அழிவில்லாதவன்.

# நிட்களசகளசொரூபமுரைத்தவத்தியாயம்.

பொருந்துமாலென்றுரைத்துப்பின்னுபமன்னியுத்தான்புகன்றிடுவான்
விரிந்தேயுறையாணவமாயைமிக்ககாமமெனுமலங்க
ளிருந்தபகுதிபுத்தியகங்காரமியம்புமனஞ்சித்தந்
திருந்தாதமரிந்தியமிவற்றாற்பந்தமில்லைச்சிவன்றனக்கே. (௧)

தன்மாத்திரைகள்பூதங்கள்சாற்றுங்காலங்கலைவித்தை
பன்னுநியதியிராகமிவற்றாலும்பந்தமில்லையான்
மன்னுகின்றவிருப்பமொடுவெறுப்புமில்லைவந்தடர்ந்து
துன்னுகின்றவிருவினையுமிலவாஞ்சிவனுக்கெனச்சொல்வார். (௨)

கருத்தாவிலனாங்காரணமுமற்றேயாகுமாற்கழறில்
விரிக்கிலாதியந்தமிலவாமால்வெம்பியடர்பகையுந்
திருத்துமுறவுமிலவாகுஞ்செவ்வேகுருவுந்திக்ழ்பதியு
முரைக்கிலிலராநஞ்சிவனுக்கென்றேமறைகளோதுமால். (௩)

பிறப்போடிறப்புமிலனாகிப்பிரமன்மாயன்முதலெவர்க்குஞ்
சிறப்பாலுயர்ந்துகலியாணனாகித்தீதொன்றின்றியே
யறத்தோரறியவுறைவனால்யாவுமேவியாதலினா
லுறத்தானுணர்ந்தோர்தாணுவெனவுணர்ந்தேநாளுமுரைப்பரால். (௪)

எறிவாண்மழுவேவான்சருவனென்றுமிசைக்கப்படுவானெஞ்ஞான்றுங்
குறைவிலவனேமகானாகிப்புருடனாகிக்கோதிலா
மறைதேரொருவனாய்ப்பிரமமாகிமணிநேர்மிடற்றனாய்
நெறியேநீலலோகிதனாயறிவாரறியநிலவுவனால். (௫)

ஆகத்திடையினலர்தகரவாகாயத்தினறிவினான்
மோகத்தடையாமுனிவரான்முன்னப்படுவான்முதிர்பொன்போற்
சேகற்றொளிருஞ்செஞ்சடையான்செழுந்தாமரைநேர்தடங்கணான்
மாகத்திடையேயொளிர்பரிதிமட்கமிளிருஞ்சோதியான். (௬)

மகிழுங்கருணையுருவனாய்மன்னியுறைவான்மகிழ்வின்றி
வெகுளியுருவமுறத்தாங்கிவிளங்காநிற்பானிருவகையுந்

திகழுமுருவனாகியேசிறப்பான்சிறந்தக்கரமாவான்
புகழுமமிர்தனாகியேபொருந்திமுதலாய்வைகுவான். (எ)

அவனேயந்தகாந்தகனுயமர்வானவனேயயனறிய
நவையின்ஞானமுறைசெய்வானவன்றன்சத்திநன்காகி
யெவரும்புகழச்சுத்தமாயிருக்குமவனையெந்நாளு
முவமையில்லாக்குடிலைதானுண்மையுணர்ந்தேயுரைக்குமால். (அ)

அறைந்தகுடிலைதனைச்செபித்திங்கண்ணலடித்தாமரையுணர்ந்தாற்
சிறந்ததில்லைவேறொன்றுஞ்செபிக்கவுணரச்சிவன்றன்மை
நிறைந்தவியலாகமந்தெரிந்துநீங்காமரையைதனைச்சிறித்
துறந்தோர்குடிலைசிவனுருவமென்றேயுணர்ந்துசொல்லுவார். (௯)

அகரமுகரமகரமொடுநாதமென்னுமடைவிற்றாய்ப்
புகலுங்குடிலைமூன்றரைமாத்திரையாய்ப்பொருந்தியுறையுமாற்
றுகளிலகரமுதன்மறையுமகாரூச்சொல்லும்பீசமுட
னிகலிலாதராசதமாங்குணமுமயனுமாயிருக்கும். (௧௦)

இசைக்குமுகரந்தானிரண்டாம்வேதம்பகுதியோனியியல்
வசைக்கணீங்குசாத்துவிககுணமாலாகிமருவுமான்
மிசைக்கண்மகரந்தான்மூன்றாம்வேதம்புருடன்பீசமிகப்
பசைக்கணில்லாத்தாமதமாங்குணம்ருத்திரனுமெனப்பகர்வார். (௧௧)

நாதநான்காம்வேதமாய்க்கிரியையொழிந்துநான்மறைநக
ளோதவமருஞ்சிவனுருவாயுறையுமிவ்வாறுறைகுடிலை
கோதினுதத்தாற்சிவனையறியவுணர்த்துங்கோதிலா
வாதியாயசிவன்றானேயெங்குமமர்வானெனவுரைத்தான். (௧௨)

நிட்களசகளசொரூபமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௦௯.

---

# உமாமகேசுரவுபாசனையுரைத்தவத்தியாயம்.

அமர்வானென்னவுரைத்துப்பின்னுபமன்னியுத்தானறைகுவா
னிமையோர்பரவுஞ்சிவன்பராசத்தியிச்சாசத்தியுயர்
விமலஞானசத்தியொடுகிரியாசத்திமிகுந்துறையுங்
கமைசேர்மாயைமுதற்சத்தியென்னப்பிரிந்துகவினுமால். (௧)

வணங்கநின்றசதாசிவனைமணிநேர்மிடற்றினீச்சுரனை
யணங்குசெய்யாவித்தியேச்சுரனேமுதலோர்தமையருளிற்
றணந்திடாதபுருடர்தமைப்பகுதிதன்னைத்தத்துவத்தை
மணங்கொள்கமலத்தோன்முதலோர்தம்மைவகுக்கும்பராசத்தி. (௨)

நவிலுஞ்சத்தியெங்குமாய்நிறைந்தேயணுவாய்ஞானமா
யுவமையில்லாதேயுறையுமுறையுஞ்சத்திதன்னேடுஞ்
சிவனன்காகவுறைதலாற்சிவனைச்சத்திமானென்றே
தவமேபுரிந்துவைகுவோர்தாழ்ந்துபரவிச்சாற்றுவரால். (௩)

சாற்றுசிவனைமாதவத்தோர்தயங்குமறிவாலறிதலாற்
போற்றியுரைப்பார் *வேத்தியனென்றுபொருந்துசத்திதா
னாற்றன்மிக்கசிவன்றன்னையறியச்செய்தலாலதனை
யேற்றமுடையவிஞ்சையெனவறிவாலெடுத்திங்கிசைப்பரால். (௪)

இயம்புமந்தப்பராசத்தியயனேமுதலாம்யாவரையு
மயங்கச்செய்துமயக்கினையங்ககற்றிமுத்திவழங்குமாற்
றயங்குசத்தியாந்தேவிதடந்தாமரைத்தாள்வணங்கியே
பயன்செய்முத்தித்தனிவீட்டிற்பழுதின்றுறையவேண்டுமால். (௫)

பண்டைநாளின்மாமுனிவருலகம்படரக்காரணமே
துண்டாயாமெலாமெவணின்றுதித்தேமாராலுய்கின்றேந்
தண்டாதேயிச்சுகதுக்கந்தம்மினம்மைப்பணிப்பவர்யார்
மண்டுதிரைநீர்சூழுலகின்வரம்பைமுறையின்வகுத்தவர்யார். (௬)

---

* வேத்தியன் - வேதனத்தாலறியப்படுபவன். வேதனம் - அறிவு.

என்றுவுளத்திற்சிந்தியாயோகத்திருந்தெம்மிறையிடப்பான்
மன்றுவமருமுமையவனைக்கண்டாரவடான்வழங்குமரு
டன்றற்பாசங்களையறுத்துத் ‡ தமிழ்மென்சாயலவளோடுங் (எ)
கன்னேர்வில்லான்றனைஞானவிழியாற்கண்டுகளித்தனரால்.

கண்டேகளியாவுமையோடும்யாவுமேவிக்கடவுளாய்ப்
பண்டேயமரும்பரம்பொருளிங்கிவனேயென்னப்பணிந்தேத்தித்
தண்டாதுறையுமுத்தியினிலடைந்தார்தலைவியொடுமிறையைக் (அ)
கொண்டாருளத்தில்யாரவரோமுத்திவீட்டிற்குலவுவரால்.

கருமமோடுஞானங்கள்வேண்டாகடிநாண்மலர்பெய்து
புரிவார்கூந்தலுமையோடுமிறைவன்பொங்குமருள்புரியிற்
கிருமியீறுத்தேவர்களேமுதலாக்கிளைத்தவுயிரொல்லா (கூ)
மொருவாமுத்தித்தனிவீட்டினுறையுமெனநான்மறையுரைக்கும்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கருவினுளுறையுங்காலையிலேனும்பிறந்திடுகாலையிலேனும்
பொருவறுமிளமைப்போதினிலேனுமூப்புறுபோதினிலேனும்
பரிவுறுநரகாழ்வேலையிலேனுந்துறக்கமேற்படர்ந்துறைவதி (க0)
மருவுறுவேலையேனுநம்மிறைவனருள்பெறின்முத்திமன்னுவரால்.

ஆங்கவனருளாற்பத்திநன்குண்டாம்பத்தியாலவனருளுண்டாம்
வீங்கியபத்திபற்பலபிறப்பில்வேதங்களுரைத்திடும்படியே
தீங்கறுகருமமியற்றியபலத்தாற்சிவனருள்செய்திடவருமா (கக)
லோங்கியபத்தியாற்சிவதருமமொழிவறப்புரிந்திடப்படுமால்.

புரிதலாலிறைவனல்லருள்புரிவான்புரிந்திடப்போக்கறநின்ற
விருவினைகழியுங்கழிந்திடமுத்தியெய்தலாமிறைவன்வார்கழலி
லொருவழிசிறிதுபத்திசெய்வோருமுற்றமுப்பிறப்பின்மேற்பிறப்பின் (கஉ)
மருவிடாரங்கத்தோடுசேவித்தன்மாசறுபத்தியாமென்பார்.

‡ தமிழ் - இனிமை.

அரிறபவங்கத்தோடுசேவித்தல்வாக்கிஞலவனடி துதித்தல்
பொருவறுமவனையுளத்திடைநினைத்தல்கையிஞற்பூசனைமுறையே
பரிவறவியற்றலாகுமாலுயர்ந்தபழுதறுசிவதருமந்தான்
புரிதவங்கருமஞ்செபமுறுதியானஞானமாமெனப்புகலுவரால். (கங)

சாந்திராயணமேமுதலியதவமாந்தனிமுதலிலிங்கபூசனையே
யார்ந்திடுகருமமவன்றனஞ்செழுத்தைச்செபித்திடல்செபமெனலாமாற்
காந்தழன்மழுவாளேந்தியசிவனையுளத்திடைக்கருதுதறியானம்
பாந்தளாபரணஞகமமுரைத்தஞானமேஞானமாம்பார்க்கில். (கச)

அன்பிஞன்மிகவுமுயர்சிவபத்தர்முத்தியையடைவதற்காகப், பொன்பிறழ்சுணங்கார்புணர்முலேயுமையாள் கேட்டிடப்புரிசடையண்ண, றன்பெருந்தன்மைவிரித்தவாகமத்தைச் சாற்றினனுய்ந்திடநினைவான், மன்பெருவிடயத்தொழுகிடாதவன்ருள்வணங்கிட வேண்டுமென்றுரைத்தான். (கரு)

உமாமகேசுரவுபாசனையுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉச.

## தேவர்கட்குச்சிவாகமமளித்தவத்தியாயம்.

வணங்கிடவேண்டுமென்னலுங்கண்ணன்வாணுதலுமையவள்கேட்ப, வணங்கரவசைத்தோனறைந்தவாறெமக்கிங்கறையெனவறிவினிலுயர்ந்த, குணங்கெழுமுபமன்னியுவெனவுரைக்குங்கோதிலாவருந்தவமுனிவ, னிணங்கிடக்கண்ணன்கேட்டவாறெல்லாமிறைவனைத்தொழுதிசைத்தனஞல். (க)

மன்னுமவ்வியத்தந்தன்னினஞ்சிவன்ருன்முன்னைநாள்வந்தனன்வந்து, பொன்னிதழ்க்கமலத்தயன்றனைப்படைத்தான்பொருவறுமவனுயருலகம், வன்னவாச்சிரமஞ்*சோமமீங்கிவற்றைவகுத்தனன்மாசில்சோ

* சோமம் - யாகத்திற்குரியவோர்கொடி.

மத்திற், றன்னுபேருலகம்யாவையும்புதைத்துச்சுடர்ந்தொளிர்விசும்பு
தோன்றியதால். (உ)

ஆங்கதன்பின்னர்யாவையுமடைவேவந்தனவயன்முதற்றேவ
ரோங்குருத்திரவத்தியாயமற்றதனுலொண்ணுதல்பாகனைத்துதித்தார்
தேங்கமழ்கொன்றையண்ணலாங்கடைந்துசெவ்வனேயன்னவரறிவை
நீங்கிடக்கலக்கிநின்றனனிற்பயாவனீயெனநிகழ்த்தினரால். (௩)

நிகழ்த்தலுமுக்காலத்தினுமுறைறவேம்யாமெமைமிரந்துவந்தடரு
ம், பகைப்புலனலைப்பவலைப்புறுதறிவோர்முத்தியிற்படர்குவாரொன்று,
முகைத்தபூங்கொன்றைமுடித்தநம்மிறைவன் மொழிந்தவண்மறைந்து
போயினனுற், றிகைத்தவர்பாசுபதவிரதத்தைத்செய்தவன்சேவடிதுதி
த்தார். (௪)

துதித்தலுமிறைவனுங்கவர் கண்முன்றோன்றினன்றோன்றலுங்கீ
ற்று, மதிக்கொழுந்தணிந்தமுதல்வனையவன்றன்வாமபாகத்துறையுமை
யைக், கதிர்க்குலம்பரப்புமழுவலத்தேந்தாங்கணங்களைக்கண்டுகண்களி
யா, வுதித்தவாளிரவியொத்தசெம்மேனியொருவனையுமையினைத்தொ
ழுதார். (௫)

தொழுதனர்துதிப்பக்கொன்றைவேணியனுமகிழ்ந்தனந்துதித்தத
ற்கென்ன, வுழுவலன்போடுபூசனைபுரியவேண்டுமாலென்னலுமொளி
ரு, மழகதிரிரவிமண்டலத்தூடுவயங்குநான்முகத்தொடுதோன்றப், பழு
தறுதேவரருக்கியமுதவிப்பாற்படப்பூசனைபுரிந்தார். (௬)

பூசனைபுரியவுளமிகமகிழ்ந்துபொன்னுலகுறைபவர்தமக்கு
மாசறவிரிந்தவாகமமுழுதும்வழங்குபுமறைதலுமற்றை
யேசலொன்றில்லாவாகமநோக்கிமறையவரொழின்முடியரச
ராசிலாவணிகர்பூசனைபுரிதற்குரியரென்றறைந்துபோயினரால். (௭)

கொடுத்தவாகமந்தாளுள்பலகழியவிறத்தலுங்கொங்கலர்கூந்தன்
மடத்தகையுமையாளிறைவனைநோக்கிமாய்ந்தவாகமமெலாமெடுத்து

நடத்திடவேண்டுமென்னலுமைத்தகள்ளிருணடுவெணின்றுடும் [ன்.
விடைக்கொடியுயர்த்தோனாகமமுழுதுமுன்புபோல்விளங்கிடவிரித்தா

விரியுமாகமத்தைதயண்ணறன்னருளால்யானுமெய்தெரியகத்தியனும்
பொருவிலாருருவுந்தநீசியுமுலகிலுரைசெய்தேங்கலியுகம்பொருந்தி
மருவிநின்தோறுமறுவறுயோகாசாரியன்மாசறுவடிவாய்க்
கரியுரிபோர்த்தோனெய்திமற்றதனையுய்ந்திடக்கழறுவனன்றே. (௬)

கழறிடவெய்துகாலைகடோறுங்காசின்மாணாக்கர்கணால்வர்
பழுதறவடைவாருய்ந்திடவுணர்ந்தோர்மற்றவர்பங்கயமலர்த்தா
டொழுதனரேத்திவிரித்தவாகமத்தைத்துகளறவுணர்ந்துநஞ்சிவன்று
ருமுவலன்போடுமுளத்தினிலிருத்தியோங்கியமுத்திசேர்குவரால். ()

தேவர்கட்குச்சிவாகமமளித்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசுச.

---

## குரவர்பெயருமாணாக்கர்பெயருமுரைத்த அத்தியாயம்.

---

என்றலுநாலாமுகம்வருந்தோறுமெய்திடுகுரவர்தம்பெயரு, மொ
ன்றியவறிவாலுயர்ந்தமாணாக்கர்பெயருநீயுரைத்தியாலென்ன, மன்றல
ந்துளவமலர்புனைகண்ணன்வணங்கிமுன்னின்றனனுரைப்பத், துன்று
வார்சடிலத்திறையவன்மலர்த்தாடொழுதுபமன்னியுப்பகர்ந்தான். (க)

அருந்தவச் * சுவேதன்சுதாரன்மெய்த்தமனன்சுகோத்திரனருள்பெ
றுகங்கன், பொருந்துலோகாட்சிசைகிடவியன்சீர்போற்றிடவுறைதி
வாகரன்னற், றிருந்தியவிடபனுருத்திரன்றீதிலத்திரிசுவாலகன்சிறந்து,
விரிந்தநூறெரிந்தகௌதமன்வேதசிரன்மிகவிளங்குகோகன்னன். (உ)

உறைதருகாவாசிசிகண்டிசெந்தழல்போலொளிதிகழ்வளர்சடாமாலி
மறைதெரியட்டகாசனும்வணங்குதாருகனிலாங்கலிமாசி

---

* சுவேதனாதியர்பெயர்களுள்ளே சில வடமொழிக்குமாறுபடுகின்றன

லறிவின்மாகாயன்சூலிமாசண்டிமுண்டிசன்சயிட்டுணுவருளா
னிறைதருசோமசன்மனற்றவத்தினிகரிலாதுறைறலகுளீசன். (௩)
எனுமிவர்யோகாசாரியராவாரிவர்தமாணாக்கர்நற்சுவேதன்
வினையறுசுவேதசிகனுயர்சுவேதாசியனருண்மிக்கநற்றவத்தாற்
றனையுணர்சுவேதலோகிதன்றயங்குதுந்துபிவளர்சதரூப
னனைவரும்போற்றவுறையிருடீகன்கேதுமானறிவிகோசரனே. (௪)

மன்னியவிசேகன்விசாபனற்சாபசாதனன்வயங்குறுசுமுகன், றன்
முகன்சிறந்ததுன்மதன்றுரதிக்கிரமனோர்துகளிலாச்சனகன், பன்னிடு
சனந்தன்சனாதனன்சிவநூல்பழுதறவுணர்சனற்குமாரன், மின்னுசெஞ்
சடிலச்சுதர்மனல்விரசன்சங்கவான்விளங்கியவிரதன். (௫)

தயங்கிநசாரசுதன்புகழ்மேகன்மேகவாகனன்சுவாகனன்றூழ், வய
ங்குறுசடிலக்கபிலனாசுரிநான்மறையுணர்ந்திடுபஞ்சசிகன்மெய்ப், பயன்
கொளும்பயிலன்பராசரன்கற்கன்பார்க்கவனங்கிராத்தவத்தி, லுயர்ந்தி
டுபலவேந்துண்மைதேர்நிராமித்திரனுறைகேதுசிருங்கன். (௬)

தாழ்விலாதுயர்ந்ததபோதனனிலம்போதரனிலம்பன்விழுத்தவத்தில்
வாழிலம்பாக்கனிலம்பகேசன்சீர்மலிசருவக்கியன்வயங்கு
சூழ்சடைபுனைந்தேயுறைசமபுத்திசாத்தியன்சத்தியன்சுதாமா
ஆழினைக்கடந்தகாசிபன்வசிட்டன்விரசனத்திரிசொலுக்கிரனே. (௭)

சிரவணன்சிரவிட்டகன்குணிகுணிவாகுத்திகழ்தருகுசரீரன்
வருகுனேத்திரன்காசிபனுயருசனாமாசறுசியவனனுண்மை
கருதியபிரகற்பதியுசத்தியன்சொல்வாமதேவன்மகாகாயன்
பரிவிலாதுறையுமகானிலன்மறைநூல்பகரும்வாசச்சிரவாவே. (௮)

சுவாசனற்சியாவாசுவனெறிபிறழாச்சுவையதிச்சுரன்றுகளில்லாத்
தவாதமெய்ஞ்ஞானவிரணியநாபன்றனிக்கவுசல்வியன்றகைசால்
சிவாகமமுழுதுமுணரும்லோகாட்சிகிரதுமிசுமந்துறுசிந்தை
யவாவினைக்கடந்தசைமினிகவந்தனைறகுசிகந்தரன்பிலக்கன். (௯

சாற்றிடுதாக்காயணியுயர்கிரதுமான்கவுதமன்றகைசாலப்
போற்றுபல்லாவியுறைமதுபிங்கன்சுவேதனற்கேதுபொங்குசிதன்
றேற்றியபிரகதுக்கனன்குணருந்தேவலன்கவிசுடர்ஞான
வாற்றல்சால்சாலிகோத்திரன்மறைசொல்லாறறிதவச்சுவசியனே. (க0)

மாசறுமுவனுச்சுவன்சரத்துவசுமகிழ்குண்டகன்னன்மாகும்ப
னேசலில்சகலன்பிரபாகுகனுனூகனியம்புவித்தியுதன்சம்புகனோ
ராசிலாச்சுவலாயனனக்கபாதன்குமாரனுத்தியோதனனருள்கூர்
காசிலாவச்சன்குசிகன்மெய்க்கருப்பன்மித்திரகன்கவினிருடன். (கக)

ஈங்கிவர்வெண்ணீறணிந்துகண்டிகையுமேர்பெறப்புனைந்துநான்மறையும், பாங்கினிலுணர்ந்துநீதிலாப்பாசுபதவிரதத்தினிலொழுகி, மாங்குயிற்கிளவிபங்கனைமுன்னிவைகுவார்மற்றிவர்குரவர், பூங்கழற்றொழுதுகண்ணுறுதல்பூசைபுரிபவர்முத்தனொன்றுரைத்தான். (கஉ)

குரவர்பெயருமாணாக்கர்பெயருமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசசு.

---

## சிவபிரானுமாதேவிக்கருளியவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முத்தரென்றுரைத்தலோடுமுனிவரனுருவாய்வந்த
வத்தனேயுமையாளீசன்குறங்கின்மேலிருந்தநாளிற்
பத்திமையோடுமுக்கட்பரமனைமகிழ்ந்துநோக்கி
யெத்திறங்கேட்டாளென்றகண்ணனுக்கிசைக்கலுற்றான். (க)

மந்தரவரையின்சாரன்மழைதவழ்சோலைநாப்ப
ணந்திநேர்வண்ணனன்பாலுமையொடுமமர்ந்தகாலைச்
சிந்துதேனொழுகும்வாசச்சினைமலர்பலவுந்தாங்கிச்
சுந்தரக்களபக்கொங்கைச்*சுபாவதிவந்துற்றாளே. (உ)

---

* சுபாவதி - உமாதேவியினதுசகி.

வந்தவளளித்தவாசமலரிணைமாலைகட்டிக்
கந்தமார்கூந்தல்வார்ந்துகைசெய்துகவினச்சேர்த்திப்
பந்தணிவிரலினுளைக்குறங்கின்மேலிருத்திப்பாங்கி
னந்தவில்கணங்கள்போற்றநாயகன்வைகினானே. (௩)

வைகியபோதுதேவிமலர்முகமெடுத்துநோக்கி
மைகிளர்மடமைநெஞ்சின்மானுடர்க்கருணீயாதாற்
செய்குவையென்னலோடுந்திருவுளமகிழ்ந்துதேன்சோர்
மொய்குழற்பாவைகேட்டியென்றரன்மொழியலுற்றான். (௪)

கருமமாதவஞ்செபஞ்சொல்காசறுசமாதிஞானம்
புரிபவர்வசமதாகிப்பொருந்திடேம்புரையொன்றின்றித்
திரிவறுமன்புசெய்வோர்வசமதாய்ச்சேர்ந்துநிற்பே
முரைசெய்வேமவர்முனெய்தியவருளத்துறைவேமென்றும். (௫)

வருணவாச்சிரமதன்மமலரவன்வகுத்தவாறு
புரிவதிங்கரிதாமென்றேபொற்புறவுரைத்தல்செய்தே
மரிறபத்தெரிந்துமற்றோர்வருணவாச்சிரமதன்ம
முரியநம்மன்பரன்னதாற்றிடற்குரியராவார். (௬)

அன்னதுபுரிந்துநம்மையன்பினாற்சேவைசெய்வோர்
மன்னியமலத்தினோடுபாசமாய்ந்தொழியவாய்த்த
பொன்னுலகடைந்துநாம்வாழ்பதியினிற்பொருந்திமிக்கோ
ரொன்னவரோனுஞ்சேர்தற்கரியவீடெய்துவாரால். (௭)

அடுத்தடிவணங்குகின்றவாசறுகுரவர்தீக்கை
கொடுத்திடக்கொண்டுநன்காய்க்கோதிலித்தருமந்தன்னைத்
தொடுத்துறவாற்றிற்றீக்கைசெய்திடார்சொன்னதன்ம
மெடுத்துறவியற்றும்பேற்றிற்கோடிபேறெய்தலாமால். (௮)

ஆதலாற்றீக்கைசெய்தேவருணவாச்சிரமதன்மந்
தீதறவாற்றல்வேண்டுங்கலியுகஞ்சேருந்தோறு

மேதமிலாதயோகாசாரியனாகியாமே
கோதின்மாணாக்கரோத்திக்குழைந்திடவெய்துவேமால். (கூ)

எய்தியநம்மையன்பாலியையுமாணாக்கர்தம்மைச்
செய்திறநீங்கிநின்றுதீநெறியொழுகுவோர்கண்
மெய்தெரிந்துணரமாட்டார்விளங்கிடுஞானமன்னி
யுய்திறமுணர்ந்தோர்தாமேயுற்றுநன்கறிவரன்றே. (க0)

முத்திநன்னெறியிற்செல்லாவாயிலின்முயன்றுசெல்வோ
ருத்தமரல்லர்வெய்யர்குருடர்மற்றாமராவார்
வித்தகசைவதன்மஞானமெய்க்கிரியைவீறூர்
பத்திமைச்சரியையோகமென்னநால்வகையாம்பார்க்கில். (கக)

அறைபசுபதிபாசத்தையறிதலேஞானமாகு
முறையிலாறத்துவாவைமுன்னுபுசுத்திசெய்தன்
மறுவறுகிரியையாமால்வருணவாச்சிரமதன்மத்
துறைதலேசரியைநம்மையுன்னலேயோகமாமால். (கஉ)

இவுளிமேதங்களாறிங்கியற்றலினுளத்தைதமற்றோர்
நவையறநிறுத்தனன்காநவையறநிறுத்தற்கென்று
மவநெறிவிடயத்தாசைவைத்தவரகங்கொளாராற்
றவநெறிவிழைந்துசெல்வோர்தாமிகவிரும்புவாரே. (கங)

உயரவாநீங்கின்ஞானமுறுமுறில்யோகமுண்டாஞ்
செயிரிலாயோகம்வல்லோர்தீநெறியொழுகிவெய்ய
மயலுறுமனத்தர்போலவரம்பில்பாவங்கள்செய்தே
யியலினுமியைதல்கூடாவின்பவீடெய்துவாரே. (கச)

உயிர்க்கெலாமருளிமெய்ம்மையுரைசெய்திந்தியங்கள்வென்று
நயப்புறவேதமோதிநவையறவோதுவித்துச்
செயப்படுவேள்விசெய்துசெய்வித்துத்தீதிலார்பால்
வியப்புறக்கொடுக்கின்ஞானம்யோகமேவுவர்களன்றே. (கரு)

மெய்தெரிஞானிஞானவழலிஞன்மெய்மையச்சுட்டுச்
செய்யுநம்மருளால்யோகமடைந்துசெய்கருமஞ்செற்றே
யுய்வகையுணர்வானுய்யவேண்டிஞேனுற்றேயாற்று
மையல்செயிருவகைத்தாங்கருயத்தான்மயங்கிடானே. (கசு)

கருமங்களியற்றல்செய்வோர்காசறுகருமந்தன்ஞன்
மருவுறுபலத்தைநாளுமனங்கொளாராகிநின்றே
யொருவிடவேண்டுநன்காயுளுற்றிடுகருமந்தன்னைப்
புரிவுருதொழிந்திருத்தல்பொற்பலவாகுமன்றே. (கஎ)

புறத்தினிற்பூசைசெய்துபொற்புறத்தெளிந்துநம்மைத்
திறப்படவுணர்ந்துநெஞ்சிற்செம்பொஞேடிணையாவெண்ணி
நெறிப்படவியற்றுகின்றகருமங்கள்யாவுநீத்துச்
சிறப்புடையோகஞ்செய்வோர்சிவகதிசேர்குவாரே. (கஅ)

வருந்திடாதிருந்துநம்மைமாசறுஞானந்தன்ஞற்
றிருந்திடவுணருகின்றமனமனந்திகழுநம்மைப்
பொருந்திடத்துதிக்கும்வாக்கேவாக்குளம்புகுந்தநம்மை
யரும்பெறற்பூசையாற்றுங்காயமேகாயமாமால். (கக)

போற்றிடுநம்மைப்பூசைபுரிவதேகருமம்வேள்வி
யாற்றிடல்கருமமன்றுலகத்திடைநம்மைமுன்னி
நோற்றுமெய்வாட்டலுனேதவஞ்சிலநூல்கடம்முட்
சாற்றிடவியற்றுசாந்திராயணந்தவமதன்றே. (உ௦)

செய்யவஞ்செழுத்தைத்தூயகுடிலையைச்செபித்தலுனே
மையறுசெபமதாகுமாமறைதன்னையோத
லையமில்செபமதன்றுலகத்திலுணம்மையுன்ன
லுய்வுறுதியானமற்றென்றுன்னுதறியானமன்றே. (உக)

உற்றநம்மாகமத்தையுணர்தலேஞானமாகு
மற்றும்வேறுணர்தன்ஞானமன்றுமன்னகத்துளண்பாய்த்

தெற்றெனப்புறத்திற்பூசைசெய்வதுவேண்டுநன்காம்
பற்றறவகத்துட்பூசைபாற்படவியற்றருனே. (உஉ)

நெறிப்படுமகத்திற்றூய்மைமிகரிலாத்தூய்மையாகும்
புறத்தினிற்றூய்மைதூய்மையன்றுளம்பொருந்தவுன்னித்
திறப்படச்சேவைசெய்தல்சேவையாந்தியானியாது
முறைப்படச்சேவைசெய்தல்சேவையன்றுமான்முன்னில். (உ௩)

கூறுறயாவுஞ்செய்துகோதிலின்பத்தில்வைகு
மாறிலாநமக்குமற்றைமனிதரால்வருவதுண்டே
தேறுறப்புறத்தகத்துட்சிறந்துசெய்பாவனைக்கே
வீறுறமகிழ்ந்துநின்றுமெய்யருள்புரிகுவேமால். (உச)

திகழ்தருதியானமான்மாச்செய்திடுகிரியைமெய்நம்
பகர்தருமத்தினுக்குப்பலத்தினைமுன்னிடாது
துகளின்மற்றதனைச்செய்தறூய்மையாஞ்சுட்டியொன்றை
வகைபடவியற்றல்செய்தன்மற்றதோடினையன்றுமால். (உரு)

விழைந்துறவணங்கினோர்க்கும்விழைந்ததையருள்வேமுள்ளங்
குழைந்துநற்றருமஞ்செய்துகோதறவுறைந்திங்கெம்பாற்
றழைந்தபேரன்பினோடுந்தாழ்விலாஞானந்தன்னி
னழுந்தடியார்கட்கெட்டுவகையடையாளமுண்டால். (உசா)

பத்தரோடுறவுகோடல்பூசனைமகிழ்ந்துபார்த்த
லுத்தமபூசைசெய்தலுடம்புநம்பொருட்டால்வாட்டல்
வித்தகக்கதைகள்கேட்டல்கேட்டுமெய்விதிர்த்தனம்மைச்
சித்தமீதிருத்தல்பாவித்திடலெனலாமாற்செப்பில். (உஎ)

புன்னெறிமிலேச்சரேனுமின்னவைபொருந்திநீங்கி
லன்னவர்தாமேயாசின்மறையுணரந்தணாள
ருன்னிடுமென்பர்தம்மையொழிந்தகன்றுறைபேயம்யாமு
நன்னெறியவருநாளுநம்மைவிட்டகன்றிடாரே. (உஅ)

முனிவருபத்தர்மூன்றுகாலமுநீரின்மூழ்கிக்
கனலிடையவிகள்பெய்துகண்ணுதலிலிங்கந்தன்னி
னைமலர்தூவித்தானநன்குறநல்கிநம்மை
மனமுறமுன்னியார்க்குமகிழ்ந்தருள்செய்யவேண்டும். (௨௯)

படிறொழிந்துண்மைசொல்லிமகிழ்ந்துயர்பரமலோகங்
கடவுடானுண்டென்றெண்ணிக்களவொடுகொலைகணீங்கி
யொடிவறயோகஞ்செய்தாங்குண்மைநூல்பயிற்றுவித்து
மடனிலாப்பிரமசாரியாகியேவைகல்வேண்டும். (௩0)

மேதகுசிவநூல்கேட்டுவிழுச்சிகைபுனைந்துமுந்நூ
லேதமின்றாகிப்பூண்டுநீத்தொழிலிகந்துவெண்ணீ
றோதரத்தோடுபூசிக்கண்டிகையணிந்திரண்டா
யோதுவாப்பதினான்கெய்திற்சிவபூசையுஞற்றவேண்டும். (௩௧)

பிறந்திடுதிங்கடோறும் * பிரமகூர்ச்சத்தினீரா
லறங்கணாமறைகளோதியண்ணறனிலிங்கந்தன்னைச்
சிறந்திடவாட்டிப்பின்னர்த்தீதிலந்நீரைமுன்னா
ளுறைந்திடுபாவமெல்லாமொழிந்திடவுண்ணல்வேண்டும். (௩௨)

உண்டவன்பலர்தாமுண்ணுமிடத்தினுமுயர்ந்துவைகு
மண்டுதென்புலத்தோர்க்கூட்டுமுண்டியும்வைத்திருந்த
பண்டைநாட்சோறுமுண்டல்பான்மையன்றாமான்மெய்ம்மை
விண்டநான்மறைகள்வல்லவேதியர்நெறிகள்சொல்வாம். (௩௩)

பொறையொடுசாந்தியுள்ளமகிழ்வுமெய்புகறல்வெய்ய
நெறியில்கள்ளாமைஞானநிலவநீறணிதறுன்னி
யுறைதருகுழுவினீங்கலுற்றவைம்புலன்கள்வென்ற
மறுவறுபிரமசாரியொழுக்கமன்னிடுதன்மாண்பே. (௩௪)

ஐயமேற்றுண்டலாசில்வறுநிலத்தமர்ந்துதுஞ்சன்
மையின்முற்றத்துறந்தோர்மாசில்வானப்பிரத்தர்

---

* பிரமகூர்ச்சம் - நுனித்தருப்பையால் முழவளவுமுடிந்தமுடிச்சு.

செய்பவர்தமக்காமற்றைமச்சிறந்திடுபிரமசாரிக்
கெய்தியகங்குற்போதுமுண்டிடலியல்பாமன்றே. (௩௫)

மறைகளையோதல்செய்யமாசறுவேள்விசெய்த
னெறியினிற்காத்தல்வெய்யநெஞ்சராயுறைவோர்தம்மைத்
திறன்மிகுபகைஞர்தம்மைச்செற்றிடல்சேனையோம்ப
லெறிபடைபற்றல்வெண்ணீறிடுதலேத்தரசர்க்காமால். (௩௬)

ஆவினையோம்பனன்காவாணிபமியற்றலாற்ற
வோவறவுழவுசெய்தலுணாத்திடுவணிகர்க்காமாற்
றேவரைப்பணிதல்சோலைவளர்த்திடமேமென்கோதை
மேவுறுமனையாடன்னைமேவன்மூவருக்குமாமால். (௩௭)

ஆசறுபிரமசாரியறிந்துமுற்றத்துறந்தோ
னேசில்வானப்பிரத்தனெனுமிவர்மூவருக்கும்
பாசிழையல்குல்சூழ்ந்தபருமணிக்கலாபமின்னும்
வாசமென்கூந்தன்மாதர்வருமுலைமருவொணாதால். (௩௮)

கருநெறிக்கூந்தலார்க்குக்கணவரைவணங்கலேனே
யுரியநற்றருமமாகுமொண்டிறற்கணவர்சொல்லாற்
பருவரைபயந்தநங்காய்பணிந்துநம்பாதம்போற்றிப்
புரியவிழ்மலர்கடூவிப்பூசனைபுரிதலாமால். (௩௯)

கணவர்தம்மேவல்பூண்டுகற்பினிலொழுகிடாதார்
நணுகருங்கொடியவெய்யநரகினுள்ழுந்துவராற்
பணிவுறுங்கணவர்தம்மையிகழ்ந்துநற்பான்மையின்றி
யணிகலன்றுறந்தமாதர்தன்மையையறைகுவாமே. (௪0)

தரையினிற்கிடத்தலுணல்கிடறயங்குநீரி
லரியவெண்ணீற்றின்மூழ்கலண்ணலைப்பூசைசெய்த
லொருபகலுண்டுவைகலட்டமிபதினன்கோடு
மருவுபூரணையிலுண்டியொழிந்திடல்வழக்கதாமால். (௪௧)

பன்மணிக்கலாபவல்குற்படர்முலைமடநல்லார்க்கும்
பின்னவர்தமக்குநம்மைப்பெட்புறமனத்திலுன்னி
முன்னையஞ்செழுத்தைநன்காய்முனிவறச்செபித்தருளே
சொன்னநற்றருமமாகுந்துணைமுலைத்தோகைபோல்வாய். (சுஉ)

வேண்டியவுடம்புதாங்கியெம்மைமேதகவுணர்ந்து
மாண்டமெய்ஞ்ஞானத்தோடுவைகுவோர்விடயத்தாசை
காண்டகச்செயினுந்தூயகமலமெல்லிலையினீரிற்
பூண்டவெம்பாவம்யாவும்பொருந்திடாதகலுமன்றே. (சுங)

அன்னவர்தமக்குச்சொன்னவருணவாச்சிரமமின்று
லின்னதிங்கியற்றவேண்டுமியற்றொருதென்பதில்லை
மன்னியநம்மையொத்துவயங்குநம்முலகினீங்கித்
துன்னுமிவ்வுலகில்வந்துதோன்றுருத்திரர்களாவார். (சுச)

ஆங்கவர்நோக்காற்பாவம்யாவையுமகலச்செய்வா
ரீங்கிவர்தம்மைநெஞ்சிலிகழ்ந்துரையாடினோர்கள்
வீங்கழனரகந்தன்னில்வீழ்ந்துவீழ்ந்தாவிசோர்ந்து
தீங்குறுபிறவிதன்னிற்சேர்ந்துசேர்ந்துழல்வரன்றே. (சுரு)

திருந்திடவயன்மால்வைகிச்சிறந்திடுபதங்கண்மற்றோர்
துரும்பதாமவர்க்குப்பல்காற்சொல்லியெனம்மைநெஞ்சு
ளிருந்திடநினைத்தருளேயின்பவீடளிக்குஞ்செவ்வாய்
முருந்திளநகையாயென்னமுன்னவன்கூறினானே. (சுசு)

குரவனாலுணருஞானங்கோதிலாவறிவுமன்னி
விரிபசுபதிபாசங்களறிந்திடப்படுவவீறார்
பொருவிலாவிலிங்கபூசைபுரிவதேசெயலிவற்றிற்
குரியமூவருணத்தார்களுரையதிகாரியாவார். (சுஎ)

திதறச்சிவன்றனுண்மைசெப்புமந்திரங்கடாமே
சாதனமவனையொத்துத்தயங்கல்சாத்தியமதாமா

லோதியவிவற்றைநன்காவுற்றுறவுணர்ந்தோன்முனே
யேதமின்றகயாவுமெய்திடவுணர்ந்தமேலோன். (சஅ)

வகைப்படப்புறத்திற்பூசைமாசறப்புரிந்துநன்னெஞ்
சகத்தினுட்பூசைசெய்யவேண்டுமாலதனில்வேறு
மிகத்தனியுயர்ந்ததில்லைவிரித்துநாமெடுத்துக்கொண்டு
பகுத்திடுபூசைவேண்டா பரம்ஞானிகட்குத்தானே. (சகூ)

ஞானத்தாற்காலமூன்றுநவையறுபொருளைமுன்னி
மோனத்தாலிருந்துநோக்கிமுன்னியஞானநீங்கித்
தானத்தனுகித்தானேதகைமையாயுறையவேண்டுங்
கானுற்றதுளவப்பைந்தார்க்கருமுகிலனையகண்ணா. (ரு0)

உரியநற்பொருளினுள்ளமொன்றிடாதுறையின்மற்றைக்
கருமமுற்றியற்றியென்னைகாசறுபொருளினுள்ள
மருவியேயுறையின்முன்னம்வகுத்திடுகருமந்தன்னைப்
புரிதரவேண்டாவென்றைப்புகலுநான்மறைகளன்றே. (ருக)

அஞ்செழுத்துணர்ந்தேமிக்கவாசிலாமுத்திதன்னிற்
செஞ்செவேயடையவேண்டுஞ்சிறந்ததோர்முத்தியெய்தி
யுஞ்சிடநினைதல்செய்வாறெைப்பிலாவஞ்செழுத்தை
நெஞ்சினிலுணர்ந்துநாளுநிகழ்த்திடவேண்டுமென்றே. (ருஉ)

சிவபிரானுமாதேவிக்கருளியவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ககூஅ.

---

## பஞ்சாக்கரமான்மியமுரைத்தவத்தியாயம்.

---

என்றலுங்கங்கைசூடுமிறைமுதலஞ்செழுத்தை
யொன்றநீயுரைத்தியென்னமுனிவரனுவந்துநோக்கிக்

கன்றுகொள்குணிலாய்வாங்கிக்கனியுகுத்திட்டுமென்மை
வென்றிகொள்கண்ணனுள்ளம்விழைந்திடவிரிக்கலுற்றான். (க)

உரைத்தவஞ்செழுத்தின்வீறிங்கொருநூறுகோடியாண்டு
விரிக்கினும்விரிக்கலாகாதாயினும்விமலற்போற்றிச்
சுருக்கமாயுரைப்பாமுன்னைத்துகளறுகுடிலையோடு
மிருக்குமாறெழுத்தாயீறிலிறைவனஞ்செழுத்துமன்றே. (உ)

ஓதுமந்திரங்கட்கெல்லாமுயர்ந்திடுமுயர்ந்துநின்ற
நீதிநான்மறையின்சாரமாகுமாற்சிவன்றனன்ப
ரோதமின்முத்திவீட்டையெய்திடக்கொடுக்குமென்று
மாதியாயுறையுமீசனுருவமாயமருமன்றே. (௩)

ஆலம்வித்தென்னக்கோடிபொருளெலாமடங்கவைகு
மூலமாயுறைந்துமன்னிமுக்குணங்கடந்துவெய்ய
காலனாருயிரையுண்டகனைகழற்கடவுண்மூர்த்தி
மேலதாங்குடிலைதன்னின்மேவியீற்றிருக்குமன்றே. (௪)

பண்ணவனுருவாம்பஞ்சப்பிரமங்கள்பழுதொன்றில்லா
வண்ணலஞ்செழுத்தின்மன்னியடைவினிலமருமந்த
நண்ணுமஞ்செழுத்துக்கூறுநம்பனேவினைகளெல்லாங்
கண்ணறக்களைந்துமாற்றிக்கனிந்தருள்புரிவனன்றே. (௫)

அருளவனிலனேற்செய்யவலர்கதிர்ப்பரிதிநீங்க
விருளிடைமயங்கல்போலவெய்துபேருலகமெல்லா
மருளினான்மயங்கிமாழ்குமன்னிடுபடைப்புமின்றாங்
குருடர்போற்சேறலின்றித்தருமமுங்குலையுமன்றே. (௬

மருத்துவனில்லனேலுள்ளமயங்கிடவந்துசீறி
யுருத்தெழுவெந்நோயாளருய்ந்திடாவாறுபோலத்
திருத்தகவுறையுமீசனிலனெனிற்சிறக்குமாறு
விரித்தபேருலகமெல்லாம்விளிந்துகெட்டொழியுமன்றே. (௭

ஆதலாலெங்குமாகியழிந்திடாவனுதியாகி
யோதுநான்மறையினுச்சியுறைந்திடுசிவனிங்குண்டாற்
றீதிலாவவனைநாடித்தேர்ந்துறவுணர்ந்துசொல்லுங்
கோதின்மந்திரம்யாதென்னிற்குறிக்குமஞ்செழுத்துத்தானே. (அ)

அண்ணலாமீசன்சொன்னமந்திரமனேகமுண்டா
லெண்ணிலிவ்வஞ்செழுத்தோடிணையிலதாகுமொன்றும்
பண்ணமைவேதநான்கும்பழுதில்சாத்திரங்களாறு
நண்ணுமாலவைக்குமேலாநவையிலஞ்செழுத்தின்மன்னோ. (கூ)

மறையொருநான்கும்வல்லோர்மாசிலஞ்செழுத்தைவல்லோர்
நெறியிலாப்பதிதரோனுநிகழ்த்துமஞ்செழுத்தையோதி
லுறைதருபாவநீங்கவுயர்கதிசேர்வனொன்றுக்
கறைமிடற்றிறைவன்றேவிதன்னொடுங்கழறினனே. (க0)

என்றிறைமுதல்வன்கூறவிமையமால்வரைபயந்த
மன்றலங்கோதைவல்லிவருமுலைக்கால்கள்சாயக்
குன்றவிற்குழைத்தோன்செய்யகுரைகழலடியிற்றாழ்ந்தங்
கொன்றமற்றிவற்றைநன்காவுற்றுணர்ந்துரைக்கலுற்றாள். (கக)

கருவினைபெருகநின்றகடையுகந்தன்னில்வீங்கி
மருவுறுமாயைதன்னான்மாசுறமூடப்பட்டாங்
கரியநற்றருமநீங்குகாலைநின்னடியார்தூய
பொருவறுமுத்தியெவ்வாறெய்துவர்புகறியென்றாள். (கஉ)

வள்ளிதழ்க்குவளைபோலவரிபரந்தகன்றகண்ணு
*புள்ளியஞ்செழுத்தையோதின்முத்திவீடுறுவார்வெய்ய
கள்ளுநரோனுமன்பில்கடுங்கொலையாளரோனு
மெள்ளியகுலத்தோரோனுமிசைத்தவிவ்வுகத்திலென்றான். (கங)

கலிவிருத்தம்.

இழிந்திடுகுலத்துதித்தெய்தினோர்கடாம்
விழைந்துயர்கருமத்தையுளுற்றில்வெந்நர

---

* உள்ளுமுறைமை, "சிவஞ்சத்தி யான்மாத் திரோதந் திமிரஞ், சிவமுதலைந் திற்சிந்தை செய்." என்னும் இறைவனூற்பயனாலுணர்க.

கழுந்துவரஞ்செழுத்தறைதல்கூடுமோ
தொழுந்தகையிறைவநீசொல்லுவாயென்றாள். (கச)

என்னலுமிறைசத்ததிங்குண்மையாமிது
மன்னிடமறைந்ததால்வகுத்திலேமுனம்
புன்னெறிப்பதிதர்கள்பொருவிஞன்மறை
யுன்னிநன்குரைத்திடற்குரியரல்லரே. (கரு)

அன்னவர்மறையினாற்பூசையாற்றிடில்
வெந்நரகிடையினில்வீழ்ந்துமாழ்குவார்
பன்னுமஞ்செழுத்தினாற்பூசைபண்ணிடி
னுன்னருமுத்தியிலுறைந்துவாழ்வரால். (கசு)

மறிபுனலருந்தியும்வளியைமாந்தியு
முறுதவமியற்றினுமுறுதல்கூடுமோ
வறையுநம்மூலகினிலஞ்செழுத்தினன்
முறையினிற்பூசனைமுடித்துளோர்க்கலால். (கஎ)

ஆதலாலஞ்செழுத்தறைந்துநம்மையே
கோதில்பூசனைசெயும்பலமோர்கோடியி
லோதிலோர்கூற்றினையுதவவல்லவோ
நீதிலாவேள்விகள்செய்தவங்களே. (கஅ)

மறிபுனற்பிரளயம்வந்தநாளினி
லுறைவம்யாமொருவனுயுறைந்தகாலையி
லறைதருமறைகள்சாத்திரங்களண்மியே
நெறியிலஞ்செழுத்தினுண்மேவிநிற்குமால். (கக)

மேவுறுகாலையில்விளங்கு*தேவர்கண்
மூவர்வந்துதிப்பராலவர்பின்முன்புபோ

* பஞ்சாக்கரங்கள் படைத்தலாதிக்கும் ஏதுவென்பது " படைத்து மவையளித்தும் பண்ணியவை யெல்லாந், துடைத்து மறைத்துந் துயர்நின் - றெடுத்து, மொழியாத வைந்தொழிலு முய்த்திடுமவ் வாதி, மொழியான வஞ்செழுத்து முன்." என்னும் பஞ்சாக்கரமாலைச் செய்யுளானுமுணர்க.

லோவறவுலகெலாந்தோன்றுமுற்றபின்
வாவுநீரழித்துறப்பெருகிமண்டுமால். (உ௦)

மண்டுநீரனந்தன்மேன்மாயன்கண்படை
கொண்டனனுந்தியிற்குளிர்ந்துநாறிய
முண்டகமீதினின்முகங்களைந்துடைப்
பண்டைநான்மறையவன் பரிவிற்றோன்றினன். (உக)

தோன்றினேன்படைப்பதற்காகத்தூநெறி
யான்றபேர்முனிவரீரைவர்தங்களைத்
தான்றனிபடைத்தனன்படைத்துத்தான்மகிழ்ந்
தீன்றவர்தம்மொடுமெய்ம்மைத்தாழ்ந்தனன். (உஉ)

தாழ்ந்துதான்படைத்தவர்படைக்குஞ்சத்தியை
யாழ்ந்தபேரருளினலருளென்றோதலும்
வாழ்ந்திடவைம்முகத்தாலும்வல்வினை
போழ்ந்திடுமெஞ்செழுத்தையும்புகன்றுளேம். (உங)

அறைந்தவஞ்செழுத்தையுமுகங்களைந்தினுற்
சிறந்திடமலரவனுரைத்தித்தீதற
வுறைந்திடுபுதல்வருக்குணர்த்தினனவர்
நிறைந்தபேரறிவினனிலவவோர்ந்தனர். (உச)

ஓர்ந்துயர் * முஞ்சவானடுக்கலுற்றுவிண்
ணோர்ந்திடுதேவர்களாண்டிலாயிரஞ்
சேர்ந்திடுகாற்றினையருந்திச்செய்தவம்
வார்ந்திழிபுனலிடைமன்னியாற்றினர். (உரு)

ஆற்றியவீற்றினினஞ்செழுத்தின்வீ
றேற்றிடவிரித்துநாமியம்பல்செய்தனஞ்
சாற்றியவகையினையுணர்ந்துதாநனி
தோற்றிடப்படைத்தனர்துலங்கயாவையும். (உசு)

ஆசிலஞ்செழுத்தெழின்முகங்களாறொடுந்
தேசுடைக்கைகளுன்கோடுஞ்செம்பொனேர்

* முஞ்சமலை - மேருவின்சிகரங்களுள்ளே ஒன்று.

காசிலாநிறத்தொடுங்கண்கண்மூன்ஞெடுங் (உஎ)
தூசுலாமுலையொடுந்துலங்கித்தோன்றுமால்.

வார்சடைமுடியின்மேன்மதிபுனைந்துதேன்
சோர்கழுநீரொடுகமலந்தோன்றிட
வேர்பெறுவரதமோடபயமெல்வளை (உஅ)
சேர்தருகரங்களிற்சிறப்பத்தாங்குமால்.

வெள்ளிவெண்ணிறத்தொளிவிரிந்ததாமரை
யுள்ளுறைபொகுட்டின்மேலுறைந்துசெம்பொனி
னள்ளிலைப்பூண்பலவணிந்துவைகுமாற் (உகூ)
றெள்ளிதிற்றெளிந்தவர்தெளியக்காணவே.

பொன்னிறங்கருநிறம்புகைநிறந்திகழ்
துன்னுமஞ்சளினிறந்துலங்குசெந்நிற
மன்னியேமுறையினில்வயங்கவாய்க்குமா (௩0)
லுன்னருமஞ்செழுத்துணர்ந்துகாணிலே.

விரித்தவஞ்செழுத்தினைவிந்துநாதமோ
டொாத்திடவேண்டுமாலுாக்கும்விந்துநற்
றிருத்தகுபிறையெனத்திகழுநாதந்தா (௩க)
னெரிச்சுடர்ச்சிகையெனவிலங்கித்தோன்றுமால்.

எயிரண்டாமெழுத்திசைக்கிற்பீசமா
மாயிலஞ்சாமெழுத்தமருஞ்சத்தியா
மாய்விலாதுறைதருவாமதேவனே (௩உ)
தூயமந்திரத்தினுக்கிருடிசொல்லினே.

பந்திசந்தச்சொவுரைப்பர்பான்மையா
லந்திவெண்பிறைசடையிலங்கவன்பர்கள்
வந்துநின்றேத்திடமன்றுளாடிய (௩௩)
செந்தழல்வண்ணனேதெய்வமென்பரால்.

தவமுடைக்கோதமன் றயங்குமத்திரி
நவையிலாக்கோசிகனவிலுமங்கிராப்
பவமறவுறைதரும்பரத்துவாசனு
மிவர்களஞ்செழுத்தினுக்கிருடியாவரால். (௯௪)

அறைறசெய்காயத்திரியனுட்டுப்பாசற
வுறைதிருட்டுப்புடனுயர்ந்துவைகிப
மறுவறுபிரகதிவிராட்டுமாசிலா
நெறிகொள்சந்தச்செனநிகழ்த்துவார்களால். (௯௫)

இந்திரனுருத்திரன்விண்டுவேர்பெறு
கந்தநாண்மலரயன்குமரன்காசிலா
நந்தவிறெய்வங்களாவர்நம்முக
மைந்தினுமைந்தெழுத்தடைவின்மன்னுமால். (௯௬)

ஆதலாலென்னையுமமருநின்னையுந்
தீதிலஞ்செழுத்தினூற்பூசைசெய்திடிற்
கோதிலாமுத்தியைக்கொடுக்குமற்றதை
யோதிடும்வகையினையுணரக்கூறுவாம். (௯௭)

இறைறவனதானையுங்கிரியையோடியன்
மறுவறுமன்புமோர்மாசிலாவகை
யுறைகுருதக்கிணையுதவலுந்தவிர்ந்
தறிவிலார்செபித்திடிற்பலமின்றாகுமால். (௯௮)

தத்துவமதனைநன்குணர்ந்துதாவிலா
வுத்தமமறையவன்றன்னையுற்றுயர்
பத்தியோடவன்றனைப்பூசைபண்ணியே
வித்தகமந்திரங்கேட்கவேண்டுமால். (௯௯)

குரவன்மாணுக்கனைக்கோதின்றாகவே
பருவமோரொன்றுநன்குணர்ந்துபாற்படப்

பொருவறுகுடத்தினீர்சொரிந்துபூந்துகி
றிருமணிக்கலத்தொடுகலவைசேர்த்தியே. (௬0)

பூசுரர்தங்களைப்பூசைசெய்தபின்
வீசலைபொருகடற்கரையின்வீழ்புனன்
மாசறுநதிக்கரைதன்னின்மாமணிப்
பாசிழையுமையவள்பங்கன்கோயிலில். (௬க)

ஆவுறைகோட்டத்திலன்றிநன்குதான்
மேவுறுமனையினிலடைந்துவீறுசேர்
தாவிலாநாளினிற்றகைமைசார்ந்திட
வோவிலஞ்செழுத்தினையுரைக்கவேண்டுமால். (௬உ)

உரைத்துயர்மங்கலமுவந்துசொன்னபின்
றிருத்தகவாயிரத்தெட்டுருத்தின
மருத்தியாற்செபித்துநன்கமரவேண்டுமால்
விரித்தபேருலகினின்மேவுநாளெலாம். (௬ங)

எழுத்தொரொன்றினுக்கொருநான்கிலக்கமாய்
விழுத்தகுமன்பினாற்செபிக்கவேண்டுமாற்
பழுத்தபேரன்பினாற்செபிக்கும்பான்மையோர்
தொழத்தகுசித்தராய்த்துலங்கிவாழ்வரே. (௬௪)

இன்னணஞ்செபிப்பவரொறிபுனற்றட
மன்னுபுமூழ்கியேவடக்குமற்றதாம்
பன்னுறுகிழக்கினைநோக்கிப்பாற்படத்
துன்னுமாசனத்தின்மேற்றுலங்கவைகியே. (௬௫)

பேசு * சோடண † தகனப் ‡ பிலாவண
மாசறச்செய்துரையவித்துமன்னிட
வேசலில்பூதசுத்தியையியற்றியே
யாசறநியாசங்களடைவினாற்றியே. (௬௬)

---

* சோடணம் - உலர்த்தல். † தகனம் - தகித்தல். ‡ பிலாவனம் - நனைத்தல். இவை முறையே வாயுபீசத்தானும், அக்கினிபீசத்தானும், வருணபீசத்தானும் இயற்றப்படுவன.

பெட்புறவேயியல்பிராணுயாமஞ்செய்
துட்டெளிந்தென்ளுெடுநின்னையுன்னியே
நட்புடைக்குரவர்நல்லுரையிற்றீவினை
மட்கிடச்செபித்திடவேண்டும்வாய்ப்பவே. (சஎ)

உன்னியே * யுளத்தினிற்செபித்தலுத்தம
மன்னுவோர்கேட்டிடாவகைசெபித்திடன்
முன்னிடின்மத்திமமுழங்கவோதியே
யன்னதுசெபித்திடலதமமாகுமால் (சஅ)

உத்தமமத்திமமதமமென்றுற
வைத்திடுசெபங்களின்மாசிறெய்வங்கள்
பைத்தபாம்பணியுருத்திரன்மென்பைந்துழா
யத்தனல்லயனெனவறைகுவார்களால். (சகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கருப்பமுடையசெபமென்றுங்கருப்பமில்லாச்செபமென்றும்
விரிக்கப்படுமொருற்பதுருவளவுமூச்சுவிடாதிருந்து
திருத்துமுணர்வாற்செபித்திடுதலாகுந்தீதில்கருப்பமுடை
வருத்தமறுநற்செபமென்னவல்லோருணர்ந்துகூறுவரால். (ருo)

உறவேமூச்சுவிட்டிருந்துசெபித்தறன்னையுற்றுணர்ந்தோ
ரறைவார்கருப்பமில்லாதசெபமென்ருங்குமூச்செறிந்து
முறையேசெபித்தறனின்மூச்சங்கெறியாதிருந்துமுன்னியே
நெறியாற்செபித்தலுயர்ந்ததெனநிலவுதொன்னூனிகழ்த்திடுமால். (ருக)

---

* உளத்தினிற்செபித்தன்முதலியமூன்றும் முறையே மானசம் உபாஞ்சு வாசகமெனப்பெயர்பெறும். இவை செபிக்குமுறை "மானதந்தான் முத்திக்காம் புத்திமுத்திக் காமந்த, மேனையொலி குத்திரங்களொட்டினுக்கா-மானதத்தை, யோதுகமே லேற்றிவட மற்றையொலி மந்தமிவை, யோதுகசீ ழோடவட மோர்ந்து. அங்குட்டந் தர்ச்சனியு மாகு மொலியினுக்கே, யங்குட்ட மத்திமையு மந்தத்தா - மங்குட்டந், தன்னோ டநாமிகையுந் தான்மா னதத்தாகு, மின்னுமொரு மாலையிசைப் பேம்." என்னும் உருத்திராக்கவிசிட்டச் செய்யுட்களானுணர்க.

விரலிற்செபித்தறனிலெட்டுக்கூற்றிற்கதிகமாம்விரலின்
வரையிற்செபித்தன்மற்றதனில்வயங்குபுத்திரதீபத்தின்
பரவுமணியிற்செபித்தல்பத்துக்கூற்றிற்கதிகம்பானிறச்சங்
கரியமணியிற்செபித்தலதினூறுகூற்றிற்கதிகமால். (ருஉ)

சேயபவளமணியினாற்செபித்தலதனிலாயிரங்கூ
றேயவதிகமாமதனிலிலங்குபடிகத்தாற்செபித்த
லாயிற்பதினாயிரங்கூற்றிற்கதிகமதனின்முத்தினாற்
றாய்தாய்ச்செபித்தலோரிலக்கங்கூற்றிற்கதிகமெனச்சொல்வார். (ருங)

முகைந்தகமலமணியினாற்செபித்தன்முன்னேநாமெடுத்துப்
பகர்ந்தவதனிற்பத்திலக்கங்கூற்றிற்கதிகம்பசியபொன்னின்
றிகழ்ந்தமணியிற்செபித்தலதிற்செவ்வேகோடிகூற்றினுக்கு
மிகுந்தங்கதிகமாகுமால்விரித்திங்கறியவுரைத்திடிலே. (ருச)

முன்பாமக்கமணியினாற்குசப்புன்முடிச்சான்முன்னியே
யன்பாற்செபிக்கும்பலத்தினுக்கோரளவின்றாமா*லக்கமணி
நன்காமுப்பதினிற்செபிக்கினவையில்பொருளுண்டாமொருமூ
வொன்பான்மணியிற்செபிக்கிலறுதுயர்ந்தசெல்வமுண்டாமால். (ருரு)

---

* அக்கமணிகொண்டு செபிக்குமுறைமை "முத்திக்கை யைந்தினன் முற்றுஞ் செபமாலை, புத்திக்கு நூற்றெட்டா கும்புகலி - னத்தரு மாம், பாதமுமா முச்சிதனி னையகந்தன் னைப்பதிக்க, வோறுகநொட டேமுடியை யும். இலங்கித்தா னையகத்தைப் பாவந்தா னேயு, மிலங்கி யா தேதொட் டெணுக - பலம்பெருகு, மேருவினை யின்றியே கோ கலுமா கும்வியனார், மேருவி னொவ்வாது வீறு. ஆறைந்து வெற்றி னை யாதரிப்பார்க் கையைந்தோ, டாறுமறி வாதரிப்பா ருக்கருக - ம றுடனே, பத்துமர ணத்திற் பதினைந்து மற்றையன, குத்திரத்தின் மா லைமணி கொள். வத்திரத்தி னாலே மறைக்க வலக்கரத்தின், வைத்த செப மாலைதனை வாய்க்கவர - மெய்த்தலையிற், பாதமலர் வைத்தாண்ட பண்டிதன்றான் பார்த்திடினுஞ், சேதப் படுஞ்செய் செபம்." என்னும் உருத்திராக்கவிசிட்டச் செய்யுட்களானுணர்க.

இருபத்தைந்துமணியினுற்செபிக்கின்முத்தியெய்துமா
லரியமணிகள்பதினைந்தாற்செபிக்கிலாபிசாரந்தான்
விளைவிற்பலிக்குமங்குட்டமதனுற்செபிக்கின்மிக்குயர்ந்து
மருவற்கரியதாய்ச்சிறந்தமாசின்முத்தியுண்டாமால். (ருசு)

ஆற்றல்சாலத்தர்ச்சனியாற்செபிக்கிற்பகைஞராழிவரா
லேற்றமுடையமத்திமையாற்செபிக்கிற்பொருள்களெய்துமாற்
சாற்றுகின்றவநாமிகையாற்செபிக்கிற்சாந்தியுண்டாமாற்
போற்றுகின்றகனிட்டையாற்செபிக்கில்யாவும்பொருந்துமால். (ருஎ)

மன்னுமனையிற்செபித்தலொருகுணனுமலிந்தங்காளிகை
டுன்னுகோட்டந்தனிற்செபித்தனூறுகுணனுஞ்சுரர்நெடுங்கா
வன்னகாவிற்கானிடையிற்செபித்தலோராயிரங்குணனும்
பன்னுவரையின்மிசையிருந்துசெபித்தல்பதினுயிரங்குணனே. (ருஅ)

எறிநீர்த்திரைபாய்நதிக்கரையிற்செபித்தலிலக்கங்குணனுமாற்
குறைறவெண்மதியோன்கோயிறனிற்செபித்தல்கோடிகுணனுகும்
வெறிநாண்மலர்களெடுத்தணிந்துவிம்மிநறவுவார்ந்தொழுகு
மறனேர்குழலாள்பங்கன்முன்னர்ச்செபித்தற்களவின்றுகுமால். (ருகூ)

பரிதிமதியங்கனல்குரவர்தீபம்பாய்நீர்மறையவரா
னிரைகண்முன்னர்ச்செபிப்பதுவுங்குணனுநிகழ்த்துகுணதிசையைத்
திரியாதிருந்துநோக்கியேசெபிக்கில்யாவுந்தன்னுழையே
மருவியடையுமாலென்னவல்லோர்யாரும்வழங்குவரால். (சுo)

தென்பாற்றிசையைநோக்கியேசெபிக்கிலாபிசாரந்தான்
முன்பாய்ப்பலிக்குமேற்றிசையைநோக்கிச்செபிக்கின்முடிவில்லா
வன்பால்வேட்டபொருளெல்லாமடையும்வடபானேக்கியே
மன்பேரறிவினுன்முன்னிச்செபிக்கிற்சாந்திவரப்பெறுமால். (சுக)

இரவிகனலிகுருதெய்வம்பெரியோர்தம்மையெதிர்முகமாய்
மருவிச்செபிக்கவேண்டுமொன்மெய்ப்பைபுக்கும்வாய்த்ததுகில்

சிரமீதணிந்துங்குஞ்சியினைவிரித்துஞ்சிறப்பக்கோவணைந்தான்
றரியாதிருந்துஞ்செபித்திடுதலாகாதென்னச்சாற்றுவரால். (சுஉ)

மேவுவிரலிற்பவித்திரத்தைதப்புனையாதொழிந்துமிகவார்த்தை
நாவினவின்றுங்கழுத்தினிற்றூசணிந்துஞ்சாலவேநன்காத்
தாவிறாய்மையின்றாகச்சார்ந்தங்கிருந்துஞ்செபிப்பதாகான்
பாவமாகுங்குழைகிழிக்கும்படைபோனெடுங்கட்பணிமொழியே. சுங

வெகுளிகளிப்போடாவித்தறும்மல்சோம்புமிகவுமிழ்த
றகவில்புலையர்தமைக்காண்டறவிர்ந்தேசெபித்தறகைமையாம்
புகலுமிவைதாமெய்திடின்மும்முறைநீர்குடித்துப்பொருந்துறுப்பிற்
றிகழும்விரலினுதியினாற்சிறப்பத்தீட்டவேண்டுமால். (சுச)

தீட்டியதன்பின்விசும்பியங்குஞ்செய்யகதிர்கால்பரிதிதனை
மூட்டுகனலைச்செவ்வனேநோக்கிமுதியமறைவடித்து
நாட்டுபிராணாயாமத்தைநன்காவியற்றிநனிவல்லி
வாட்டுமருங்குலன்னேடுமென்னையுன்னன்மாண்புடைத்தால். (சுரு)

ஏற்பவிடுமாசனத்தின்மிசையிருந்துசெபித்தலிடல்பாமா
ஞற்சந்தியினுமணைமிசையிற்கிடந்துநடந்துநனிநின்று
மாற்றவிருண்டவிருளிடையுமாகாநிலத்தும்வாகனத்துந்
தேற்றமில்லாவுளத்தினெடுஞ்செபிக்கிற்றீதாய்விடுமன்றே. (சுசு)

மறைகளுரைத்தபடிகருமமியற்றிமறுமைதனிலின்ப
நெறியேதுன்பமெய்துமெனநினைக்கவேண்டுநினைந்துளோர்
சிறிதுதவறிங்கியற்றுகினுந்தீமையடையார்தீத்ததும்பு
கறைவேனெடுங்கட்கனங்குழையாயின்னுங்கழறக்கேட்டியால். (சுஎ)

மாசுநெறியில்வரம்பிகந்துசென்றோர்தமையுமதிக்கொணா
நீசர்தமையும்புரந்திடுதனிகரின்றாயவஞ்செழுத்தே
பேசில்வேறொன்றிலதாகுநம்பாற்பெரியவன்புடையோ
ராசிற்றீர்வரல்லாதாரடையாரழிவிலின்பமே. (சுஅ)

சித்தியுடையகுரவன்பாற்கேட்கவேண்டுந்திகழ்நம்பான்
முத்திகொடுக்குங்குரவன்பான்முன்னாயுறையுஞ்செழுத்தின்பாற்
பத்தியுடையோர்சிறிதேனுஞ்செபிக்கிற்பழுதில்சித்தியினைக்
கொத்துமலர்பெய்கூந்தலாய்கோதின்றாகக்கொடுத்திடுமால். (சுகு)

உற்றநமதின்னருள்பெற்றோர்தேவர்யாருமொருங்கருளப்
பெற்றோர்நமதின்னருள்பெறார்பெற்றோரல்லர்மற்றொன்று
மற்றேயாகவஞ்செழுத்தையுணர்ந்தோரனைத்துமந்திரமு
முற்றவுணர்ந்தோருணராதாருணர்ந்தோரல்லர்மொழியுங்கால். (எ0)

என்னவுலகெல்லாமுட்யவுமையாள்கேட்பவிறைமுதல்வன்
மன்னவுரைத்தான்மாசின்றுவகுத்தவிந்தக்காதையினைப்
பன்னுவோர்கள்கேட்போர்கள்பாவமெல்லாம்பறிந்தோட
முன்னற்கரியசின்மயமாமுடியாமுத்தியெய்துவரால். (எக)

பஞ்சாக்கரமான்மியமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உசுக.

---

## குருதீக்கைப்பொதுவிதியுரைத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

என்றேயினிதுரைசெய்தலுமெறிநீர்க்கடல்வண்ண
னன்றுமுயர்சிவதீக்கையைநவில்வாயெனநவிலா
வன்றுவிலேதுயின்றேனுளமறியும்படிவினைதான்
வென்றேயுறையுபமன்னியுவிரித்தேயெடுத்துரைத்தான். (க)

பாசத்தினையறுத்தேயுயர்பழுதற்றமெய்ஞ்ஞான
மாசற்றிடவருள்செய்திடுவகையாலறிந்தோர்க
ளாசற்றிடவிய*தீக்கையென்றறைவாரதுதானே
பேசிற்சிறந்தொருமூவகையாயேபிரிந்திடுமால். (உ)

குருவேர்பெறுநோக்காலவன்கோதில்பரிசத்தா
லரிதாமவன்வாக்காலுறுமாபாசத்தையறுக்கும்
பொருவில்சிவனுணைமிகப்பொருத்துமதுதன்னை
விரியாகமநால் ¶ சாம்பவிதீக்கையெனவிளம்பும். (௩)

---

* தீ - ஞானத்தைக்கொடுப்பது; க்ஷா - பாசத்தைக்குறைப்பது; எனவே, பாசத்தைக்குறைத்து ஞானத்தைக்கொடுப்பது தீக்ஷை.

¶ சாம்பவிமுதலியமூன்றும் முறையே விஞ்ஞானதீக்ஷை, ஞானவதிதீக்ஷை, கிரியாவதிதீக்ஷை, எனவும்பெயர்பெறும்.

யோகத்திறல்வலியாற்குருமாணாக்கனதொளிரு
மாகத்திடைபுகுந்தேதனதருண்ஞானநல்விழியான்
மோகத்தினைக்கடப்பித்திடலாமான்முதனேக்காற்
சேகற்றிடச்செய்தீக்கை*யென்றுரைப்பார்சிறந்தோரே. (ச)

செந்தீயினைவளர்த்தேயறிகழ்மண்டலம்பரப்பி
நந்தாதுசெய்தீக்கையதுநவின்மந்திரதீக்கை
புந்தித்தெளிவில்லோருக்கும்புகன்ஞானமிலோர்க்கும்
பந்தங்கெடச்செய்தீக்கைமற்றிதுவாமெனப்பகர்வார். (ரு)

சிறப்பார்சத்தி † பாதத்தினைச்சேர்ந்தோர்தமையுணர்வாற்
குறித்தேயுயர்தீக்கையினைக் ‡ கொடுத்தன்மிகக்குணனு
மறத்தார்சத்திபாதத்தினையடைந்தோரடையாள
முறத்தானுளங்கொள்ளும்வகையொழிவின்றியுரைப்பாம். (சு)

நலமேவுபராசத்திமெய்ஞ்ஞானணந்தவுருவா
மலையாதுறைமாணாக்கன்மெய்ஞ்ஞானணந்தமடைந்தே
நிலையாயமர்ந்திடலேசத்திபாதநிகரில்லாத்
தலையாகியஞானந்தஞ்சாரும்வகைசொல்வாம். (எ)

பெண்ணோர்புறமுடையான்றிருநாமங்களைப்பேசிற்
கண்ணீர்வரமெய்வார்மயிர்பொடிப்பக்கனிந்தவன்ற
ளுண்ணோர்ந்திடநினைந்தேமிகவுருகுஞ்செயலாமா
லெண்ணுவிவையுணர்ந்தேயுயர்தீக்கைசெயலியல்பே. (அ)

அரிதாயமெய்ஞ்ஞானத்தினையடைந்தேயுறைகின்ற
குரவன்றனைநாடிச்சென்றுகொழும்பொற்கழல்வணங்கித்

---

* இது சத்திதீக்கை. † பாதம் - பதிதல்.

‡ கொடுக்குங்கால் தீவிரதரமுடையவர்க்குச் சாம்பவியையும், தீவிரமுடையவர்க்குச் சத்தியையும், மந்தம் மந்ததரமுடையவர்க்கு மாந்திரியையுங்கொடுக்கில் கரியாதிகளில் அக்கினிபற்றுமாறுபோலப் பலிக்கும். இவற்றை எதிர்நிரனிறையாக "நாலுவகைச் சத்தி நிபாதத்து நற்பருவ, மூல குருவே மொழியெனக்குக்-கோல, வரம்பைபத்தண்டொண்பச்சைக் காட்டமுலர் காட்ட, நிரம்புகரி நேரா நினை." என்னும் சிவானந்தமாலைச் செய்யுளானுணர்க.

திருமாலொடுமயன்போற்றிடுசிவதீக்கையையடைவே
மருவும்மிருவினைமாய்ந்திடப்பெறல்வேண்டுமுண்மகிழ்ந்தே. (௯)

மன்றுவுறைகுருவாணையின்மன்றுவுறைதலிறூற்
றன்னேரறுமாறுக்கனென்றேசாற்றிடப்படுவா
னெந்நாளினுமாறுக்கனின்றேத்தித்தொழுதிடலான்
முன்னுகியகுரவன்னெனமொழியப்படுவானால். (௧௦)

பணிசெய்திடுகுருவேசிவன்சிவனேகுருப்பழிதீர்
துணிவாகியவிஞ்சைச்சிவன்பூசைதொடர்ந்தாற்றி
வினையார்முறுபலன்பற்றியங்கிடர்செய்திடுபாவப்
பிணிமாய்ந்திடக்குருவாணையினடத்தல்பெருந்தகையே. (௧௧)

பொன்னின்மிகுமாசைத்தழல்போக்கும்வகைபோல
மன்னுங்குருமாறுக்கன்றன்வினைமாய்ந்திடமாய்ப்பா
னெந்நாளினுமவனுக்கிடர்சிறிதேனுமிழைக்கிற்
கொன்னேயழனரகந்தனிற்குளித்தேயழுந்துவரால். (௧௨)

என்றேயுளத்தெண்ணுவிறைமுதலாகிவந்தெய்தி
நின்றேயருள்செய்யுங்குருநெஞ்சம்மகிழ்ந்திடவே
யொன்றுநடந்திடுவோர்சிவதருமங்களுக்குரியோர்
சென்றேயுயர்சிவநற்கதிசேர்ந்தேயுறைகுவரால், (௧௩)

குணசாகரமாகிச்சிவனடியைக்குறித்துணர்ந்தே
துணிவாலறிசிவதத்துவம்யாவுந்துணிந்தறிந்தே
யிணையாவருமின்றித்தனியிருக்கும்முதற்குருவே
பணிவார்கணல்லுயர்மாகதிபடரும்வகைபணிப்பான், (௧௪)

முன்னிப்பரசிவதத்துவமுழுதுந்நனியுணர்ந்தே
மன்னித்திகழ்குருவேகுருமற்றேன்குருவல்ல
னுன்னித்தனதான்மாவையங்குணராதவன்பசுவே
துன்னிப்பசுபசுவைக்களைதுணிந்தேற்றிடவற்றே. (௧௫)

வேதத்தினையுணர்ந்தேமிகவிரியுமுயிர்களைத்தான்
றீதுற்றிடுகொலைசெய்வதுதவிர்ந்தேசிவஞான
போதத்தினையுற்றாரருள்பூத்தேயுறைவகுரு
மாதித்தனிமறையோனெவனவனேகுருவாமால். (கசு)

அவனைப்பணிந்தவனாரருள்பெறவேண்டியுள்ளான்பாற்
கவனத்தியன்மதியோட்டறநிமிருங்கடிமாட
நவையற்றிடுகலனுடைபொன்னனைநல்கிடவேண்டு
மெவனிப்படிகொடுத்தானவனிருநற்கதியடைவான். (கஎ)

தந்தையொடுதாயும்மிகுதகைசார்ந்திடுகுருவே
யந்தக்குருவின்சேவடிக்கான்மாவினையளிப்போன்
பந்தத்தொடரற்றேகிடப்பரசைவனங்காகி
யெந்தைக்கருள்செயவேண்டுமெய்யடியாரொடுமிருப்பான். (கஅ)

ஓராண்டியர்மறையோர்தமையுயர்வேந்தர்கடம்மை
யீராண்டிருநிதிவாணிகர்தமையெய்திடுமூவாண்
டாராய்ந்திழிதொழில்செய்திடவுயர்ந்தோர்களையருளிச்
சீராருயர்தொழில்செய்திடவிழிந்தோர்களைச்சேர்த்தே. (க௯)

இவ்வாறுயர்மாணுக்கனதுளமோர்பெறத்தேறிச்
செவ்வேயுறைந்திடல்கண்டபின்சிவதீக்கையைச்செய்க
மைவ்வார்குழன்மடவார்களுங்கணவன்னருள்வழங்கில்
வெவ்வாய்வினைகெடத்தீக்கையைப்பெறலாமெனவிரிப்பார். (உ0)

கைம்மையினையுற்றேயுறைமடவார்களின்புதல்வன்
றம்முன்னவருளாயோற்றகைசால்கன்னியம்மடவார்
செம்மையுறுகுணத்தாதைதன்வாக்காற்சிவதீக்கை
வெம்மைவினைகெட்டோடிடவிரும்பிப்பெறலியல்பே. (உக)

உயர்வாகியதீக்கையினையுறைபின்னவர்தமக்கிங்
கியல்பன்றுறவிட்டறல்சிவனடியிலிமையன்மை

மயலற்றிடவுடையோரெனிற்குரவன்மல * ரடிபெய்
புயலைக்கொடுத்தவர்பாசமதறுத்தல்பொருளாமால். (உஉ)

சிவதீக்ஷையையடைந்தேயுறைசெய்வாய்மடமாதை
யவமற்றிடுசிவதீக்ஷையையடைந்தோன்றனக்கன்பா
னவையற்றிடப்பொருளோடுறநல்கல்சிறப்பாமா
லெவருமபுகழ்ந்திடத்தாதையுந்தாயுமினிதுணர்ந்தே. (உங)

முன்றுயினர்பணியாலன்றியனருமையயுமுளரிப்
பொன்னேர்தருநாளாயனிதானுஞ்சிவபூசை
யந்நாளினிற்புரிந்தேயருளொடுமத்திரிதன்னை
மன்றுவமர்ந்திடுமைவமைமகிழ்வாலடைந்தனரால். (உச)

அதனாலுயர்பெரியோர்பணியின்றாயினுமன்பான்
முதியோரெனிற்சிவபூசையைமுடித்தற்குரியோரே
மதிவாளுதன்மடமாதருஞ்சிவதீக்ஷையின்வகையை
விதியாலெடுத்துரைப்பாயெனமுனிவன்விரித்துரைத்தான். (உரு)

குருதீக்ஷைப்பொருவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் உகூச.

---

## சமயதீக்ஷைவிதியுரைத்தவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆவுறையுங்கோட்டத்திலலையெறியுங்கடற்கரையிலழிந்துவார்ந்து
வாவுபுனனதிக்கரையில்வரையகத்திற்சிவாலயத்தின்மனையின்மன்னி
மேவவொருமண்டபநன்கியற்றியதில்வேதிகையும்விரித்துக்குண்டம்
பாவுறவோரொட்டேனுநான்கேனும்விதிமுறையிற்படுக்கல்வேண்டும்.

---

* அடிபெய்புயல் - பாததீர்த்தம்.

சிறந்திடவீசானதிக்கிலன்றிமேல்பாற்றிசையிற்றிகழ்ந்துதோன்ற
வறைந்தபடிபிரதானகுண்டமுநன்கழகாகவமைக்கவன்றேற்
பிறங்கிடவோர்குண்டந்தான்பிரதானமாயமைக்கவமைத்தபின்ன
ருறைந்திடுகுண்டங்கடமைநறுமலராலலங்கரித்தலுரித்தாமன்றே. (௨)

ஓட்டறுபொற்பொடியினாலொளிருநவமணிப்பொடியாற்கமலமோர்ந்
கோட்டுறுவேதியினடுவுமீசானதிக்கினிலுங்கோட்டவேண்டுந் [று
தீட்டியபினீசானகமலத்தைநெல்லரிசிகடுகெட்டேடுறு [றே.
றோட்டிணர்நாண்மலர்தருப்பைபயிவற்றினாலிறைத்திடுசவியல்பாமன்

பொன்னினால்வெள்ளியினாற்செம்பினான்மண்ணினாற்பொருந்தச் செய்து, துன்னுகுடங்களினொன்றைவெண்ணூலான்வரிந்துதுணையாடைசேர்த்திப், பன்னுமலர்சந்தனநற்குசையறுகிற் சிறுகும்பமாக்கிப் பண்பான், மன்னுமீசானதிக்கிற்கமலமிசைவைத்துநன்னீர்வாக்கவேண்டும். (௩)

குளிர்தருப்பைபமுடிந்துநவமணியினொடுமுள்ளிட்டுக்குலவுமூடி-
யொளிருமணிச்சங்கந்தான்கரகந்தான்வள்ளந்தானொன்றைத்தூய்மை
விளையுமந்தக்கமலவடபாலிதழிலுமையவட்காமேவவைத்து
வளருமேல்பாலிதழிற்கரகமொன்றையத்திரதேவனுக்குவைத்தே. (௫)

மலயச்செஞ்சாந்தளைந்தமறிநீரான்மற்றவற்றைநிறைத்துப்பின்ன
ரிலகுமீசானதிக்கிலெழுதிவைத்தமண்டலத்தின்கீழ்பாலேற்பச்
சொலவரியமந்திரகும்பத்தினைநன்கிருத்தியுறுதுகளொன்றில்லா
வலகில்சிவஞானங்குரவன்விதிமுறையேசிவபூசையாற்றல்வேண்டும். (௬)

மண்டலத்துங்கும்பத்துமேற்றிசையைநோக்கியேமகிழ்ந்துவைகுந்
துண்டமதிவேணியனைப்பூசித்துச்சிவகும்பமேல்பாற்றோன்றுந்
தண்டலினீர்க்கரகத்திலத்திரதேவனைப்பூசைதயங்கச்செய்து
பண்டைமறைமந்திரகும்பத்தினின்மந்திரபூசைபரிவினாற்றி. (௭)

முதலாயகுண்டத்திற்பாவுகின்றசிவாக்கினியின்முதலையேத்தி
விதியான்மெய்யுணர்குரவன்மூன்றுடெப்புநெய்சொரியவேண்டுமிக்க

மதியாலேயுறைகின்றமாணுக்கர்மற்றையவாங்குண்டந்தம்மிற்
கொதியாநின்றெழுமழலிற்கோதிலாவவிசொரியவேண்டுங்கூறில். (அ)

ஓடியாதமறைமறையோரொடுத்தோதவொழுகுகொடிமடநல்லார்க, ணடமாடமுழவதிரவுயர்ந்தோர்க்குநனிபொருள்களைல்கிவெள்ளைப், பொடிபூசும்பெருமானைப்பின்னரும்பூசனைபுரிந்துபோற்றிநின்ற, னடியானையருளுகெனவருள்வேண்டித்தீக்ஷையினையாற்றல்வேண்டும்.

முன்னைநாளுண்டியினையொழிந்தழியாவிரதத்தைமுயன்றவை கிமன்னுமற்றைநாளதனினீராழ்கியுறைந்திடுமாணுக்கன்றன்னை, யுன்னரியகுடிலையினையோதுவித்துமண்டலத்தின்றென்பாலோங்கி, யென்னவரும்புகழ்ந்தேத்துமண்டலத்தின்மேல்பாற்குணிருத்தல்வேண்டும். க0

தருப்பையமேல்வடதிசையைநோக்கியுறைமாணுக்கன்றன்பாலெய்தி, விருப்புடனேகீழ்த்திசையைநோக்கிநின்றுமுத்திரையும்விளங்கக்காட்டித், திருத்தியதண்புனறலையிற்றெளித்துநறுமலர்தூவித்திகழ்ந்தபட்டா, லருத்தியுடனுங்கவன்றன்கண்ணிணைச்சூழ்ந்திடவேண்டுமறையுங்காலே. (கக)

கட்டியபின்குடவாயில்வாயிலாக்குறுகுவித்துக்காணமுன்னே, யிட்டதொருமண்டலமேலிருக்குமிறையவனைமுக்கால்வலஞ்செய்வித்துவிட்டொளிரும்பொற்பூவாலருச்சனைசெய்வித்துமலரடியில்வீழ்த்தி, யட்டநீர்தெளித்துமலர்தூவியபின்கண்ணுடையகற்றல்வேண்டும். (கஉ)

அடுத்தபட்டைடநீக்கியபின்மண்டலத்திலரனைவணங்கவனைத்தென்பா, லிடத்துறையுங்குரவன்றன்னிடப்புறத்திற்றருப்பைமிசையிருத்திப்பின்னர், மடற்கமலச்சிவவத்தமற்றவன்றன்றலைமீதுவைத்துமுன்னை, விடற்கரியபாவமெல்லாம்விட்டோடமெய்தொட்டுத்தடவவேண்டும். (கங)

நடவியபின்குரவனடி தாழ்ந்துவணங்கிடவேண்டுந் தாழ்ந்தபின்னர், விடைசுடர்கால்சிவாக்கினியிலவிசொரிந்துமுன்னெடுத்தவினைகன்

மாய, வடிவணங்கிநின்றமாணாக்கனைத்தன்னருகிருத்தித்தருப்பைதன்று, விடையறத்தன்மெய்தொடுவித்திய*நாடிசந்தானமேற்பச்செய்தே.

குரவன்றனான்மாவைமாணாக்கனுடம்புள்வைத்துக்கோதின்றாக
வெரியினிலாகுதிநிரப்பியிறைவனடியிணையின்மலர்தூவியேத்திப்
பொருவருசீர்நாயகனெனிற்புகழ்வேந்தனுக்கிப்பின்பொருவிலாத
வருமறைதேர்வேதியனேயாக்கிப்பின்னுருத்திரனேயாக்கவேண்டும்.

வீங்குபுகழரசனெனின்மிக்கமறையவனுக்கிவிண்ணோரேத்த, வோங்கியுறையுருத்திரனுக்கிடவேண்டுமுயர்ந்ததனி மறையோனென்னிற், றீங்கறவேயுருத்திரனுக்கிடவேண்டுமாக்கியபின்றெளிக்குநீரைப், பாங்குறையுமாணாக்கன்றலைமீதிற்பாற்படவேதெளிக்கவேண்டும். (கசு)

பீடுறுமாணாக்கனுடற்புகுத்தியதன்னான்மாவாற்பிணங்கிமூற்றி
வாடுறவேவருத்துகின்றமலமெலாமாய்த்துத்தன்னான்மாவோடுங்
கூடவவனான்மாவைவாங்கித்தன்னுளத்திருத்திக்கோதின்றாக்கி
நாடியவனான்மாவையாங்கவன்றனுடலினிடைநாட்டவேண்டும். (கஎ)

மூன்றுமளித்தலர்சேர்மூழங்குமாசனத்திருத்திச்சிவனைமுன்னித், தன்னுசிவகும்பமேமுதலியகும்பத்தினினீர்சொரியவேண்டு, மன்னிடவேசொரிந்ததற்பின்மலராடைமணிக்கலன்கள்வயங்கச்சேர்த்தி, யன்னவனுஞ்சிவபூசைமண்டலத்திலஞ்சலிசெய்தடையவேண்டும். (கஅ)

ஒய்யெனவந்தடைந்தவனைத்தருப்பையாசனத்திருத்தியொளிருநீறைக், கைகளினாலெடுத்தவன்றன்மெய்முழுதுந்தடவியருள்கனிந்துநோக்கி, மையறுசோடணதகனப்பிலாவனமுஞ்செய்தவன்றன்றலைமேல்வாய்ப்ப, வையனையாவாகனஞ்செய்தாசறவேபூசனைநன்காற்றவேண்டும். (கக)

பூசனைநன்காற்றியபின்னிவனுழையிலெந்நாளும்பொருந்தியன்பா
லீசனேயினிதுறையவேண்டுமெனப்பல்காலுமேத்திவேண்டி

---

* நாடிசந்தானமாவது ஆத்மசமரசபாவஞ் செய்யும்பொருட்டு ஆசிரியன் சீடனுக்கும் தனக்கும் தர்ப்பையினாலே சம்பந்த முண்டாக்கல்.

மாசறவேயொளிர்பவனுமாணுக்கன்றனைநினைந்துவயங்கித்தோன்று மாசிலாமண்டலத்திற்பூசனைசெய்தண்ணலருளடையவேண்டும். (உ0)

அடைந்ததற்பின்மூலமாமந்திரத்தையலர்மணிக்கோட்டிமையமின்ற, மடந்தைதனிமந்திரத்தைமற்றவன்றன்வலச்செவியின்மொழிந்துமன்னு, துடைந்துவினைகெட்டோடவுணர்ந்தோதியுறையுமாணுக்கன்றன்னைத், தொடர்ந்தவருளால்வாழ்த்திமந்திரத்தினுட்பொருளைச்சொல்லல்வேண்டும். (உக)

ஆங்கதன்பின்முதலாயவண்ணல்வடிவினையுணர்த்தியவன்பொற்றளிற், பாங்குபெறவுள்ளத்தைக்கூட்டும்வகைபாற்படவேபகரவேண்டு, மோங்கியுறைகுரவனிவ்வாறுரைத்திடக்கேட்டுணர்ந்திடுமாணுக்கன்சோதி, வீங்குகனலிறைகுரவன்முன்னின்றுவணங்கியிவைவிளம்பல்வேண்டும். (உஉ)

பொன்றியுயிர்மாய்ந்திடினுஞ்சிவனடிப்போதினிற்பூசைபுரிந்தேயல்லா, லொன்றுமருந்திலனிந்தவுடலுறையுமளவுமெனவுரைத்துமுன்னே, நின்றவவன்றனைநோக்கியக்கமணிநிலவொளிகானிறுகையான்,மன்றவெடுத்தாங்கவன்றன்வல்வினைமாய்ந்தழியும்வகைவழங்கவேண்டும். (உங)

வழங்கியபின்மணிமிடற்றோன்படிமந்தான்மணிமிடற்றோன்மகிழ்ந்தெந்நாளும், விழைந்துறையுமிலிங்கந்தான்மேதகவேவிருப்போடுமளித்துப்பின்னு, மெழுந்தவருளாற்பூசையோமமுறுசெபந்தியானங்கட்*கேற்ப, தொழுந்தகையகுரவனுயர்மாணுக்கன்வினைதொலையவளிக்கவேண்டும். (உச)

கொடுத்திடக்கொண்டவையெலாங்குழகனுறைகோயிறனிற்குலவநன்கா, வெடுத்தமடத்தினின்மனையில்வைத்தழியாவகையினிதிற்புரக்கவேண்டும், வடித்துயர்ந்தசிவாசாரங்குரவன்வழங்கினபடியேமா

* ஏற்பவென்றது ஏற்பனவாகியசாதனங்களை.

சின்றாகத், தொடுத்துநனிமாணாக்கரைற்றிடவேண்டிடுமுணர்ந்துசொல்லுங்காலே. (உரு)

இடாகலச்சமயதீக்கையைநவின்றேமிறைவனுமையுலகந்தன்னி, லடைவதற்குமுதலாயகாரணமாமிதமருங்குரவனன்கா, வொடிவறமாணுக்கனையோர்ந்துணர்ந்தத்துவாக்கடமையொருங்கேமன்று,மடனகலச்சுத்திசெயவேண்டுமாலிறையவனால்வடித்தவாறே. (உகூ)

சமயதீக்கைவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கூஉ௦.

## விசேடதீக்கைவிதியுரைத்தவத்தியாயம்.

அறைந்திடுமத்துவாக்கடாங்கலையொடுதத்துவம்புவனமமரும்வன்ன
நிறைந்தபதமந்திரமென்றாறுவகைத்தாகிவிரித்திமுதலாமைந்துஞ்
சிறந்தகலையத்துவாவாகுமாற்சிறந்திடுமக்கலைகளாலே
யுறைந்தமற்றையத்துவாவோரைந்துநிறைந்தடைவேயுறுங்களன்றே.

முன்னுசிவதத்துவமேமுதலாகமண்ணீறாமுப்பத்தாறு
மன்னுசுத்தமாயசுத்தமாய்ச்சுத்தாசுத்தமாய்மருவிநாளும்
பன்னுறுதத்துவவத்துவாவாகுமாதாரமுதலாப்பாங்கி
லுன்மனையீறாயவறுபதும்புவனவத்துவாவாகுமோதில். (உ)

ஐம்பதுருத்திரருருவாயுறையுமைம்பதெழுத்தும்வன்னவத்துவாவா
நம்புமெண்பத்தொருபதத்தின்கூட்டநவில்கின்றபதவத்துவாவா
மும்பரமர்மந்திரங்களுறையுமுபமந்திரங்கூட்கங்கமாகிப்
பம்புமிதுபிரதானவவயவத்தாலஞ்சுபதமாகித்தோன்றும். (௩)

அந்திலுபமந்திரங்களோடமர்ந்தேயுறைகின்றசத்தகோடி
நந்தலின்மாமந்திரங்கண்மந்திரவத்துவாவென்னநவில்வரீதை
முந்தையாம்பரமவிஞ்ஞைசயெனுமூலமந்திரந்தானிறைக்குமென்றே
மெந்தைபோன்மூலமாமந்திரந்தானிதனோடுமெண்ணுறுமே. (௪)

ஒடிவறநாமுனமுரைத்தகலாத்துவாவோரைந்தாமத்துவாவை, யி
டையறவேநிறைக்குமெனவறியாததேசிகன்றானேற்பநன்கா, மடனற
மாணுக்கனுக்கிங்கத்துவாச்சுத்திசெயமாட்டான்முன்போ, லடைவினி
ன்மண்டபம்வேதிகுண்டமிவைமண்டலங்களமைக்கவேண்டும். (ரு)

வரித்ததோர்பிரதானமண்டலத்தின்குணபாலில்வயங்கித்தோன்ற
விரித்திரண்டுமுழமளவாய்மண்டலம்பின்விரிபுனலினிடையின்மூழ்கி
யருத்தியான்மாணுக்கனொடுமடைந்துமுதலாமண்டலத்திலன்பாற்
றிருத்தியேதன்னுளத்தைநச்சேகறநற்சிவபூசைசெய்யவேண்டும். (சு)

நாழியரிசியினிற்பாலடிசிலியற்றியதிற்பாதிநன்கா
யானேறும்பெருமானுக்களித்துமற்றையதையழலிற்கிருத்திக்கீழ்பாற்
றானேயுற்றுறைநின்றமண்டலத்திலேந்துகும்பந்தயங்கவைத்து
மானேந்திபுறைபஞ்சப்பிரமங்கண்மன்னிடத்தாபிக்கவேண்டும். (எ)

வயங்கியெரிசிவாக்கினியில்வைத்தவடிசிலிற்பாதிசொரிந்துமற்றைப்
பயன்படுசோற்றினையந்தமாணுக்கனருந்தவைத்துப்பகர்ந்தவெல்லாந்
தயங்கிடமுன்போற்செய்துபார்ப்பனிதானூற்றநூற்கயிறுதன்னை
வியன்கொளமற்றவன்குடுமிதனிற்கட்டிக்காலளவாய்வீழ்த்தவேண்டும்

அழலிடைமும்முறைநன்காவவிசொரிந்தாங்கமர்ந்துறைமாணுக்க
ன்மெய்யுள், வழுவில்சுழுமுனைநாடிதனைக்கயிற்றாவாகித்துமலர்கவேவி,
விழைவொடுமற்றவனுயிரைத்துவாதசாந்தத்தினிடை மேவவைத்துக்,
கழுமியவாங்கவன்றனதுமெய்யாமற்றதுதன்னைக்கருதவேண்டும். (கூ)

இந்தியமார்விடயங்களுடம்புறுபோகங்கள்காரணமாயெய்தி
வந்திமொணவமாயைகருமமெனுமலமூன்றுங்கயிற்றில்வாய்ப்ப
வந்திலமர்ந்துறைவனவாநினைந்தைந்துபூதத்தின்வடிவமாகி
முந்திபுறையநிவிர்த்திசாந்தியைமுதலாங்கலையைந்துமுறையின்முன்னி. ()

பூசனையாற்றிடவேண்டுந்தத்துவத்தையுமும்மலங்கள்பொருந்துமாறும்
பேசியமும்மலங்கடமைக்கலைகணிறைத்திமொறும்பெரிதுமுன்னி

யாசறவேயழலினிடையவிசொரிந்துகலைக*டீபனத்தையாற்றி
மாசறவேயக்கயிற்றின்றலைமிசையின்மணிமலர்கடுவேவேண்டும். (கக)

தூவியபின்னதீதசாந்தியின்பதமாயுளத்தினிடைத்துலங்கவோர்ந்தாங்
கோவறவோரடையாளமாகாயமந்திரத்தாலுணர்ந்துசெய்து
தாவறவேபின்கலைகளுன்கிற்குஞ்சாற்றிடுபூதங்களுன்கின்
மேவுறுமந்திரங்களாலடையாளமேதகவேயியற்றல்வேண்டும். (கஉ)

இயற்றியபின்னழலோம்பிமண்டலத்திலிறையவனைப்பூசைசெய்து கயிற்றினைடுமண்டலத்தின்றென்புறத்தோர்மண்டலத்திற்றருப்பைகாணக், குயிற்றியதன்மேல்வடபாலுநோக்கியுறைந்திடவிருத்திக்கொழுஞ் செந்தீயி, னயப்புடனாகுதிசெய்தபாலடிசிற்சேடத்தைநல்கவேண்டும்.

கொடுத்ததனையுண்டுவினைக்கோதறவேமும்முறைநீர்குடித்துமெய்ம்மை, தொடுத்துறையுமூலமாமந்திரமோதியபின்னர்த்துகளின்றாக, வடுத்ததொருமண்டலத்தின்மேலிருத்திபாவைந்தையளிக்கவன்பா, லெடுத்ததனைமாணக்கனருந்திச்சுத்தாசமனமியற்றவேண்டும். (கச)

அன்னதன்பின்மூலமாமந்திரத்தையோதியண்ணலடியைமுன்னி மன்னியுறைந்திடக்கண்டுமற்றை யொருமண்டலத்தின்வைத்துத்தொன்னூல், சொன்னபடிபல்விளக்குகொம்பினைநன்களிக்கவதுகொண்டு தூய்தாய்ப், பன்னுகுணபால்வடபாலுநோக்கியேபாற்படப்பல்விளக்க வேண்டும். (கரு)

விளக்கியகொம்பினையகற்றிவிமலநீர்வாய்க்கொண்டுமிழ்ந்துகரகஞ்சேர்ந்த,துளிப்புனன்மும்முறையருந்திச்சிவனடியைமுன்னிமிகத்துலங்குமாறு,வளைத்திடுமண்டலத்திருகைகூப்பியடைந்ததற்பின்மெய்ஞ்ஞானமன்னிக், களித்துயர்ந்தநற்குரவன்பல்விளக்கியாங்கெறிந்தகடிகைநோக்கி. (கசு)

முன்பாயகீழ்பாற்றுன்வடபாற்றுன்மேல்பாற்றுன்முனையாய்வீழி
னன்பாலதெனநினைந்துதென்பாலைநோக்கிநுனைநண்ணிலாங்கே

---

* தீபனம் - சொலிப்பித்தல்.

யின்பாலதலதென்னவெண்ணிறூருகுதிநன்கெரியிற்பெய்து
ளன்பாகவவன்செவியிலாசில்சிவமந்திரத்தையறையவேண்டும். (கஎ)

மதியணிந்தோன்றென்பாலின்மற்றவனைத்தருப்பைமிசைவளர்த்
தித்தூய,புதியவிரியாடையினுற்புதைத்தொருமூவரைநீற்ருற்பொருந்த
ச்சூழ்ந்து, முதியஞுயுறைகுரவன்வரைப்புறத்திலெட்கடுகுகொண்டுமு
ன்னி, விதியினுற்றிசைகாவலாளருக்குப்பலிவிரும்பியளிக்கவேண்டும்.

அற்றையிராமுழுவதுநன்கசைந்தலர்ந்தகதிரொழுமுனைசைவுதீர்ந்தாங்
குற்றகனவினைக்குரவற்குரைத்தவன்றனருளிஞலொளிவெண்முத்த
மெற்றுதிரைப்புனலாடிக்கருமங்கண்முடித்ததற்பினேத்திவாயாற்[டும்.
பொற்றமலர்க்கைகுவித்துமண்டலத்திஞேர்புறத்திற் பொருந்தவேண்

ஆடையினுற்கண்கட்டியணிமலர்கைக்கொடுத்தந்தமலரைநன்கா
மாடுறையுமண்டலத்திலிடச்சொல்லவேண்டுமவன்வாங்கிக்கொண்ட
வேடவிழ்நாண்மலர்தூவவெந்தமுகந்தனில்விழுந்ததந்தச்செய்ய [ம்.
தோடவிழுமலர்முகத்தின்பெயர்தனைமாணுக்கனுக்குச்சூட்ட வேண்டு

சூட்டியபினம்முகனைமண்டலத்திற்பூசித்துச்சுடர்வெந்தியில்
வாட்டமறவவிசொரிந்துமுன்னைநாளிரவிலந்தமாணுக்கன்முன்
கோட்டமுறக்கண்டகனவினைதீரப்பின்னுமவிசொரிந்துகொண்டு [ம்.
நீட்டியவாங்கவன்சிகையிற்சுற்றுகயிற்றினைநெகிழ்த்து வீழ்த்தவேண்டு

நிவிர்த்திகலைதனைப்படையுமாதாரபூசையேமுதலாநேரி
றவத்துறைவாகிச்சுரிதன்பூசையீருங்கருமந்தகவிஞற்றி
யுவப்பொடுமண்டலத்திறையைப்பூசித்துத்துவாதசாந்தத்திலோங்கு
நவைத்திரளாங்ககன்ருெழியமாணுக்கஞன்மாவைநண்ணவைத்தே. ()

வைத்ததனையெடுத்துப்பின்பதிஞன்குயோனியினுமுறையின்மன்ன
வுய்த்துதித்துப்போகங்களொழிவறவேயுண்டதாவுணர்ந்துமுன்னே
யத்தனைநன்கேத்தியவனருள்பெற்றுப்பாசங்களறுத்துத்தொகலை [தே.
வித்தகமாநிவிர்த்திகலாபதத்தினில்வைத்துயர்தூய்மை விளங்கச்செய்

அழலோம்பியலரவனைப்பூசைபுரிந்தாறணையைறந்துபோக்கி
விழைவோடுமீட்டுமிறைமுதல்வனடிபூசித்துவிளங்கித்தோன்று
தழறைப்பாணுகுதிரன்களித்ததன்பின்னிவிர்த்திகலாபதத்திற்றங்கிப்
பழிதீர்ந்தவான்மாவைமுன்போலநாற்கயிற்றிற்பாங்கிற்சேர்த்தி. (௨௬)

உன்னிவாகீச்சுரியைப்பூசைபுரிந்தாகுதிமூன்றுதவல்செய்தாங்
கன்னவனைவிடுத்திறையைப்பூசித்துமீட்டுமாரழலையோம்பி
மன்னுமாறைக்கருண்மாவதனைப்பிரதிட்டாகலையில்வைத்துச்
சொன்னவந்தக்கலைதன்னைச்சூத்திரத்தினிடையதனிற்றுலங்கவைத்தே

முன்போலப்பூசித்துப்பிரதிட்டாகலையின்வியாத்தியினைமுன்னி
யன்போடுமதுபோலவொளிரும்வாகீச்சுரியைப்பூசையாற்றிப்
பின்போர்ந்துகருமமெலாமுடித்தரியைப்பெட்புடனேபூசைசெய்து
பொன்பாவுசடைமுதலோன்புரிந்தவாணையையடைவேபுகன்றுபோக்

பிரதிட்டாகலையதனைவித்தியாகலையுடனேபொட்பச்சேர்த்தி
விரிவுற்றகருமமுன்போலியற்றிவித்தியாகலையின்வியாத்திபோர்த்தாங்
கெரியொத்தேயெழில்செய்வாகீச்சுரியைப்பூசைபுரிந்தேத்திநன்காக்
கருதுற்றநீலவுருத்திரன்றன்னைக்கடிமலர்தூய்ப்பூசைசெய்தே. (௨௭)

பூசனையாற்றியபின்னர்மழுவலாறணையினைப்புகன்றுபோக்கி
யாசறுவித்தியாகலையைச்சாந்திகலையுடனேசேர்த்தன்கா
வேசலிலாச்சாந்திகலைவியாத்தியையுமினைந்தெழுந்தபரிதிபோல
மாசறவேயொளிர்மேனியுடையவாகீச்சுரியைப்பூசைசெய்தே. (௨௮)

மற்றையவாங்கருமத்தைமுன்போலவருத்துமகேசன்றனைப்பூசித்
பொற்றமலர்தூவியபின்சிவன்றனாணையைச்சொல்லிப்போகவிட்டாங்
கற்றைநாட்சாந்திகலையதீதமாசாந்திகலையோடுமன்னி
யுற்றிடச்செய்ததீதமாசாந்திகலைவியாத்தியினையுணர்த்திட்டோர்ந்தே. (௨௯)

ஆகாயநிறமாகியமரும்வாகீச்சுரிக்குப்பூசையாற்றிப்
போகாதுமுன்போலக்கருமங்களுறமுடித்துப்புகர்நாகத்தோ

லோகாயத்தோடுறையுஞ்சதாசிவனையிணர்மலர் தூயிறைஞ்சியேத்திப்
பாகாயமொழிபாகருணையினைப்பாற்படவேபகர்ந்துபோக்கி. (௩௦)

மலைவறவேகருமங்கண்முன்போலவியற்றிநறுமலர்கடூவித்
தலையருளடியிணையிற்றாழ்ந்துவாகீச்சரியைப்போக்கித்தண்ணீ
ரலைவறவேமாணாக்கன்மெய்யதனிற்றெளித்துயர்ந்தவதிதசாந்தி
கலையினிறைந்துறைசத்திதத்துவத்திலொடுங்கினதாக்கருதவேண்டும்.

நாடுகின்றவத்துவாவெவைக்குமேலாகியிருணக்கித்தோன்றுங்
கோடிவாளிரவியெனவொளிகொள்சிவசத்தியினைக்குறித்துச்சோதி
நீடுபடிகத்தொளிபோனிலவுமாணாக்கனான்மாவையந்த
வாடலிலாச்சத்திபதமேலாகியடைந்ததெனமனத்தினேர்ந்தே. (௩௨)

கருவியினாற்கயிற்றினொடுங்குடுமியினைக்களைந்துகோமயத்துவைத்
தாங், கெரிசெய்சிவாக்கினியிடையிலிட்டுமுன்னமேயெடுத்தவான்மா
த்தன்னைப், பொருவறுமாணாக்கன்மெய்யிற்புகுத்தியவனீராடிப்புகுந்த
பின்னர், விரிவறவேமுன்விரித்தமண்டலத்தைத்திருப்பினொடுமிறைஞ்
சுவித்தே. (௩௩)

இறையவனைத்தானுநனியிறைஞ்சிமுனமியற்றல்செய்தகருமந்தன்னி
லறைசெய்கின்றமந்திரத்திலெண்ணனிதுடியினைக்குமுள்ளந்தன்னிற்
குறையுளவேற்பொறுத்தியெனவழலோம்பியாகுதியுங்கொடுத்துமுன்
மறைமுதலையுமையோடும்பூசித்துப்பின்னுமழன்மரபினோம்பி. [னை

இறைஞ்சினின்றேயீங்கிவனுக்கத்துவாச்சுத்தியினையியற்றினேனீ
குறைந்திடாவின்பத்திலுற்றுறையக்கொடுத்திடுதியென்றுவேண்டிச்
செறிந்துடலினுறைநாடிசந்தானஞ்செய்துவளர்செந்தீயோம்பித்
திறம்பலிலாதுயர்பூதசுத்தியினைவிதிமுறையிற்செய்யவேண்டும். (௩௫)

பூதவதிபதிகளொடுபூதத்தின்பிணிப்பினையுங்ககற்றிப்போக்கி
யாதியாஞ்சிவனிடத்தின்மாணாக்கனான்மாவையடுத்துப்பின்ன
போதுசேராணாதகனப்பிலாவனமாங்கவனுடம்பைச்செய்தான்மாவை
மாதுபொலிவியோர்பாகனுழைவாங்கியவனுடம்புள்வைக்கவேண்டும். ()

மேற்படி வேறு.

வைத்தபின்மெய்மைச்சுத்தவத்துவாமயமாயெண்ணி
யுத்தமவதீதசாந்திகலையினைச்சிரத்துமோங்கு
வித்தகமாகுஞ்சாந்திகலையினை முகத்துமிக்க
பத்திமையொடுநியாசம்பாற்படப்பண்ணவேண்டும். (௬எ)

வழூத்திடநின்றவித்தியாகலைதன்னைமன்னு
கழுத்தினின்றுந்திமட்டும்பிரதிட்டாகலையைநன்காச்
சுழித்திடுமுந்திநின்றுதோமறுமுழந்தாண்மட்டும்
விழுத்தகுநியாசந்தன்னைமேதகவியற்றவேண்டும். (௬அ)

திகழ்ந்திடவுறைநிவிர்த்திகலையினைச்செவ்வேமுன்னம்
பகர்ந்திடுமுழந்தாணின்றுபாதத்தினளவும்பற்றிப்
புகழ்ந்திடநியாசஞ்செய்துமூலமந்திரத்தாற்போற்ற
மிகுந்தவாறங்கந்தன்னுணியாசத்தைவிளைக்கவேண்டும். (௬௯)

விளைத்துமாறுக்கன்றன்னைச்சிவனெனவிழைந்தங்கண்ணேன்
றளிர்த்திடுஞானநெஞ்சிற்றுமைாப்பொருட்டின்மீதில்
வளைக்கையாள்பங்கன்றன்னைமணிமலர்தூவியேத்தி
யளித்திவன்றன்பானீங்காதமருவாயென்னவேண்டும். (௭0)

இவ்வகைசிவனைவேண்டியிரந்துநின்றிசைத்தபின்ன
ரவ்வியமவித்தோர்பற்றுமணிமாதிருணங்கடம்மைச்
செவ்விதினீந்தாங்கோரோர்குணத்திற்குஞ்சிறப்பினோடும்
வெவ்வழனவெண்மூம்மூன்றுகுதிவிளைக்கவேண்டும். (௭௧)

நிறை * சருவஞ்ஞசத்திநித்தியதிருத்திசத்தி
யறைதருமனுதிபோதசத்திமற்றலுத்தசத்தி

* சருவஞ்ஞசத்திமுதலிய அறுகுணங்களும் முறையே முற்றறிவு வரம்பிலின்பம் இயற்கையுணர்வு குறைவிலாற்றல் தன்வயமாதல் வரம்பிலாற்றல் எனப்படும்.

யுறைதருசுதந்த்ரசத்தியோங்கியவனந்தசத்தி
குறைவறவவனுக்காங்கேகொண்டிடக்கொடுக்கவேண்டும். (சஉ)

சத்தியோசாதமுன்னாந்தகைபெறுகுடத்தினீரை
யுய்த்தவன்றலையின்மீதிலொளிசெயாசனத்தினன்கா
வைத்திறைபூசையாற்றிக்குடிலைமாசில்லாச்சத்தி
யத்தன்யந்திரங்கடம்மையருளினலறையவேண்டும். (சங)

இருடிசந்தச்சுத்தெய்வமிறையவனுமையாள்செய்ய
வுருவமாவரணத்தோடுமொளிமதிக்கண்ணியோனை
யரிறபப்பூசையாற்றலாசனத்தியல்புநன்கா
மருளறவிரித்திவற்றைமனமுறவுரைக்கவேண்டும். (சச)

உரைத்துநற்சிவன்பொற்றாளிற்பூசனையுளுற்றிப்புல்லேன்
விரித்திடுகருமமெல்லாம்விழைந்துகொளென்றுபோற்றி
யருத்திமாணாக்கனோடும்வணங்கிடவ்வழலின்முன்னந்
திருத்துமண்டலத்திநின்றுஞ்சிவன்றனைநீக்கவேண்டும். (சரு)

அடுத்துமாணாக்கன்முன்னேகுரவனதடியிற்றாழா
வெடுத்திடுபிறவியெல்லாமின்னனருகவென்றேத்திக்
கடுத்திகழ்மிடற்றோன்பாதம்வணங்கிநற்கருமஞ்செய்தோர்
விடுத்தபாசத்தோர்க்கம்பொன்கொடுத்திடவேண்டுமென்றான். (சசு)

விசேடதீக்கைவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௬௬.

---

## சாதகதீக்கைவிதியுரைத்தவத்தியாயம்.

---

கொடுத்திடவேண்டுமென்றுகோதிலாமுனிவன்போது
தடுத்தருள்கண்ணுமுன்னஞ்சாதகதீக்கைதன்னை

யெடுத்தனமுறைத்திலேமாலினியதையறியுமாறு
தொடுத்திவணுரைப்பக்கேட்டியெனநனிசொல்லலுற்றான். (௧)

ஏர்பெறமுன்போற்குண்டமண்டலமியற்றல்செய்து
பூரணகும்பம்வைத்துப்பொருந்துமண்டலத்திறைப்பண்
கார்மிடற்றிறையைப்பூசையாற்றிவெங்கனலுமோம்பி
யார்வமாணாக்கன்றன்னைமண்டலத்தருகுவைத்தே. (௨)

வைத்தபின்னோமஞ்செய்துதருப்பணங்கொடுத்துமன்னு
தத்துநீர்க்கலசமாட்டித்தைதமலர்நீர்கைக்கொண்டு
சித்தியுண்டாகவிந்தமந்திரமென்றுசெவ்வே
யத்தனைப்போற்றிவைகுமவன்கையிலளிக்கவேண்டும். (௩)

அளித்துமந்திரத்தின்றன்மையறைந்தபினலைநீராடி
விளைத்திடுகருமமாற்றிவெள்ளணியணிந்துநம்பன்
றிளைத்திடுகோயின்மன்னிலகுளீசன்பூசைசெய்து
துளித்துநெய்திம்பாற்சோறுதோமறக்கொடுக்கவேண்டும். (௪)

கொடுத்தபின்வணங்கிக்கோடிகோடியிற்பாதிமன்ன
வெடுத்தநிற்பாதியன்றியிருபஃதிலக்கமன்றி
யடுத்தபத்திலக்கந்தானீங்காசறச்செபிக்கவேண்டுங்
கடுத்திகழ்மிடற்றான்செய்யகாசிலஞ்செழுத்தைமன்னோ. (௫)

செபிப்பவன்றீம்பான்மூரலோர்பொழுதருந்தித்தீயோ
ருவப்புறுகொலையுநீங்கிப்பொறுமையுற்றிந்தியங்க
ளவித்துப்பாலடிசிலன்றேற்காய்கிழங்கயில்கவன்றேற்
றவத்தினின்றையமேற்றுத்தாணனியருந்தவேண்டும். (௬)

ஆற்றினின்மூழ்கித்தூயவவிசிவாக்கினியிலிட்டாங்
கேற்றிடச்செபிப்போர்தங்கட்கெய்திடற்கரியதில்லைச்
சோற்றினையருந்துமுன்னர்த்துகளிலாயிரத்தெட்டோதிப்
போற்றியேயுறைவோர்தாமும்பொற்பொடுமுறைவரன்றே. (௭)

*நீரிடைமூழ்கிவெள்ளைநிலவு†வெண்ணீற்றின்மூழ்கி
யேர்செய்மந்திரத்தின்மூழ்கியிலங்குகண்டிகைமெய்சேர்த்தித்
தேர்திரிபுண்டரத்தைத்திகழ்தரவணிந்துகையி
லார்பவித்திரமுந்தாங்கியன்பொடுஞ்செபிக்கவேண்டும். (அ)

சாதகதீக்கைவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௭௪.

## ஆசாரியாபிடேகவிதியுரைத்தவத்தியாயம்.

உரிமையாலிவ்வாறெல்லாஞ்செய்தபினுரிமையோர்ந்து
பரிவுறவுயர்ந்தபாசுபதவிரதத்தைச்செய்வித்
தரனவினூல்கள்சொல்லாசாரியவபிடேகத்தைத்
திரிவறச்செய்யவேண்டுந்தேசிகமுதல்வன்முனே. (க)

வகுத்துநாமுன்புசொன்னவாறுமண்டலந்தானிட்டு
நகைத்தெயிலெரித்தமுக்கணம்பனைப்பூசைசெய்து
தொகுத்துவேறாகவிட்டமண்டலந்தன்னிற்றூய்நீ
ருகுத்திடுகும்பமைந்தாங்குற்றிடவைக்கவேண்டும். (உ)

அறைதருகுணபான்மூன்றுங்குடங்களோரைந்திற்சொன்ன
நெறியினிற்கலைகளைந்தும்பூசனைநிரப்பிவாய்ப்பச்
செறியுமுத்திரையுங்காட்டிச்செந்தழல்விதியினோம்பி
யிறைவனைப்பூசைசெய்தாங்கின்னருளடைந்துமன்னே. (௩)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆசனந்தனின்மாணுக்கனையிருத்தியறை‡சகளீகரணத்தை
மாசறச்செய்தைங்கலைகளினுருவமாக்கியேமந்திரந்தன்னைப்

* நீரிடைமூழ்கல்-வாருணஸ்நானம். † வெண்ணீற்றின்மூழ்கல்-ஆக்கினேயஸ்நானம்.
‡ ஈண்டுச்சகளீகரணமென்றது பஞ்சகலைகளினியாசத்தை.

பாசமற்ரெழியவாங்கவன்மெய்யிற்பாற்படஙியாசத்தையியற்றிப்
பூசனைபுரியவேண்டுமொலேத்திப்போற்றுநஞ்சிவனெனநினைந்தே. (ச)

நிறைத்துமுன்வைத்தகுடத்தினீர்சொரிந்துசிவ்வத்தநிலவுறவைத்துத்
திறப்படமறைகள்யாவையுமோதித்திகழ்சிவாசாரியனுக்கி
யெறிக்குநன்மணிசெய்பூணணிந்ததன்பினிறைவனைப்பூசனைசெய்து
மறித்தும்வெங்கனலைவளர்த்துமானேந்தும்வரதனைப்பூசனைபுரிந்தே. ரு

வணங்கியீங்கிவனைத்தேசிகனுகமாசறச்செய்தனன்பகுவாய்ப்,பண
ங்களைந்துடையவரவணையசைத்தபரமனேயருளெனவேண்டிப், பிண
ங்குவேல்விழியாள்பங்கனைமீட்டும்பெட்பமாணுக்கனேடிறைஞ்சித்,
துணிந்தவாகமநூலேட்டினைவினைபோய்த்தொலைவுறக்கொடுத்திடவே
ண்டும். (சு)

எட்டைமாணுக்கன்வாங்கியாசனத்திலேற்றிவண்டேழிசைபாடத்
தோட்டிணரவிழ்ந்தநறுமலர்தூவித்தோமறப்பூசித்தபின்னர்
வாட்டமில்குரவன்கண்டுளமகிழ்ந்துமதமடைதிறந்துபாய்கரடக்
கோட்டுமால்யானையரசர்தம்வரிசையாவையுங்கொடுத்திடவேண்டும்.

கொடுத்திறைபூசைகாலத்தின்முடித்திகோதறுசிவாகமநன்காத்
தொடுத்துறவுரைத்தநெறியினிற்சேறிதுகளின்மாணுக்கனையுணர்ந்தே
வடித்தவஞ்செழுத்தையுணர்த்துதியுகனுமான்மறியேந்தியமுதல்வ [ம்.
னடித்துறையிலிங்கந்தாபிநல்லருளோடமர்தியென்றுரைத்திடவேண்டு

அழலின்மண்டலத்திலறல்பெய்கும்பத்திலமர்ந்துறைசிவன்றனை
நீக்கிக், குழுமியங்குறைவோர்தமக்குறுபூசைகோதறவாற்றிடவேண்டு
ம், விழைவொடுந்தீக்கையொன்றிரண்டன்றிமூன்றுநான்மிக்கவோர்கா
லத், துழுவலன்போடுமியற்றிடலுரித்தாமென்பராலுயர்ந்தமேலவரே.

உத்தமதீக்கையாவையுமோர்காலத்தினிலுஞற்றிடத்தொடுத்தா
லத்துவசுத்திபோலவேகலசம்யாவையுமணிபெறவைத்து
வித்தகசமயதீக்கைபோற்கருமமெவற்றையுமேதகவியற்றித் [தே.
தத்துநீர்ச்சடையோன்ருண்மலர்வணங்கிச்சடத்துவாச்சுத்தியைச்செய்

ஈசனைப்பின்னும்பூசனைசெய்துமந்திர தருப்பணமியற்றி
மாசின்மந்திர தீபனமுநன்காற்றிவர தனைப்பூசனைபுரிந்தாங்
காசறுசிவவிஞ்ஞைசயினைமாணுக்கற்களித்துறவாற்றுறுதீக்கை
யேசலில்கருமம்யாவையுநன்காவெய்திடமுடித்திடவேண்டும். (கக)

சகமெலாமூன்றுதத்துவவுருவாத்தன்னுளத்திடையினினினைந்து
புகலபிடேகமீறதாவந்தத்தத்துவசுத்தியைப்புரிக
துகளிறத்துவசுத்தியைச்செயினதீதசாந்தியேமுதலவாச்சொல்லுந்
திகழ்தருகலைகட்குரைத்தவாறெல்லாஞ்சேகறவாற்றிடவேண்டும். கஉ

தத்துவமூன்றுட்சத்தியிற்சிவமாதத்துவந்தோன்றுமற்றதுதா
னுய்த்திடும்வித்தியாதத்துவமதனையாங்கதிலுதித்திடும்வந்து
வித்தகவான்மதத்துவமோங்கிவிரிசிவதத்துவமதனால்
வைத்திடுமதீதசாந்தியத்துவாத்தான்மாசறநிறைத்திடப்படுமால். (கரு)

விரிந்திடுமற்றையத்துவாநான்கைவித்தியாதத்துவநிறைக்கு
மருந்திறலத்துவாக்களையெல்லாமான்மதத்துவநிறைத்திடுமாற்
றிருந்தியேயுயர்ந்தசாம்பவிதீக்கைகளுக்குமஞ்சாத்தநற்றீக்கை
பரந்திடுதூலமாகுமாலென்னப்பண்ணவர்யாவரும்பகர்வார். (கச)

விரித்தனந்தீக்கைநான்கையுமெடுத்துமேதகவேண்டுவவின்னு
மருத்தியாற்கேட்டியறைறவல்பேய்முலைப்பாலன்றுயிரோடுறவருந்தித்
திருத்தகவில்லாக்கஞ்சனுள்ளாவிசெகுத்தொருசெய்யகோலோச்சி
வருத்தமின்றுகமானிலம்புரப்போயெனமுனிவழங்கினனன்றே. (கரு)

ஆசாரியாபிடேகவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருஅக.

---

## அடியவர்நித்தியகன்மமுறைத்தவத்தியாயம்.

---

வழங்கலுந்தவத்தின்றுறைறவழியொழுகிமன்னுபமன்னியுவென்பான்
பழங்கனிந்தனையவருளினைப்போற்றிப்பணிந்தலர்பங்கயக்கண்ணன்

குழந்தைவெண்பிறையானடியவரியற்றுகருமத்தைதக்கூறுதிகேட்க
விழைந்தனனென்னவாங்கவனெடுத்துமெய்யுறவிரிக்கலுற்றனனால். க

காலையினெழுந்துசிவன்றனையுமையாடன்னொடுங்கருத்திடைமுன்னிச்
சாலவேசெய்யுங்கருமமுநினைந்துதன்மனைப்புறத்தினிற்போகி
யேலுறச்சனங்களெய்திடாத்தலத்திலெய்தியேயிருமலங்கழித்தே
யாலுநீர்முகந்துசவுசநன்கியற்றியணிமணிப்பல்விளக்கெறிந்தே. (உ)

மன்னிடப்பல்லுவிளக்கொணுநாளில்வளர்தருக்கடைகையின்றென்
னிற், பன்னிருகானீர்வாய்க்கொண்டாங்குமிழ்ந்துபாய்புனனதியினிற்
குளத்திற், றன்னிமண்பூசிமூழ்கிக்கோமயந்தான்றுகளறப்பூசியந்நீரிற்,
பின்னருமூழ்கியறுகொடெள்ளணிந்துபின்னருமூழ்கிடவேண்டும். (௩)

அள்ளிமற்றொன்றுமணிகலாதறலிற்பின்னருமாசறமூழ்கி
வெள்ளைவெண்டுகினன்கணிந்திடவேண்டுமேதகுபிரமசாரியுமே
லொள்ளொளிவிரிக்குங்கலன்கழிமகளிர்தாமுமிக்குயர்தவத்தோரு
முள்ளிடப்பல்லைவிளக்குதல்வாசநீரின்மூழ்குதலுரித்தன்றால். (௪)

துகிலணிந்ததற்பின்னறலிடைமூழ்கிச்சுடர்செய்மும்மண்டலநினை
ந்தாங்,கிகல்செய்மூவெயின்முன்னெரித்தவரேறுடிமிறலியைநினைந்து
பின்னெழுந்து, தகைபெறுமாவின்கோட்டினுற்பலாசினிலையினுற்றும
ணையிலையா, நிகழ்தருகையானீர்முகந்தைந்துமுறை சிரத்தினில்விட
வேண்டும். (௫)

விரைகமழ்காவின்மனையினீராடுபோதினின்மந்திரம்விளம்பிக்
கரகநீரன்றிக்கலசநீராடவேண்டுமாற்கரைந்தவாறுட
வுரனிலனென்னிலீரவாடையினுன்மெய்யினைத்துடைக்கமற்றதுதார்
னரிதெனில்வெள்ளைவிளங்குவெண்ணீற்றுலாடுதலியல்பெனவறைவா

மற்றிதுமரிதேன்மந்திரதீர்த்தமாடுகமானததீர்த்த
முற்றிடச்சிவனையுன்னுதலதுதான்யோகிகட்காமெனவுரைப்பார்
தெற்றெனநீரிலாடியபின்னர்ச்செய்துசுத்தாசமனத்தைக்
கற்றைறவாளிரவிதனக்குநீருதவிப்பிரமவெச்சங்கனிந்தாற்றி, (௭)

தேவர்கண்முனிவர்பிதிர்க்களுக்கடைவேசெங்கையானீர்முகந்த ளித்து, வரவுவாம்புரவியிரவிமண்டலத்தின்மதியணிவரதனைப்பூசித், தோவறத்தெண்ணீரருக்கியமுதவியுயர்ந்துறைகடவுளேயெனது, பா வமற்றெவையும்பறிக்குவாயென்னப்பதமலர்வணங்கிடவேண்டும். அ

இன்னவாறன்றித்தங்கள்சூத்திரந்தானிசைத்தவாறியற்றருகருமந்
தன்னைநன்கியற்றிக்கரநியாசத்தினொடுசகளீகரணத்தை
மன்னிடச்செய்துசந்தனங்கடுகுமலிபுனலிடக்கையினேந்தி [வேண்டும்.
முன்னைநான்மறையாற்றருப்பைபயிற்றோய்த்துமுடிமிசைத்தெளித்திட

தெளித்தபின்னிடப்பான்மூக்கினுற்கையிலிருந்ததெண்ணீர்தனை மோந்து, துளிப்புனலதுதான்மெய்யினுட்புகுந்துபாவங்கள்யாவையுந் தொலைப்ப,வளைத்தவப்பாவம்வலப்புறமூக்கின்வழியதாய்வந்துவன்கல் லிற், களிப்பறவடியுண்டகன்றுபோயினதாமனத்தினிற்கருதிடவேண் டும். (கo)

வானவர்பிதிர்க்களிருடிகள்பூதமகிழ்ந்திடவருக்கியம்வழங்கிக்
கானுலாஞ்செய்யசந்தனக்குழம்பாற்காண்டகமண்டலமியற்றி
யானதோர்சிவந்தபொடியினாலதனையலங்கரித்தம்பொன்வள்ளந்தா
னேனையவெள்ளியிலங்குவள்ளந்தானதன்மிசையிருந்திடவிருத்தி. (கக)

செய்யசந்தனத்தினீரினானிறைத்துச்செம்மலரொட்குசமரிசி
யையநல்லறுகுதளிர்த்தநாயுருவியான்சுவைப்பாலொடுதயிர்நெய்
பெய்திருமுழந்தாளூன்றியேயிருந்துபெருகியவன்பொடுந்தனது
கையினால்வள்ளமெடுத்துயர்சிரத்திற்கவின்பெறவைத்திடவேண்டும்.

வைத்தபின்பரிதிமண்டலத்துறையும்வார்சடையிறைமுதல்வனுக்காங்
குய்த்திடவேண்டுமருக்கியமன்றேற்றருப்பைபீருதவுகதன்னைப்
பைத்தபாம்பணியாவணிந்தவன்பஞ்சப்பிரமமாப்பாவகஞ்செய்து
கைத்தகார்நிறத்தவிடமணிகண்டனீற்றினைக்கையினிலெடுத்தே. (கரு)

நீரினைவாக்கிக்குழைத்துயர்சிரத்தினெற்றியின்மார்பினுபியினி
லார்முழந்தாளிலஞ்செழுத்தோதியணிந்துபின்மூலமந்திரத்தா

லேர்பெறமேனியெங்கணும்பூசியெழுந்துவேருடையொன்றணிந்தாங்
கோர்தருசுத்தாசமனநல்லன்பாலுஞற்றிடவேண்டுமாலுணர்ந்தே. (கச)

பண்ணவர்விளம்பிமகிழ்ந்திடுமைந்தப்பதிஞெருமந்திரமியம்பித், த
ண்ணெனும்புனலைத்தலையினிற்றெளித்துத் தயங்குவேருடையொன்று
டைஇப்பி, னண்ணுறச்சுத்தாசமனநன்கியற்றிநளிர்சடைமிசைமதிவைத்
த, வண்ணலைமுன்னிக்கரநியாசத்தைதயடைவினிலாசறச்செய்தே (கரு)

கலிவிருத்தம்.

திகழ்திரிபுண்டரஞ்சதுரஞ்செவ்வனே
புகறருபொட்டொடுவட்டம்பொங்கொளி
வகிர்மதியாகவேவகுத்தவாற்றிலொன்
றகனிலாநீற்றினையணியவேண்டுமால். (கசு)

அன்னவாருரமுமணியவேண்டுமான்
முன்னைவெண்ணீற்றைறமெய்முழுதும்பூசலிற்
றன்னைநேரிலாத்திரிபுண்டரந்தனைச்
சொன்னவாறணிவதேதூய்மையாகுமால். (கஎ)

தலையினுங்கழுத்தினுந்தடக்கைதன்னினு
மிலகுமுந்நூலினுமேற்பயாருமுண்
மலைவுறுவிறையக்கமணியைமன்னியே
நிலைபெறப்புனைந்திடனீர்மையாகுமால். (கஅ)

பானிறம்பொன்னிறம்பழுதில்செந்நிற
மேனையகருநிறமிலங்குகண்டிகை
ஞானவேதியர்மன்னர்நாய்கர்பின்னவ
ரானவம்முறையினிலணியவேண்டுமால். (ககூ)

உயர்ந்தவர்கீழவர்தமக்குரைத்ததை
வியந்திடாக்கீழவர்மேலுளோர்கட்குப்

பயன்படவுறைத்ததையணிதல்* பான்மையன்
றியம்பிடுமிவ்வகையிறைவனூல்களே. (உ0)

தூயனுறையுமுறைந்தபோதன்றித்தூய்தன்மை
யேயபோதணியொணுதிலங்குதூய்மைய
னுயபோதெலாமக்கழுணியையார்வினை
தேய்வுறவணிந்திடல்செம்மைத்தாகுமால். (உக)

இவ்வகையணிந்துபின்னிறைவன்பூசனை
செவ்விதிற்செய்தலஞ்சேர்ந்துகீழ்த்திசை
யெவ்வமில்வடதிசைநோக்கியிட்டதோர்
திவ்வியவாசனந்திகழவைகியே. (உஉ)

இறைவனையுமையொடுமனத்திலெண்ணியே
யுறைதருசுவேதனேமுதலங்கோங்கிய
வறைலகுளீசனீறுவமர்ந்திடு
மறைபயில்குரவனைவணங்கியேத்தியே. (உஙு)

தன்னுடைக்குரவனைத்தாழ்ந்துதாழ்சடை
முன்னவன்றுள்களிற்பணிந்துமுன்னவ
னுன்னிடுமெட்டுநாமங்களோதுக
பன்னுகபதினெர்மந்திரங்கள்பாற்பட. (உச)

மனமுணர்சோதியாம்வள்ளறன்னைநா
நுனையினின்முன்னியேநுவல்வநுண்ணிதாய்
நனிமிகநுவன்றிடநினைவநன்கதாத்
துனைவினினினைந்திடவேண்டுஞ்சொல்லினே. (உரு)

---

* பான்மையன்றெனக்கூறினும், உயர்ந்தது கிடையாதுவிடில் தாழ்ந்ததுந் தரிக்கலாமென்பது "அரிதாகில் வெண்மைதா னந்தணர்க்குச் செம்மை, யுரிமை யெனவே யுணர்க-வரிதாகிற், செம்மையும் பொன்மைதருந் தேடவரி தேலதுவு, நன்மை கருமையென நாடு." என்னும் உருத்திராக்கவிசிட்டச் செய்யுளானுணர்க.

வளைவளராரத்தான்மலர்க்கைபூசியே
சுரநியாசத்தினைச்செய்ககாசற
வுளைசெய்தநியாசமோர்மூவகைத்தென
வரணவிலாகமமறையுமென்பவே. (உரு)

முறையினிற்பெருவிரன்முதலதாகவே
சிறுவிரலீறதாச்செய்நியாசத்தை
யறைதிதிநியாசமென்றறையுமா லுயர்
மறையுடனாகமம்வகுத்துநின்றரோ. (உ௭)

அலர்புனைவலக்கையங்குட்டமுன்னதா
விலகியவிடக்கையங்குட்டமீறதா
நிலவுறச்செய்திடுநியாசந்தானுறு
தொலைவறுசிருட்டியென்னியாசஞ்சொல்லினே. (உ௮)

அணிசிறுவிரன்முதலாகவாழிசே
ரிணையறுபெருவிரலீறதாகவே
துணிவுறவாற்றிடுநியாசந்தோமறு
தணிவில்சங்காரமென்னியாசஞ்சாற்றினே. (உ௯)

முனநவினியாசந்தான்மொழியினன்கதா
மனையவர்மங்கலமாதர்க்காகுமா
னினைவுறின்மற்றதாநியாசங்கன்னிக்கும்
புனைகலாப்பிரமசாரிக்கும்பொற்பதே. (௩0)

பின்னதாநியாசந்தான்பெரியகானிடை
மன்னியேமனையொடுமாதவஞ்செய்வோர்
பன்னுமுக்கோலுடைப்பகவர்காதலன்
றன்னையங்கிழந்தவர்தங்கட்காகுமால். (௩௧)

விந்துவுநகாரமுங்கூட்டிவிட்டொளி
ரந்திரோர்வண்ணனல்லஞ்செழுத்தினைப்

பந்திசேர்விரல்களிற்பான்மைத்தாகவே
சிந்தியாநியாசத்தைச்செய்யவேண்டுமால். (௯௨)

அங்கையிலனுமிகையறைசெல்லார்குழல்
பங்கன்மந்திரத்தையும்பத்துத்திக்கினு
மங்கிடாவத்திரமந்திரத்தையும்
பொங்கியநியாசத்தைப்புரியவேண்டுமால். (௯௩)

முந்தியநிவிர்த்தியேமுதலவாங்கலை
யைந்தையுமைந்துபூதங்களாகவே
சிந்தியாக்கலைகடாஞ்சுத்திசேர்தர
வெந்தையஞ்செழுத்தினையியம்பல்வேண்டுமால். (௯௪)

காற்றினையடக்கிநெஞ்சகத்திற்கண்டத்திற்
போற்றுறுநாவினிற்புருவநாப்பணின்
மேற்றிகழுச்சியின்விளம்புபூதத்தி
னாற்றல்சால்கிரந்தியையறுக்கவேண்டுமால். (௯௫)

நடுவுறைசுழுமுனைநாடிவாயிலா
விடையறவியங்கிடுமூதையேவிட
வொடிவறவுறையுமான்மாவையுச்சிமே
லடைசிவனடியினிலமைக்கவேண்டுமால். (௯௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நிலைபெருவுடம்பைக்காற்றுமேனோர்வுறவாட்டிநின்ற
கலைகளைக்கீழ்மேலாக்கிக்காலவெந்தீயாற்சுட்டு
நலனுறுமயிர்ந்தன்றனைத்துமெய்யாக்கிநன்கா
வலைவறக்கலைகடம்மையமைத்திடவேண்டுமன்றே. (௯௭)

அரனுறையான்மாத்தன்னைப்பிரமரந்திரமாறுக
மருவுறக்கொணர்ந்தாகத்துண்மலர்க்கமலத்தில்வைத்துச்
சொரிதருமமிழ்தாரைமழையினாற்றுலங்கித்தோன்றும்
பொருவிலாவுடம்புதன்னைப்பொற்புறநினைக்கவேண்டும். (௯௮)

கையினினியாசநன்காக்காண்டகவியற்றிப்பின்னர்
மெய்யினினியாசமாற்றியெழுத்துக்கள்விளம்பிமெய்யிற்
செய்யவாமுறுப்புத்தோறுநியாசத்தைச்செய்திவ்வாறு
மையறுகரத்தினோடாறங்கமுஞ்சித்துமன்றே. (௩௯)

பாயழற்றிசைசையைமுன்றுந்திசையொருபத்துமுன்னே
யெய்வுறச்சொன்னவாறேபந்தனமியற்றவேண்டு
மாயவாறியற்றுக்காலத்தலைமுதலடியீறாகச்
சேயபஞ்சாங்கத்தோடுசடங்கத்தைநியாசஞ்செய்தே. (௪0)

திருந்தியவுடம்பினோடுமாவியைச்சுத்திசெய்வான்
சுருங்கிடநியாசந்தன்னைத்துகளறவியற்றல்செய்து
கருங்குழல்பாகன்றனிற்காண்டகப்பூசையாற்றி
விரிந்திடுநியாசந்தன்னைவிளைத்திடவேண்டுமன்றே. (௪௧)

மேற்படிவேறு.

மாதிருகாநியாசமிகவடித்திடுபஞ்சப்பிரமநியாசமன்ன
வோதுபிரணவநியாசங்கோதிலாவுய*ரங்கிசநியாச
மேதமிலாதுறைபஞ்சாக்கரநியாசஞ்சிவநூலெடுத்துக்கொண்டு
தீதறவேயுரைத்தபடிசெவ்விதினன்காவுணர்ந்துசெய்யவேண்டும். ௪௨

அறைந்தவற்றுளொன்றுதானனைத்துந்தான்செய்திடுகவன்றேன்மற்றைச், சிறந்துயருமாதிருகாநியாசஞ்செய்துதன்பின்னர்ச்செங்கைதன்னிற், பிறங்குநியாசஞ்செய்துதலைமுகமார்பொடுருய்யந்தானிற்பெட்பிற்,றிறம்பலில்பஞ்சப்பிரமநியாசத்தைவரன்முறையேசெய்யவேண்டும்.

ஐந்துமுகந்தனக்கடைவேயடைந்தனவாலெனநினைந்தாங்காசொன்றில்லா, முந்தையவாமீசானகலையைந்துமுறைபிறழாநியாசஞ்செய்து, வந்தமுகமோரைந்திற்றற்புருடகலைநான்கும்வயங்கக்கீழ்பாற், சிந்தைசெயுமுகமுதலாநான்கினிலுநியாசத்தைச்செய்யவேண்டும். (௪௩)

---

* அங்கிசம் அம்சமென்பதன்றிரிபு.

இதயமொடுகெழுத்துத்தோளுபிவயிறெழின்முதுகுமார்பிலேற்ப
மதிபிறழாதகோரகலைதன்னைநியாசம்புரிந்துமன்னபானம் [னித்
வதியிலிங்கங்குறங்குமுழந்தாள்கணைக்கான்மிகத்திரண்டுதசைகண்மன்
தைதொடையினுறுசந்திசாற்றுமருங்குயர்விலாப்புடைகடம்மில். சரு

மாசிலாவகைவாமதேவகலைதனையெடுத்துவகுத்தவாறே
யேசலிலாநியாசத்தைச்செய்தெழில்சேர்மலர்த்தாளின்மணிகண்டத்தி
லாசறவேயுயர்மூக்கிற்றலையின்முழங்கையின்முனமறைந்தவாறே
தேசுறுசத்தியோசாதகலைகடமைநியாசத்தைச்செய்யவேண்டும். (சகூ)

கையின்முழங்கையின்மணிப்பந்தத்திற்பக்கத்தில்வயிற்றிற்காசி
லையகணைக்காலிலடியினின்முதுகிற்பிரணவத்தைநியாசமாற்றிச் [வே
செய்யகண்மூக்குச்செவிதோள்பக்கமுலையணாகைபரடிவற்றிற்செவ்
யொய்யெனப்பஞ்சாக்கரத்தினங்கிசமாநியாசத்தையுளுற்றவேண்டும். ()

அஞ்செழுத்தைநியாசஞ்செய்தமர்தன்னைச்சிவனுகவகத்தின்முன்னி
யுஞ்சிடவேசிவதருமஞ்செயவேண்டுமவைகருமந்தவமற்றேதும்
வஞ்சமிலாச்செபந்தியானஞானமெனவைந்தாகவகுக்கமன்னுஞ்
செஞ்செவேயீங்கிவற்றுளோரொன்றையோரொருவர்செய்வர்மன்றே

கருமவெச்சமிருவகைத்தாங்காமியமற்றகாமியமாமென்னவுற்றுப்
பருகுகாமியகருமஞ்செய்தவனக்கருமபலன்பருகிப்பின்னர்
மருவுவனோர்பிறவியினின்மாசிலகாமியகருமம்வகுத்துளோன்முன்
பொருவிலுருத்திரவுலகிற்புகுந்துமண்ணிற்பிறந்துதவம்புரிவனன்றே.

தவஞ்செய்வோன்முவிலாவுயர்ந்தவுருத்திரவுலகந்தன்னிலெய்தி
யுவந்துபலபோகங்களுண்டிரவுக்கடல்சூழ்மண்ணுலகந்தன்னி
னிவந்தருலந்தனிலுதித்துச்செபத்திறெடுதியானங்கள்புரிந்துநெஞ்சி
லவங்கடிந்துவிடையுயர்த்தவண்ணலடியானுகியமருவானல். (ருo)

உற்றுயர்ந்தசெபமழியாத்தியானத்தைச்செட்கின்றேறெழியாஞானம்
பற்றிமுத்தியெய்துவனென்ஞானந்தான்பழுதிலாமுத்திவீட்டைத்

தெற்றெனவேகொடுக்குமாற்செய்திடுநற்கருமந்தான்சிலநாட்சென்றே
பெற்றிடவேதருமதனுற்றியானமொடுஞானத்தைப்பேணவேண்டும். ()

அரசனைவான்கடைப்புறத்தினின்றுசேவிப்போரிலகத்துண்மன்னிப்
பரவியேசேவைதினஞ்செய்வோர்களுயர்செல்வம்படைத்தல்போல
விரியவேகருமங்கள்செய்பவரிற்றியானந்தான்விளங்கமுன்னிப்
புரிபவர்தாமிகுபலத்தைப்பொருந்துவாரெனமறைகள்புகலுமன்றே. ()

கருமந்தான்செய்கின்றோர்கண்முதலானவைகடமிற்கடவுண்மூர்த்தந்
திரிவறவேகாண்பதுபோற்செப்பரியஞானவொளியுருவந்தன்னை
மருவவுளத்திடைக்காண்பர்மாசிலாத்தியானத்தைநவல்லோர்யாரும்
பரவுகின்றசிலைமுதலாமூர்த்திகளிற்றமதுள்ளம்பற்றாரன்றே. (௫௩)

சிறந்தகத்துளான்மாவினுறைசிவனைப்பூசையினைச்செய்யாருகி
மறந்துபுறத்தினிற்பூசைவருந்தியேயியற்றுபவன்வயங்குமாவின்
கறந்தபாலடிசிலகங்கையுளேயிருப்பதுதான்கண்டுறாது
புறங்கையினைநக்குபவன்போலுமால்யாமறியப்புகலுங்காலே. (௫௪)

திருந்தியஞானத்தினுற்றியானமுண்டாந்தியானத்தான்ஞானமேன்மேற்
பொருந்தியேவளர்ந்திடுமாற்புகல்செய்தியானமொடுஞானத்தென்றும்
வருந்திடவேவேண்டுமால்வருந்திடாதொழிவோமேல்வயங்குமன்னி
யரன்பயிலுந்தனிமுத்தியழிகலாவீட்டினினன்கமரலாமே. (௫௫)

பொருவிறுவாதசாந்தத்திற்றலையினினெற்றியிற்புருவநடுவின்மூக்கின்
மருவுநுனையினில்வாயிற்கழுத்திலகத்தினில்வயங்குமுந்திதன்னி
லுறைசெய்மூலாதாரந்தன்னிலுயர்ந்தோங்கொழியாப்பத்திதன்று [ம்,
லரிபரந்தகண்ணுண்மையோடண்ணலுக்குப்பூசையினையாற்றல்வேண்டு

அன்றென்னிற்படிமத்திலிலிங்கத்திற்செந்தழலிலகன்ஞாலத்திற்
றுன்றுபுனலிற்பூசைபுரிந்திடவேவேண்டுமாற்சொன்னவன்றி
யொன்றுமுளத்தினிற்புறத்திற்பூசைபுரிகுகவுளத்திற்பூசைசெய்வோ
னென்றுநனிபுறப்பூசைசெய்யினுமாமொழியினுமாமென்பர்மேலோர்.

அடியவர்நித்தியகன்மமுறைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪௪௬.

# மானதபூசைவிதியுரைத்தவத்தியாயம்.

முன்னமேயுமையவட்குச்சிவபூசைவிதியெடுத்துமொழிந்தான்முன்னுங்
கன்னல்வேள்படவிழித்தகண்ணுதலோனுங்கதுதான்கழறல்செய்வா
மின்னநாளுனக்கென்னவிசைத்தனனுலிருந்தவத்தாலுயர்ந்துமிக்காய்
மன்னியேயினிதுறையுமாசிலுபமன்னியுமாமுனிவன்மன்னே. (க)

அகத்திடையிற்பூசைசெய்வோன் பூசையினுக்குரியவெலாமடை
வின்முன்னி, வகைப்படவேயுளக்கமலநடுவுறையுமிறைவனுக்குவலப்
பால்யானை, முகத்தவனைச்சிந்தியாவிடப்புறத்தினந்திமொழிசுடசைத
ன்னைத், தகைப்படவேநினைந்ததற்பின்பூசைபுரிந்துளக்கமலந்தன்னின்
மன்னே. (உ)

ஓதுமாதாரசத்தியேமுதலாவுரைத்திடுதத்துவங்கண்மூன்றுந்
தாதுலாங்கமலமுநன்குணர்ந்துணர்ந்ததனிக்கமலாசனத்தின்மீதிற்
றீதிலாப்பளிங்கொளிமேனியனுகிச்செய்யகரங்களினிற்றீக்கால்
காதுவாய்மழுமானுமபயவரதமும்பொலிந்தகவினித்தோன்ற. (ங)

மதிப்பிளவுமுடிக்கணிந்துவாங்கியிருள்பருகுமணிக்கலன்கடாங்
கிப், புதுக்கடிநாண்மலர்புனைந்துபொற்குழையுமணித்தோடும்பொலிந்
துதோன்றக், கொதிக்கும்விடமிடற்றிலங்கக்குறுநகைபூத்தலர்ந்தமுக்
கண்குலவமுன்னும், விதிக்கும்விதியாமிறைதான்மேவியேயுறைபவனு
விழைந்துமுன்னி. (ச)

ஆங்கவன்றனிடப்பாலிற்குவளைநிறம்வாய்த்தணிந்தமூலைகடாங்கி
வாங்குமிடையசைந்தொசியமதர்விழிகள்குழையலைப்பவயங்குசோதி
தாங்குமதிமுகமிலங்கக்கருங்குழலிற்றைதமலர்ப்பூமாலையோடும்
வீங்குகதிரிளமதியம்புனைந்துகமழ்வெண்சாந்தின்றிலகந்திட்டி. (ரு)

மாற்றிலாப்பொன்னுடைவயங்கவுடைஇமணிமுத்தவடங்களோடுங்
காற்றுகதிர்மணிவடங்கள்கலந்தணிந்துபசுநிறத்தகழைப்பொற்றோளி
ஞற்றிசைபோயிருள்பருகுநவமணியின்வளைசேர்த்திநளினப்போது
தோற்றமலரடித்துணையிற்பூஞ்சிலம்புசுடருமிழ்ந்துதுலங்கித்தோன்ற.

பொன்னிறத்தாமரைப்போதுபுனைவனோசேர்வலக்கைதனிற்பொ லியத்தாங்கி, மின்னுகதிர்வனையிடக்கைதனிட்டொளிருமாசனத்தின்மே விளங்கின்றி, யன்னதனையுமையவடானுறைபவளவன்னிறமைகயலர்க்கு விண்ட, முன்னுமலரார்ப்பூசைமுன்னைவினைகெட்டோடமுடிக்கவே ண்டும். (௭)

முடித்ததற்பின்சதாசிவமாமூர்த்தியைத்தான்மகேச்சரனைத்தான் முன்றுதி, யெடுத்துரைசெய்கின்றசிகண்டனைத்தானுளத்திடையிலிறை ஞ்சிமுன்னி, யடுத்திடத்தன்மெய்யதனினியாசத்தைச்செய்தவெல்லா மன்னைதன்மெய்யிற், றொடுத்துறவேநியாசத்தைச்செயவேண்டுமிறம் பாதுசொன்னவாறே. (௮)

தாபியமுறனிலோமஞ்செய்ததற்பின்புருவகவேதனினன்காத் தீபிகைபோலுறையுஞ்சிவன்றனைநினைத்தகத்தாட்பூசைதனை மாபவந்தீர்ந்திடமுடித்தபின்னிலிங்கத்தினிற்றழலில்வையங்குமன்னிற் றூபமுதலியவேந்திச்சிவபூசைதனையியற்றத்தொடங்கவேண்டும். (௯)

மானதபூசைவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪[illegible].

## கிரியாபூசைவிதியுரைத்தவத்தியாயம்.

பூசைசெய்யுமிடந்தன்னைச்சந்தனநீராற்றெளித்துப்பூக்கள்வி [ன்னி
மாசில்வளர்தருப்பைபயினைவிரித்ததன்மேன் மணிவள்ளங்கைத்தத்தெ ராசறவேநிறைத்துப்பொன்வெள்ளிமணிசாந்தம்புவரிதன்னெ னேசவிலாத்தருப்பைபயினையெடுத்துமிகவிடவேண்டுமிசைத்தவாறே. க

சிவலிங்கந்தனையாட்டுநீரிற்பாளியருமீரிற்றேன்கா னவையறுபூமணங்கமழும்பல்பண்டம்பெய்துபாத்தியங்கனீரிற் றவருறையுமலயமலைச்சாந்தயிலாமிச்சம்வேர்தயங்கச்சேர்த்தி யவைமகலவேயயலின்வைத்திருத்தவாசமனீயத்தெண்ணீரில். (௨)

சாதிக்காய்கருப்பூரந்தமாலம்பெய்தருக்கியநீர்தன்னினன்காய்த் தீற்றதருப்பையவையரிசியென்றுமெய்யகுருதேதனுர்தன்பூர்

கோதற்றவெண்ணீறங்கிடவேவெண்டும்பையைவமலர்நற்குசந்தமால
மோதுற்றதெளித்திடுபாத்திரத்தினுள்ளிடுதலுரித்தாமன்றே. (௩)

ஏலமொடுகருப்பூரஞ்சந்தனம்பாத்திரம்யாவுமிட்டுவைத்தே
சாலவேதெளித்திடுபாத்திரமாலைவற்றினிலுந்தெளித்துச்சார்ந்த
மாலறவேவையங்காளைவடப்புறத்தின்மணிமலர்தூய்வணங்கியாங்கே
சீலமுடனுறைநந்திதனைக்குமுறைபூசையினைச்செய்யவேண்டும். (௪)

வடபுறத்தினந்திபெருமானைவிதனைமலர்தூவிவணங்கியிவ்வாற
டைவுடனேதுவாரபூசையையியற்றியவ்வாயிறன்னிலெய்திக், கடவுண்
மாலிலிங்கத்தைதப்புரித்தாக்கடிமலர்கள்கழித்துத்தெண்ணீ, ரொடிவற
வேசொரிந்திலிங்கத்துச்சியினிலோர்மலரைச்சேர்த்தல்வேண்டும். (௫)

சேர்த்தியபின்கழித்தமலர்தனைச்சண்டேசுரன்றனக்குச் சிறப்பச்சேர்த்
யார்த்தகடல்சூழ்மண் * ணீராதாரசத்திதனையதற்குமேலாய்ச் [தி
சீர்த்தவனந்தனையவன்றன்மேலாகத்திகழ்ந்துறையுந் † தருமஞானங்
கூர்த்தவயிராக்கியமோடையிச்சரியஞ்சிங்கமாய்க்குலவிமன்னி. (௬)

ஒருநான்குவன்னமுநன்குடையவாயுயர்ந்தவாசனத்தைத்தாங்கி
மருவுறுமற்றவைதம்மையதன்மமொடுமஞ்ஞானமன்னிநின்ற
வுரைவயிராக்கியமற்றையையிச்சரிய § மிராசாவர்த்தந்தானொத்து
விரிவுறுமாசனமாகிமேவவற்றைப்புரிக்கவேண்டுமன்றே. (௭)

---

* ஈண்டுக்கூறப்படும் ஆசனத்தில் சலாசனவுறுப்பும் கூறப்படி
னும் சலமுறையாமையால் திராசனமெனவேகொள்க. சலாசனமெனி
னும் சடுத்தாசனமெனினும் ஒக்கும். இவற்றின்கூறுபாடு " ஆதார சத்
தி மூதற்குடிலா சத்தியந்த, மோதாய் திராதனமென் றோர்ந்து. சலா
தனம னந்தருந்தன் மாதியொரு நான்கு, நலாணொண்ணு மம்புயமு நாடு.
அருகஞ் சலாதனமு மிட்டலிங்கத் தென்று, மருகந் திரம்பரார்த் த
த்து." என்னும் சைவசமயநெறித் திருக்குறள்களாலுணர்க.

† தருமாதிநான்கும் ஆசனத்திற்குச் சிங்கரூபமான கால்களென
வும், இவற்றிற்குநிறம் முறையே வெண்மை செம்மை பொன்மை கரு
மையெனவும், அதன்மம் அஞ்ஞானம் அவைராக்கியம் அவைசுவரிய
மென்னும்நான்கும் இராசாவர்த்தநிறமெனவும், இவை அவ்வாசனத்தி
ற்கு உபகால்களெனவும் கொள்க.

§ இராசாவர்த்தம் - கலப்புநிறமுள்ள ஒரு உபரத்தினம்.

உரைத்ததன்பி * னதச்சதனமுறையூர்த்தச்சதனத்தைப்பூசையோம்பி
விரித்தவெள்ளைப்பதுமத்தினெட்டிதழும்விளம்புமணிமாதிமுன்னும்
வருத்தமிலாவட்டசித்தியாதினைத்தங்கல்லிகளோடொட்டும்வாய்ப்பப்
பொருத்தமுறும்வாமதேவன்முதலெட்டுருத்திரர்தாம்பொருந்திமன்னி.

$ வாமாதிசத்திகளோடுறைபவராயுளத்தெண்ணிமலர்க்கேஸிக்
காமாரிதருமமாயதன்கிழங்கைநினைந்துகவிறுளாந்தன்னைத்
தேமாலைச்சிவஞானமெனமுன்னிச்செப்பும்வயிராக்கியந்தா
ஞமாமிங்கணிந்தபொருட்டெனக்கருதிப்பூசனைநன்காற்றவேண்டும். ௯

முளைத்தெழுந்தபொருட்டின்மிசைமுச்சுடர்மண்டலங்கடமைமுன்னிநன்காய்த், திளைத்தெழுந்ததத்துவங்களொருமூன்றுஞ்சிந்தியாச்செவ்வேமேலாய், விளைத்ததனிவித்தியாமயமாயவாசனத்தை விரும்பியெண்ணிக், களித்தளிபாய்ந்துழக்கமுகைவிரிந்தகடிமலர்தூவிப்பூசைசெய்தே. (௧0)

சொன்னதன்மேற்சிவன்றன்னைப்பூசித்துத்தூபமொடுதீபநல்கிப்
பின்னரோகோட்டாவினைந்திறற்பாலிறற்றயிராற்பெட்ப
மன்னுகின்றநெய்தேறல்வளர்வாழைப்பழமுதலைப்பழங்கடம்மாற்
றுன்னிநின்றவெட்கடுகுயவையுமுந்தின்பொடியிறற்றுலங்கவாட்டி. ()

வெந்நீரான்மஞ்சளால்விளைந்தநெல்லிக்காய்நீரோடாரந்தன்றுற்
பண்ணுகுசமலர்பைம்பொன்பருமணிபெய்நீரிறற்பாமன்றன்னை
மன்னுகின்றமணிச்சங்கங்கலசமொடுகரகங்கைவாய்த்தவொன்றான்
முன்னமேயாட்டிப்பின்மொழிந்தபடியுமையவளையாட்டவேண்டும். ()

---

* அதச்சதனம் - இலிங்கபீடத்தினது மேல்மேகலையிற் செந்நிறமாகத்தியானிக்கப்படும் ஒருறுப்பு; ஊர்த்தச்சதனம் - அவ்வுறுப்பின்மேலே சுத்தவித்தையின்கீழ் வெண்ணிறமாகத்தியானிக்கப்படும் ஒருறுப்பு. இவை பந்தத்திற்கும் நிவிர்த்திக்குமேதுவான இருசத்திவடிவங்களாம்.

$ வாமாதிசத்திகள் - வாமை ஜேஷ்டை இரௌத்திரி காளி கலவிகரணி பலவிகரணி பலப்பிரமதனி சர்வபூததமனி.

நுணங்குநூலாடையினாற்றுடைத்தப்பின்னோக்குநுழை கல்லாச்செய்
வணங்கரவினுரியன்னபட்டாடையொடுமுந்நூலளித்துநன்கா [ய
யிணங்கிடவேபாத்தியமாசமனீயமருக்கியமுமீந்துவான்போ
மணங்கமழுமலயமலையாரமணிந்திளநறவார்மலர்கள்சாத்தி. (கங)

விட்டொளிருமணியாரம்பலசேர்த்தித்தூபமொடுவிளங்குதீப
மட்டசுவைப்பாலடிசில்பானீயம்வெள்ளிலையோடடைக்காய்நல்கி
மட்டவிழு*முகவாசங்கொடுத்திருள்போழ்ந்திலகுமணிமகுடம்வெள்ளை
வட்டமிருசாமரைகளாலவட்டங்கண்ணாடிவழங்கவேண்டும். (கச)

ஒன்பதுவெஞ்சுடருமிழுமொளியகன்மண்முழவேங்கியொலிப்ப
வேந்தி, யன்புடனேயருக்கியமுமளித்துவெண்ணீறணிந்தலரஞ்சலிகள்
செய்து, முன்புறையுஞ்சிவன்றன்னையுமையவளோடுன்னிமுக்கால்வ
லங்கொண்டேத்தி, யென்புருகமுடிவணங்கியிறைவனடிமலர்க்காவியீ
யவேண்டும். (கரு)

அருக்கியநன்குதவிட்பின்னன்பொடு புட்பாஞ்சலியுமளித்துமுன்
னா, மொருத்தனேசிறியேன்செய்குற்றமெல்லாம்பொறுத்திடுதியென்ன
வோதித், திருத்தகவேயான்மாவினுச்சியினிற்சிவன்றன்னைத்திகழச்சே
ர்த்தி, யுருத்தெயில்களெரித்தோனையுளத்திடையிலெப்போதுமுன்ன
வேண்டும். (கசு)

ஆக்கையினுளான்மாவிங்குறைவளவும்பூசையினையாற்றியல்லா [கிப்
லேக்கறவாலருந்தவொண்ணாதருந்திலவை யெதிரொடுத்தங்கெறிநீர்மூழ்
பூக்கமழுங்குழலுமையோடிறைமுதலையிருமுறைதான்பூசைசெய்து
நாக்குநசையாலற்றைநாண்முழுதுமொன்றுமருந்தாதுநண்ணி. (கஎ)

அஞ்செழுத்தைதயோர்பதினாயிரமுருத்தானோதிப்பின்னடுத்தநாளின்
மஞ்சுறழுங்கருங்கூந்தல்பாகனுக்குமாபூசைவகுத்துவாரி
நஞ்சுபொதிமிடற்றிறைக்குமவனடியார்தமக்குமுறுபொருள்கணல்கி
விஞ்சியவெம்பசியினாலருந்தியவெவ்வினைகள்கெடவிளங்கவேண்டும். ()

* முகவாசம் - இலவங்கம் ஏலம் கருப்பூரம் சாதிக்காய் தக்கோலம்,

விரித்துரைக்கின்மிகவிரியுமெனவெண்ணிவெள்விடையோன்பூ
சைதன்னைத், திருத்தகவேசுருக்கமாவுரைத்தனமாலினுஞ்சிறிதுசொல்
வதுண்டா,லுருத்தொளிருந்திபந்தானுதவிப்பாலடிசினன்காவுதவமுன்
ன, மருத்தியாலாவரணபூசையினையணிபெறவேயாற்றவேண்டும். ௧௯

முன்னையாவரணத்தின்மொழிந்திடுபஞ்சப்பிரமந்தம்மைநன்காப்
பின்னையோர்நான்குதிக்குமாறங்கந்தமைப்பூசைபெட்பினாற்றி
மன்னுதிசைக்காவலரைப்பூசித்துநிருதிதன்பான்மாயன்றன்னைப்
பன்னுமீசானன்பான்மலரயனைப்பாற்படப்பூசிக்கவேண்டும். (௨௰)

புறத்தினில்†வச்சிரமுதலாப்பதுமமீறாம்படைகடம்மைப்பூசித்
தறத்தினாற்பூசிக்கும்போதந்தவாவரணத்துறைவோரெல்லாந்
திறப்படவேகைகூப்பிச்சிவனைச்சேவிப்பவராச்சிந்தைசெய்து
நறைக்கமலமலர்முதலாமலர்தூவிப்பூசிக்கவேண்டுநன்காய். (௨௧)

அடிசிறுன்பருப்புப்பாறயிரினியசருக்கரைதேனிவைகளார்ந்து [து
மிடைசெய்செழுஞ்சோறுதான்கனிகளொடுநெய்யினொடும்விருப்பினீங்
கடிகமழுஞ்சந்தனத்தோடேலம்பூவிவையனைந்துகமழுநீரைக்
கொடியவினைவிட்டோடமலைமகடன்பாகனுக்குக்கொடுக்கவேண்டும்.

விரைப்பாகுவெள்ளிலைசுண்ணம்பினொடுகருப்பூரம்விழைந்துநல்கிக்
கருப்பூரம்வரையாரங்குங்குமமான்மதம்புழுகுகாகதுண்ட
மருக்காலவேகுழைத்தசேறணிந்துவாசநறுமலர்கள்சாத்தி
யுரித்தாயபட்டாடையோட்டறுபொன்மணிக்கலன்களுதவவேண்டும்.

மலைபாரங்கருப்பூரங்காரகில்குங்குலியம்வளர்கோட்டாணெய்மே
லலையாதமிகுவாசக்கோட்டமிவைபெய்தவழற்றூபமிக்க
விலையார்ந்தகருப்பூரங்கபிலையாணெய்தோய்த்ததீபமேருச் [மால்.
சிலையான்மூவெயிலெரித்தோன்சேவடிக்கிங்களித்திடுநல்செம்மைத்தா

---

† வச்சிரமுதலியபடைகள்:—வச்சிரம் சத்தி தண்டம் கட்கம் பாசம் அங்குசம் கதை சூலம் சக்கரம் பதுமம். இவை முறையே திக்குப்பாலகர்களுக்கும் விட்டுணுபிரமர்களுக்கும் உரிய ஆயுதங்களாம்.

ஆவினைந்துதயிர்பானெய்யலைமுகஞ்சேர்ந்திருந்தநீரலர்ந்துவிண்ட
பூவணைந்தசடைமுடியோனபிடேகந்தனக்குமிகப்புனிதமாமா
லோவறநின்றொளிர்பசும்பொன்மணிதந்தமிவற்றினாலோங்கச்செய்த
தாவிலாப்பீடமேயுரித்தாமென்றுயர்ந்தோர்கள்சாற்றுவாரால். (உரு)

கலிவிருத்தம்.

தலையணைசேர்த்தியதயங்குமெல்லணை
நலமிகுபுரிமுத்தமாலைநாற்றிய
பலமணிக்கவிகைபொற்காம்புபாய்த்திய
நிலவுமிழ்சாமரை * குணநிகழ்த்தினே. (உசா)

பருமணிகுயிற்றுகண்ணடிபாணிறம்
விரிவலம்புரிமணிமுழவம்வீறுசா
லெரிபசும்பொன்வெள்ளியியைந்தபாத்திர
முரியவென்றுயர்ந்தவருணர்ந்துகூறுவார். (உஎ)

சிற்பநூன்முறைதிறம்பாதுசெய்துயர்
பற்பலகோபுரம்பயின்றகோயிலே
பொற்புடைத்தாகுமாற்செங்கல்பூந்தரு
வெற்படுதந்தமண்ணியன்றகோயிலில். (உஅ)

மணிவரைமுகட்டினின்மலர்ந்தகாவினிற்
பிணியவிழ்மலர்நதிக்கரையிற்பெட்புற
வணிபெறுதன்மனையகத்திலண்ணலுக்
கிணையறுபூசனையியற்றல்வேண்டுமால். (உகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பன்னுநன்னீதிதன்னாற்படர்ந்திடுபொருளானாரு
மென்னரொப்பவர்தாமற்றிங்கிவன்றனக்கென்னப்பூசை
மன்னிடவாற்றவேண்டுமாசிலாக்குரவனன்பாற்
சொன்னசொற்படியேநன்காத்துகளறவுணர்ந்துமன்னே. (௩0)

* குணம் - கும்பம்.

தெற்றெனப்பத்தியோடெம்பூசனைசெய்வோர்க்கல்லான்
மற்றையர்க்காவதுண்டோமாசிலாமுத்திவீடுங்
குற்றருந்தவங்கள்பல்காலுஞற்றினுமுயர்ந்தவேதஞ்
சொற்றிடுவேள்விகோடிதொடர்ந்துறச்செயினுமாதோ. (ருக)

சிவன்றன்மந்திரஞ்செபித்தறிதிலாமறைகளோடு
நவின்றசாத்திரங்களோதறியானநல்லோமம்வேள்வி
தவம்பலதானமற்றைத்தருமங்கள்செய்தல்வெய்ய
பவங்கெடவருள்சிவன்றன்பாவனைக்கேதுவாமால். (ருஉ)

எந்தியமழுவாளீசனிணையடிக்கன்புபூண்டோர்
சாந்திராயணங்கண்முன்னச்சாற்றிடுவிரதஞ்செய்தென்
னுய்ந்திலார்தவங்கள்செய்தேயழுந்துவரண்ணலன்பர்
வாய்ந்தநஞ்சிவனைப்பாவித்துயர்கதிமன்னுவாரால். (ருங)

சாற்றுசாத்துவிகமன்னுங்குணங்கொள்யோகியர்கடாவில்
போற்றருமுத்திநல்கும்பொருவில்சாத்துவிககன்ம
மாற்றுவாராற்றல்சான்றவிராசதகுணத்தோடான்றோ
ரேற்றசித்தியினைநல்குமிராசதகருமஞ்செய்வார். (ருச)

தாமதகுணத்தோடொன்றுமசுரருமரக்கர்தாமு
மேமமோடுறையுமற்றைமனிதருமிம்மைதன்னிற்
காமுறுபலத்தைநல்குந்தாமதகருமந்தன்னைத்
தோமறவியற்றல்செய்வார்தொடர்ந்திடும்வேட்கைதன்னால். (ருரு)

உரைத்தமுக்குணத்தாற்செய்யுங்கருமங்களுமையோர்பாக
னருத்தியான்மகிழிற்செம்மையாகியேயடையுந்தீமை
விரித்திடுபுலையோனும்விண்ணவராவனொன்னி
லெரித்தழுவெயிலோன்றாட்கேயடிமைபூண்டேத்தவென்றும். (ருசா)

மறையவர்க்கொன்றோர்செம்பொன்கவர்ந்துளோர்மதுவையுண்டோ
ருறைதருபன்னிதன்னைப்புணர்ந்துளோர்குருதாய்தந்தை

யறைகழல்வேந்தர்க்கொன்றேனுமீராறுண்டன்பா
லிறைவனைப்பூசைசெய்யிலிரிந்தபாலத்தராவார். (௩௭)

பிறப்பினிலுயர்ந்தவிந்தமானுடப்பிறவியுற்றுஞ்
சிறப்படச்சிவனைநன்காட்பூசனைசெய்திலாதோர்
கறித்துவாளெயிறுநின்றுகாலன்வெந்நரகினூடு
மறித்திடமயங்கிமாழ்கிமன்னுயிர்பதைப்பரன்றே. (௩௮)

இந்தியங்கெடுமுன்மற்றைறமூப்புவந்தெய்துமுன்ன
மந்திரேர்வண்ணனன்றன்னைப்பூசனையாற்றியன்பால்
வந்தனைபுரிந்துநம்பன்மாசிலாவருளையாங்கே
தந்திடக்கொள்ளவேண்டுந்தம்மைவேண்டினர்களெல்லாம். (௩௯)

பாய்ந்தலைசூழுஞாலம்பனிக்குடைநிழலின்வைகச்
சாந்தளறடுக்குந்திண்டோள்வேந்தராய்த்தனித்துவைகி
யாய்ந்துணர்வரியவீசனறைகழலடைவார்பைத்துச்
சேந்தியவரவம்பூண்டசிவனடிப்பூசைசெய்தோர். (௪0)

சிவாலயந்தன்னிற்பூசைசெய்திடுபோதுநன்காத்
துவாரபூசையினைச்செய்துசொல் * யவனிகையைப்பூசை
தவாவினைகெடவேயாற்றிச்சாற்றிடுபரிவாரங்கட்
கவாவறப்பலிகணல்கிவிழாவினையாற்றல்வேண்டும். (௪௧)

அண்ணலுக்கடிசிறந்தனையாசறக்கொடுத்தபின்ன
ரெண்ணுறுபரிவாரங்கட்கெழுந்துபோய்ப்பலிகளீந்து
மண்ணுறுமுழவம்விம்மவயங்குறுதிசையின்மன்னி
நண்ணுறுதேவர்க்கெல்லாம்பலியினைநல்கவேண்டும். (௪௨)

வடதிசைநோக்கிநின்றுமாபலிபீடந்தன்னி
லொடிவறப்பலிகணல்கியொளிமதிக்கண்ணியோனுக்
கடைவினிற்கொடுத்தவந்தவடிசிலையன்பினோடு
மிடல்கெழுசண்டிக்காங்கேமேதகவளிக்கவேண்டும். (௪௩)

---

* யவனிகை - திரைச்சீலை.

செந்தழலோம்பிநன்காச்செபித்தொளிதிகழ்செந்தோட்டுக்
கொந்தலர்கமலப்போதுகுறைறவறவிட்டுவைத்த
வுந்தொளிப்பசும்பொன்வெள்ளிவள்ளத்துளுடன்றாசிறு
மந்திலாரழல்வாய்ப்பாசுபதமெனத்திரத்தைநமன்றே. (சுசு)

பூசனைபுரிந்துமற்றோர்பொருவறுவேதியன்றன்
மாசறுதலையில்வைத்துவாயிலின்புறத்திலெய்தி
யேசறமுக்காற்கோயில்வலம்வந்தபின்னரோற்ப
வாசின்மாபலிபீடத்தைதமும்முறைறவலஞ்செய்தாய்கே. (சுரு)

வேதியன்றலையில்வைத்தவள்ளத்தைதவாங்கிமிக்க
வாதிதன்கோயிலெய்தியத்திரந்தன்னைப்போக்கித்
தாதுசேரட்டபுட்பந்தலைவனுக்காங்கேசாத்தித்
தீதிலாப்பூசைதன்னைச்சேகறமுடிக்கவேண்டும். (சுசா)

கிரியாபூசைவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருoக.

---

## சிவவோமவிதிமுதலியவுரைத்தவத்தியாயம்.

சிவவோமவகைதான்சொல்வாஞ்சிறந்திடுகுண்டந்தன்னி
னவையறுநிலத்தில்வேதிதன்னின்மண்ணகலினங்கா
றுவறருமிருப்புவள்ளந்தனிலழலிட்டுநோக்கி
யவமறச்சுத்திசெய்துசிவனையாவாகித்தாய்கே. (க)

பூசனைபுரிந்தேயோமம்பொற்புறச்செய்யவேண்டு
மேசறமுழமிரண்டாயியைந்தகுண்டத்தையிட்டாங்
காசிலோர்முழமதாகவாழ்ந்திடவமைத்துமற்றோர்
மாசிலாச்சதுரம்வட்டமாகவேமரபிற்செய்தே. (உ)

ஏல்வுறுகுண்டநாப்பணிருவிரலுயரமேனு
நால்விரலுயரமேனுமிதழிருநான்குவாய்ப்பச்

சாலவேகமலம்பண்ணிச்சாற்றுமேகலைமூன்றன்றிக்
கோலமாவோரிரண்டுகோடுறப்படுக்கவேண்டும். (௩)

ஆனைநால்வாய்போன்றன்றியாசிலைபோன்றுதோன்ற
யோனியையியற்றிக்குண்டத்துள்ளுறவரைகள்கீறி
நாணநீர்தெளித்துப்பின்னர்நவையறுதருப்பைபெய்தாங்
கேனையபாத்திரங்கள்யாவையுங்கழுவிமன்றே. (௪)

சூரியகாந்தக்கல்லிற்சுடர்ந்தசெந்தழலுனன்கா
வேர்பெறுமரணிதன்னிலியைந்திடுதழலுனுற்ற
வார்தருமறையோனில்லினமர்ந்திடுதழலுன்றூய்மை
சேர்தருமகவினேந்தித்திகழ்ந்திடத்தாங்கிநின்றே. (௫)

வகுத்திடுகுண்டமேலாமும்முறைவலமாச்சுற்றித்
தகைப்படத்தனக்குமுன்றாக்குண்டத்துட்டழலைப்பெய்தாங்
ககத்துறவுந்திவகுமழலினைவாங்கிமுன்ன
மிகுத்திடக்குண்டத்திட்டவழலொடும்விரவவேண்டும். (௬)

மூலமந்திரத்தினாலேமுழங்கழறன்னில்வெய்ய
வாலமார்மிடற்றோன்றன்னையருச்சனைபுரிந்துபின்னர்
வாலிதாய்வலப்புறத்தினெய்பெய்வள்ளத்தைவைத்துச்
சீலமந்திரத்தையோதித்தேனுமுத்திரையுங்காட்டி. (௭)

எரிநிறப்பசும்பொன்வெள்ளியிரும்பினோடியங்கஞ்சம்
பொருவறுவேள்விக்கோதுமாப்பலாசிலையிற்பொற்பப்
பரிவறச்செய்துவைத்ததுடுப்பொடுசுருக்கைப்பற்றி
விரிதழறன்னிற்காய்த்தித்தருப்பையாற்றுடைக்கவேண்டும். (௮)

தண்புனறெளித்தேயந்தத்தழலினைப்புனலாற்சூழ்ந்து
பண்புடன்சிவன்றனெட்டுமந்திரம்பகர்ந்துநன்கா
யுண்பவனீயேயென்றுவாகுதியுதவியேழா
மெண்பயில்செந்நாவிற்காகுதியியற்றவேண்டும். (௯)

நடுவுறப்பின்னுநன்காவாகுதிநல்கித்தண்ணீ
ரொடிவுறச்சூழ்கசூழ்ந்தாலுயர்சிவாக்கினியதாமான்
மடவரல்பாகனாங்கேமன்னுவானாகமுன்னிக்
கடிமலர்கையாற்றூவித்தூபதீபங்கள்காட்டி, (க௦)

பாய்புனல்சூழ்ந்துசாணீள்பலாசினெண்சமிதையிட்டாங்
கேய்வுறப்பசுவினெய்யுஞ்சொரிந்துசோறேந்திப்பெய்து
தூடவெண்பொரியோடெள்ளுயவைகடுகொனெய்தோய்த்த
சேயநல்லப்பந்தன்னாலாகுதிசெய்யவேண்டும். (கக)

சுருவை:பானெய்யைக்கையாற்சமிதையைத்துகளின்றாக
மருவுமற்றவற்றையெல்லாஞ்சுருக்கினால்வளர்ந்ததீயிற்
பொருவிலாகுதிகள்செய்யவேண்டுமாற்புகன்றயாவு
மரியவாமென்னிலொன்றாலாகுதியளிக்கலாமால். (க௨)

இடையூறுவந்தவெல்லாம்பொறுத்தியென்றியம்பிநெய்யா
லடைவேமும்முறைதானாங்கேயாகுதியளிக்கவேண்டுங்
கடிநாறுமலரைவைத்துச்சுருக்கினெய்வார்த்துக்காண
வொடியாதுசுருவைக்கொண்டுமூடியாங்குய்க்கவேண்டும். (க௩)

நீரினைச்சூழ்ந்துதண்ணென்னிழன்மதிப்பிளவுசூடுங்
கார்மிடற்றிறையைப்போக்கிக்கனலைத்தன்னாபிதன்னு
ளார்வுறவமைக்கவேண்டுமறைந்தவாறன்றிநன்கா
வேர்பெறுகனலையாங்கேயெடுத்துறக்கொணர்ந்துமன்றோ. (க௪)

மதிநுதற்கருங்கண்வாகீச்சுரியெழில்வயிற்றுட்கொண்டாள்
கதிரொளிக்கனலையென்னக்கண்ணியேகுண்டத்திட்டு
விதியினிற் * பரிதிபாய்த்திவிளங்குபாத்திரத்தினீர்பெய்
ததனையாங்ககலைவைத்துமற்றுமோரகலைவைத்தே. (க௫)

* பரிதி - யாககுண்டத்தினது நாற்புறத்துமேகலையிலும் இடப்படுஞ்சமித்து.

நெய்யினைநிரப்பித்தூய்மைநெறியினிற்செய்துபின்ன
ையநற்சுருக்கினோடுசுருவையைத்தூய்மையாக்கி
யொய்யெனக்கருப்பாதானஞ்சீமந்தமிவற்றிற்கோமஞ்
செய்தழல்பிறந்ததென்னச்சிந்திக்கவேண்டுமன்றே. (கசு)

பிறந்தவாரழற்குக்காலோர்மூன்றுகையேழுபெட்பச்
சிறந்திடுதலையிரண்டுகொம்பொருநான்குசெம்மை
நிறந்திகழ்கண்களாறுச்சடைமிசைநிலவுசூடி
யுறைந்திடுஞ்செய்யவாடைமுஞ்சிமுந்நூலொடுற்றே. (கஎ)

தயங்கியவலப்பாற்கைகடம்மில்வேல்வளர்ந்தசெந்தீ
யியம்பிடுசுருக்கினோடுசுருவைமற்றிடப்பாலாகி
வயங்கியகைகடம்மில்வல்லயமாலவட்டம்
பயன்படுநெய்பெய்வள்ளம்பாற்படவுறையுமன்றே. (கஅ)

இப்படியுறைவதாகவேர்பெறவுளத்தினூடு
மெய்ப்படவுணர்ந்துசாதகருமத்தைவிதியிற்செய்து
செப்புதற்கரியதாயசிவாக்கினியாக்கியாங்கே
யொப்பின்மந்திரங்களோதியாகுதியுதவவேண்டும். (கக)

வயங்கெழிலுடையவாகீச்சுரியொடுமொசின்றாகித்
தயங்கியேயுறையும்வாகீச்சுரன்றனைப்போக்கித்தாவில்
பயன்படுசவுளமுந்நூலணிதல்பாற்படவேவேட்டல்
வியன்கொளவேள்வியாற்றல்யாவையும்விதியிற்செய்தே. (உ0)

மறிபுனல்சூழ்ந்துவிண்டமலரவன்மாயன்மன்னி
யுறையுருத்திரனோடோங்குமீச்சுரனொழிவின்றாகி
நெறியினிற்றிசைகள்காப்போரீங்கிவர்படைகணைஞ்சின்
முறையினின்முன்னிநன்காப்பூசனைமுடிக்கவேண்டும். (உக)

செந்தழனடுவெண்மிக்கசிறந்தவாசனத்தையுன்னி
யந்திரோர்வண்ணன்றன்னையுமையொடுமாவாகித்துச்

சிந்துதேன்மலர்கடுவேவிப்பூரணாகுதியுஞ்செய்க
விந்தவாறன்றியேயாச்சிரமங்கட்கேற்றசெய்க. (உஉ)

மேற்படி வேறு.

தாவில்கபிலைக்கோமயத்தைத்தன்கையேந்தித்தகைவேள்வி
மேவுமழலிற்சிவாக்கினியில்வெய்யவவுபாசனத்தழலில்
வேவவைத்துவெந்ததற்பினெடுத்துப்பசும்பொன்வெள்ளிகஞ்ச
மோவின்மரமண்ணாலியன்றவுயர்பாத்திரத்தினுள்வைத்தே. (உங)

தூய்மையாகவேயுறைந்தேயணியவேண்டுந்தூய்மையின்றி
யேயுமவர்கட்களிக்கவொண்ணாதெந்நாளினிலுந்தன்பாலே
யாயசீற்றைப்பொருள்போலவமர்ந்துபுரக்கவேண்டுமிகச்
சேயகாதஞ்செலினுமுடன்கொண்டேசேறல்வேண்டுமால். (உச)

சிவவோமந்தாண்முடிந்ததற்பின்பலிதான்செய்யவேண்டுமா
லலமங்ககலப்புத்தகத்தைப்பூசைபுரிந்தேயதன்பின்னர்
நவையிலாதமண்டலத்தையெழுதிக்குருவைநன்காகப்
பவம்விட்டோடப்பாவித்துப்பூசைபுரிதல்பான்மைத்தே. (உரு)

பெரியோர்தமைப்பூசனைபுரிந்தாங்கதிதிபூசைபேணியே
கரியமிடற்றோன்றனக்களித்தவடிசிறன்னிற்காசிலா
வுரியசண்டிதனக்களியாக்கூற்றையுண்ணவேண்டுமாற்
பரிவுதீரத்தானுமெனப்பரமன்முன்னூல்பகருமால். (உசா)

உண்டுகைபூசியபின்னர்ச்சுத்தாசமனந்தனையோம்பித்
தண்டாதுயர்ந்தோருடன்கூடிச்சிவநூலோதித்தடந்திரைகண்
மண்டுகுடபாற்கடலிரவிபடிந்தபின்னர்மதிக்கண்ணி
கொண்டசடையோன்றனையுமையாளோடுங்கோதில்பூசைசெய்தே. ()

மலர்ப்பாயலைநன்களித்தவர்தம்வயங்குபாதமூலத்தி
லலைத்தபுலன்களடக்கியேதுயில்கதுறந்தோனெனிலலனே
லிலைப்பூண்மனைவியொடுந்துயில்கவிரவியெழுமுனெழுந்தெழில்சேர்
சிலைப்பூணுதலாளொடுசிவனைச்செவ்வேயுளத்திற்சிந்தித்தே. (உஅ)

புறத்திற்போகிநீர் படிந்துபுணரிப்பருவாய்ச்சங்கலறத்
திறத்தான்முழவமிகவொலிப்பச்சிவனையுமையாளொடும்பரவி
யுறத்தான்றுதித்துத்துயிலெழுப்பிப்பூசையுதவவேண்டுமா
லறத்தாலிவ்வாறனுதினமுமாற்றவேண்டுமெனவுரைவார். (உக)

சிவவோமவிதிமுதலியவுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருகூ0.

## மாதபூசைமுதலியவுரைத்தவத்தியாயம்.

இவ்வாறுரைறவோர்செயுங்கருமமின்னுஞ்சிலவிங்கெடுத்துரைப்பாம்
வெவ்வேறியலுந்திங்கடொறுமேவட்டமியிற்சதுர்த்தசியி
லொவ்வாவாகியபடையுமீருவாவிலயனங்களிலுற்ற
செவ்வேயுயர்சித்திரையிறைடுதிகழைப்பசிதான்சேர்போதில். (க)

இரவிமதியைக்கோண்மறைக்கும்போதிலெறிநீர்விடமுண்ட
கரியமிடற்றுமுதல்வனுக்குப்பூசைகனிந்தாற்றிடவேண்டும்
பொருவில்பிரமகூர்ச்சநீர்புரிவார்சடையோன்றனையாட்டி
யரியவினைகள்கெடத்தானுமருந்தவேண்டுந்திங்கடொறும். (உ)

நீராசனந்தைப்பூசத்துநிகழ்த்துகிருதகம்பளந்தா
னேர்சான்மாசிமகந்தனிலுமேத்துகின்றவிழாவதனைச்
சேர்பங்குனியுத்திரந்தனிலுஞ்சிறக்குமூசல்சித்திரையா
மோருந்திங்கட்சித்திரைநாடனிலுமுஞற்றவேண்டுமால். (ங)

எய்துகின்றவைகாசிவிசாகந்தன்னிவிணர்மலராற்
செய்தகோயிலளித்திடுகசிறந்தவானிமூலத்தின்
மைதீர்சீதகும்பம்வைக்கவயங்காடியினுத்திராடத்தி
லேதாய்விளங்குபவித்திரநல்விழாவையமைக்கவேண்டுமால். (ச)

பகுதிமுதலாமண்டங்கள்படுத்தாவணியினவிட்டத்திற்
புகலும்பூசைசெயவேண்டும்புரட்டாதியிற்பூராடத்தி

லகலும்வாவிநீர்விளையாட்டமைக்கவேண்டுமைப்பசியிற்
றிகழுமிவுளிநாட்புதியபாற்சோறளித்தல்சிறப்பாமால். (௫)

நவில்கார்த்திகைநற்றிங்கடனினண்ணுகின்றகார்த்திகையி
லவிரும்விளக்காயிரமொளிருந்தண்டமளிக்கவேண்டுமா
னுவலுகின்றமார்கழியாந்திங்கனொடியுமாதிரையிற்
றவளவாவிநெய்யினாலாட்டவேண்டுந்தனிமுதலை. (௬)

இடர்தான்வந்தேயுறும்போதுமிருனோயடரும்போதினிலு
மொடியாநன்மையுறும்போதுமுற்றேவிழாக்கள்செயும்போதும்
படமோரைந்துவிரித்தாடும்பாந்தளசைத்ததலைவனுக்குக்
கடிநாண்மலர்தூய்ப்பூசைமிகவாற்றவேண்டுமெனக்கரையார். (௭)

உரைத்தபடியேசிவதருமத்துறைவோருற்றவோர்பிறப்பில்
வருத்தமறவேமுத்தியினையடைவார்வகுத்துநாமிங்கே
தெரித்தவகையிலோர்முக்காற்கூறுசெய்தோர்சீகண்ட
னருத்திகூருமுலகினெய்தியமர்வார்நூறுகோடிகற்பம். (௮)

அமர்ந்துபின்னருமையுலகிற்குமரனுலகிலழிவின்றி
நிமிர்ந்தேயுறையுமுருத்திரன்றனுலகினேமியோனுலகி
லுமிழ்ந்தநறவமலரயன்றனுலகின்முறையேயுவந்தடைந்து
கமழ்ந்தகொன்றைச்சீகண்டனுலகின்மீட்டுங்கடிதடைவார். (௯)

அடைந்தோரழியாப்பரமசிவபதத்திலடைந்தேயமர்வரான்
மடங்காதரைக்கூறியற்றிடுவோர்வகுத்துச்சொன்னவுலகெல்லாந்
தொடர்ந்தேயடைந்துபூவுலகிலிருகாலுதித்துத்துகளறவே
கிடந்தஞானமுற்றுமையாள்கேள்வன்மலர்த்தாளடைகுவரால். (௧௦)

மன்னுகாற்கூறியற்றிடுவோர்வகுத்தபிரமாண்டத்தகத்துந்
துன்னுபுறத்துமுளவுலகிற்புருடபதத்திற்றுகளிலதாப்
பன்னுகின்றவுருத்திரன்றன்பதத்திலடைந்துபாரிடத்தி
லென்றேனோனும்புகழ்குலத்திலிரும்பேர்ஞானத்தொடுமுதிப்பார். ௧௧

உதித்துமேலாஞ்சிவதருமத்தொழுகியுயர்ந்தசிவபதத்தின்
மதிப்பவுறைந்துவித்தியேச்சுரநற்பதத்திலுறமன்னி
விதித்தவண்டத்தகத்தினிலும்புறத்துஞ்சிலநாண்மிகமேவிக்
கதிர்க்குஞ்சிவமாஞானத்தையடைந்துகடவுள்கழல்சேர்வார். (கஉ)

விடயத்தொழுகாதென்ஞான்றும்வீறுர்சிவபத்தியையுடையோ
ரடைவிற்சிவமாதருமத்தைச்செயினுஞ்செய்யாதமர்ந்திடினு
மிடைபற்றறவீங்கிளமுலையாள்பங்கனிணைப்பூங்கழல்சேர்வா
ரொழிவற்றுயர்நன்மையையவேட்டோருஞற்றவேண்டுஞ்சிவதருமம். ( )

மாதபூசைமுதலியவுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருசுரு.

---

## காமியகன்மபலமுரைத்தவத்தியாயம்.

புவியுட்பொதிந்தசெம்மலர்த்தாட்பூவைவண்ணவெனப்புகலத்
தவமிக்குடையோன்றனைநோக்கித்தடந்தாமரைப்பூவுந்தியோ
னவையற்றெழுந்தகாமியமாகருமமதனைநவிற்றுகெனப்
பவமற்றுயர்ந்தேயுறைகின்றவுபமன்னியுத்தான்பகர்ந்தனனால். (க)

மண்ணிற்சிலதாம்பலன்கொடுக்கும்வானிற்சிலதாம்பலன்கொடுக்கும்
விண்ணிற்கடல்சூழ்மண்ணிடையில்விரைந்தேசிலதாம்பலன்கொடுக்கு
மெண்ணிலஞ்சுவகைத்தாகுமிவற்றிலொன்றுகிரியைமய
நண்ணுமொன்றுதவமயமாமென்றேயெடுத்துநவிலுவரால். (உ)

பகரிலொன்றுசெபமயமாம்பழுதிறியானமயமொன்று
புகலினுரைத்தவொருநான்கின்மயமாயொன்றுபொருந்துமா
லிகமும்பரமும்பலன்கொடுக்குமதனையறியவியம்புவாந்
திகழுஞ்சைவர்மகேச்சுரராலகத்தும்புறத்துஞ்செயப்படுமோல். (ங)

தாவில்சைவர்தம்முளத்திற்பூசைசெய்வார்தகைமையாய்
மேவுகின்றமகேச்சுரர்தாம்புறத்திற்பூசைவிளைப்பராற்

பாவுநிலத்திற்கோமயத்தான்மெழுகிவிதானம்பலதூக்கித்
தூவிமணியின்பொடியினற்றுகளில்கமலமெழுதியே. (ச)

ஓரொட்டிதழிற்சித்திகளெட்டிஊனமற்றொழிந்தவல்லிகளிற்
சீர்சால்வாமைமுதலானசத்தியுடனேசேர்ந்துறையு
மேரார்வாமதேவன்முதலெண்மராயவுருத்திரரைத்
தேராக்கிழக்குமுதலாகத்திக்கெட்டினிலும்பூசித்தே. (ரு)

வீறார்பொகுட்டின்மேவுகின்றவயிராக்கியத்தைவிதைதகடமிற்
பாறார்வேறக்கட்சத்திகளொன்பதின்மர்தம்மைக்கிழங்குதனிற்
கூறுநின்றசிவகருமந்தன்னைக்குலவுநாளத்திற்
றேறுநின்றசிவஞானமதனைத்தெரிந்துபூசைசெய்தே. (சா)

கனலிபரிதிமதியமொளிகான்றுதிகழ்மண்டலங்கடமை
நினையுஞ்சிவதத்துவநிகழ்த்துநிகரில்வித்தியாதத்துவஞ்சீர்
புனையுமான்மதத்துவமற்றிவற்றைப்பொகுட்டின்மேலாக
நனைநாண்மலர்கள்பலதூவிநன்காப்பூசையாற்றியே. (எ)

மேலாம்பரமாகாயத்தில்வித்தியாமயமாமாசனத்தை
யேலப்பூசைபுரிந்ததனிற்படிகவொளிபோலெழில்வாய்த்துக்
காலுமொளிமின்போற்சடிலமவுலிகவினக்காய்புலியின்
றோலொன்றசைத்துவாணிலவுதுலங்கியொளிருநகைபூத்தே. (அ)

செந்தாமரைபோற்கால்கைவாய்சிறந்துதிகழவிருள்பருகி
நந்தாவொளிகானகைமணிப்பூணன்கினணிந்துதென்மலயச்
சந்தாரகலத்திடைபூசித்தண்ணெணன்கீற்றுப்பிறைசூடி
யைந்தாமுகங்கண்மிகவயங்கியழகுவாய்த்துத்தோன்றவே. (கூ)

தோன்றுமுகத்துள்வாளிரவியென்னச்சுடர்ந்துகண்களொரு
மூன்றிரேறுடங்கீழ்பாலின்முகந்தானிலங்கமுந்நீரை
யான்றுபருகியெழுமுகில்போலழகுவாய்த்துவளையெயிறுங்
கான்றசினங்கான்முக்கண்ணுங்காட்டித்தென்பான்முகங்கவின. (கo)

நருவெண்மதியமெனலாகிநாட்டமொருமூன்றுடுங்கூடித்
திகழுமேல்பான்முகந்தோன்றிச்சிறப்பத்திரைபாய்கடன்முளைத்த
துகிர்போனிறத்ததாய்க்கண்மூன்றுடும்வடபான்முகந்துலங்கத்
தகைசால்படிகம்போன்றுகண்மூன்றுடைத்தாயுச்சிமுகந்தயங்க. (கக)

வயங்கும்வலப்பாற்கைகளைந்திற்சூலமழுவச்சிரம்வடிவா
டயங்குமழலங்குமத்தாங்கியிடப்பாற்றடக்கையோரைந்திற்
பயங்கொள்பாம்புநாராசமணிபாசத்தோடங்குசந்தான்
வியன்கொண்டுயர்ந்தவிண்ணேர்கள்விரும்பியேத்தவேந்தியே. (கஉ)

முழந்தாளளவுநிவிர்த்திகலையாகிமொழியுநாபிமட்டும்
வழங்கும்பிரதிட்டாகலையாய்மன்னுகழுத்தினளவாகத்
தழைந்தவித்தியாகலையாய்நெற்றியளவுஞ்சாந்தியென
மொழிந்தகலையாய்த்தலையளவுமதீதசாந்திமுதுகலையாய். (கங)

முடியீசானமாகித்தற்புருடமாகிமுகமிதயம்
வடிவாரகோரமாய்க்குய்யம்வாமதேவமாய்த்தாள்க
ளடைவேசத்தியோசாதமாகிமூர்த்தியதுவாகி
யொடியா*முப்பத்தெட்டாயவுயர்ந்தகலையினுருவமாய். (கச)

பகர்மாதிருகையுருவமாய்ப்பஞ்சப்பிரமமயமாகிப்
புகலுங்குடிலைமயமாகிப்பொருந்தஞ்செழுத்தின்மயமாகித்
துகளிலாதவாறெழுத்தின்மயமாய்ச்சொல்லுமாறங்கந்
திகழமன்னியுணர்ந்தெவருந்தேடற்கரியபரம்பொருளாய். (கடு)

கடிநாண்மலர்பெய்கருங்கூந்தற்கயனேர்தடங்கண்குழையலைக்கும்
வடிவாரிச்சாசத்தியைத்தன்மடிமேலிருத்திவலப்புறத்தி
லிடையாஞானசத்திதனையிருத்திமற்றையிடப்புறத்திற்
படைவாணெடுங்கணெழிற்கிரியாசத்திதன்னைப்பரிந்திருத்தி. (கசு)

முன்னுமூன்றுதத்துவமாய்முடியாவித்யாமயமாகி
யுன்னற்கரியசதாசிவமாமூர்த்தியுறைவதாயெண்ணிப்

* முப்பத்தெட்டுக்கலைகளையும் தோத்திரவத்தியாயத்துட்காண்க.

பன்னற்கரியபராசத்தியோடுசிவனைநாம்பகர்ந்த
சின்னத்துணர்ந்தார்மூர்த்திதனிற்சிறப்பிறைடுமொவாகித்தே. (கஎ)

வலப்பாலானைமுகத்தவனையிடப்பால்வடிவேலவன்றன்னை
நலத்தாற்பூசையுறவாற்றிப்பஞ்சப்பிரமங்களைநன்காப்
புலத்தாறெழுகாதேயுறைந்துசத்தியோடும்பூசித்துச்
சொலத்தாலுனையாறங்கத்தைத்துகளின்றுகப்பூசித்தே. (கஅ)

வயங்குகின்றவாமாதிசத்தியோடும்வாமாதி
தயங்குமோரெட்டுருத்திரரைத்தாதார்மலர்தூய்ப்பூசித்தங்
கியம்புமிரண்டாமாவரணந்தன்னிலெழில்சேரனந்தனைச்சீர்
வியன்கொள்சூக்குமேசனைநாம்விளம்புகின்றசிவோத்தமனை. (கக)

மினிருமேகநேத்திரனைவீறுரோகருத்திரனைத்
தளர்விறிரிமூர்த்தியைத்தயங்குசீகண்டனைமேலாந்தகைகசா
லொளிகொள்சீகண்டசனையோர்ந்துரைசெய்வனப்பார்சத்திகளோ
டளிவீழ்கமலவிதழ்கடமினடைவிற்பூசைசெயவேண்டும். (உ0)

மொழியுமூன்றுமாவரணந்தன்னின்முதலாம்பவன்சருவன்
றெழுமீசானனுருத்திரன்மேற்சுடுநீறணியும்பசுபதிசீர்
வழுவிலாவுக்கிரன்வீமன்மாதேவன்சொன்மாசிலா
வெழில்சேரிவரைச்சத்திகளோடெண்டிக்கினிலும்பூசித்தே. (உக)

மாமாதேவன்சிவனழலுமழுவாள்வலனேந்துருத்திரன்வார்
தேமார்மாலைச்சங்கரனற்சிறப்பார்நீலலோகிதன்மேற்
றூமானேந்துமீசானன்விசயன்வீமன்றண்ணளிகூர்
பூமாமாலைபுனைதேவதேவன்போற்றுபவோற்பவனே. (உஉ)

கடிநாறலங்கற்கபாலீசனென்னுமிவரைமுன்கரைந்தோ
ரிடையேயிடையேசத்திகளோடியல்பிற்பூசையாற்றிப்பின்
னடையாரிடபநந்திமகாகாளன்சாத்தனல்லெழில்சேர்
மடனூர்கன்னிமாரொழுவர்வயங்குதிணிகோட்டைங்கரனே. (உங)

குமரன்சேட்டைகவுரிசண்டன்கோதிலாதவிடபமுனி
யிமையோர்புகழும்பிங்கலனற்பிருங்கீச்சுரனேடெழில்வீர
னமையாள்கின்றவாணிதிருமாமோகினிநன்கியம்பிவரை
யமையாப்பாவமகன்றிடவேயன்பாற்பூசையாற்றியே. (உச)

குணங்கண்மிக்கவுருத்திரரைக்கோதிலாதபிரமதமா
கணங்கடம்மைப்பாரிடத்தைதக்கழறுசத்தியுடன்பூசித்
தணங்குவேற்கனுமையவடன்ரேழிமாரையடிவணங்கி
மணங்கொண்மலர்கள்பலதூவிப்பூசைவகுக்கவேண்டுமால். (உரு)

நான்காகியநல்லாவரணந்தன்னிலிரவிதனைநாறு
தேன்கால்கமலத்தயன்றன்னைத்திறலான்மிக்கவுருத்திரனைக்
கான்சேர்நறுந்தண்டுளவோனைக்கருதாவரணந்தம்மோடு
மூன்சேரிந்தவுடநீரப்பூசையுஞற்றல்வேண்டுமால். (உசு)

வகுக்குமைந்தாமாவரணந்தன்னிற்சூலம்வச்சிரம்வாய்
புகைக்கான்மழுவெங்கணைவடிவாள்பாசாங்குசங்கள்பொருந்திடவே
பகுக்கும்பிறைகந்தமைப்பூசைபண்ணிவடுகக்கடவுடனை
யுகைக்குமிடபந்தனைப்பூசையொழியாதாற்றவேண்டுமால். (உஎ)

பகர்கேசரர்களிருடிகண்மாசித்தர்பழுதிறயித்தியர்கள்
புகைவாளரக்கரியக்கர்வலிபொருந்துமட்டமாநாக
நகுபூங்கோதையிடாகினிகணவிற்றுகின்றபூதங்கண்
மிகவேயுறைறவேதாளங்கள்விறலான்மிக்கவயிரவர்கள். (உஅ)

பாதாளத்திலுறைகின்றோர்படருநதிகள்பனிக்கடல்கண்
மீதாயுயருந்திணிவரைகள்விரிகானேடைபசுப்பறவை
போதார்தருக்கள்கிடங்கண்மணிதர்விலங்குபுகழ்ந்தெவரு
மோதாநின்றபிரமாண்டத்துள்ளும்புறமுமுறைபுவனம். (உகூ)

அறையும்புவனவதிபதிகளனேககோடியண்டங்கள்
செறியுந்திசைகளோர்பத்திற்சிறந்தேயுறையுமுருத்திரர்க

ணிறையுங்குணங்களொருமூன்றின்மாயைதன்னினிகிலா
துறையுஞ்சத்திதனிற்றோன்றியுதித்தேயெங்குமுறைவனகள். (கூ0)

சித்தாயசித்தாயுறைபொருள்கள்சிவனைநோக்கிக்கைகூப்பி
யத்தாவருள்வாயெனவெண்ணியமர்வவாகவருச்சித்து
வைத்தேயுறையுமுளநீங்கிவைகுகுற்றம்பொறுத்தருள்வாய்
பித்தாவெனநின்றேத்தியேபின்னும்பூசைசெயவேண்டும். (கூக)

பின்னர்மறைசொல்லஞ்செழுத்தைநப்பெட்பவோதிப்பெருகன்பான்
மன்னுகின்றவறுசுவையோடடிசின்மழுவாளவற்களிக்க
பன்னுகின்றபதினறுகாலரிசியடிசில்பழுதின்றாந்
துன்னுகின்றநாழியரிசியடிசிறாய்தன்றால். (கூஉ)

தெண்ணீர்சிறந்தவெள்ளிலையோடடைக்காய்சிரஞ்சனந்திகழ
வண்ணற்குதவியோமத்தையாற்றிப்பூசைதனைமுடித்தாங்
கெண்ணித்துதிசெய்தஞ்செழுத்தைச்செபித்தேயியல்லித்தியாபூசை
பண்ணிப்பொருவில்குருபூசைபழுதின்றுற்றவேண்டுமால். (கூங)

பெரியோர்தம்மைப்பூசித்துச்சிவனைப்போக்கிப்பெரும்பூசைக்
குரியவெல்லாஞ்சிவபத்தர்க்களிக்கவன்றேலொளிமதிசேர்
புரிவார்சடையோன்றனக்களிக்கபுகுன்றவிந்தப்பூசைதனை
மருவுமாகேச்சுரமென்னவல்லோர்யாரும்வழங்குவரால். (கூச)

சிந்தாமணிபோல்வேட்டவைகள்சிறப்பவருளிப்பூசையினை
கந்தாவாகியுயர்ந்தவற்றைவேட்டேநன்காயன்போடு
மெந்தாயருள்வாயெனவியற்றவேண்டுமெரிநேரிருருசினங்
கந்தார்களிற்றின்கோடொசித்தகண்ணுறுவென்னக்கழறினனால். (கூரு)

ஏதமில்லாத்துதியுளதாலதுதானிந்தப்பூசைதருங்
கோதில்பலத்தையளித்திடுமாற்கொள்ளுமுண்டிதனையொழித்து
மாதமொன்றுபொருளோநன்காயறிந்துதிக்கின்மற்றதனை
யோதக்கேட்டியென்றுமுனியுணர்ந்தேயுளாக்கவுற்றனனால். (கூசு)

காமியகன்மபலமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருளகூ.

---

# தோத்திரமுரைத்தவத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏகநாயகனேயிரும்பெருஞானவடிவமாயிருக்குமாமுதலே, யாகியமனம்வாக்கிவற்றினாலறியாவண்ணலேயாசிலாப்பொருளே, மோகமில்சத்தியோடமர்பவனேமுடிவிலாக்குணத்தொடுமுறைவோய், சேகறுவனப்பார்கடவுளேமிகவுஞ்சிறந்துநீவென்றிடவேண்டும். (க)

இணையிலாதவனேயெண்ணுதற்கரியோயிடையறுமங்கலமுடையோய், தணிவிலாதமருந்தானுவேநினக்குச்சாற்றவோர்காரணமிலாதோய், துணிவுறுபரமானந்தமாயுறைவோய்சொன்னவானந்தகாரணமே, பணியுமீச்சுரனுந்தலைவனேயருளேபழுதினீவென்றிடவேண்டும். உ

உலகெலாஞ்சூழ்ந்திங்குறைகுவோய்நின்னைச்சூழ்ந்திடவொன்றுமிலாதோ, யலகிலாமேலாயமர்குவோய்நினக்குமேல்தாயமர்வதொன்றிலாதோய், தொலைவிலாப்பொருளேமாயையுட்படாதோய்துலங்குமிப்பூசையின்பலத்தை, மலைவறவடியேன்பெற்றிடநினதுமாசிலாவருளினைப்புரிவாய். (௩)

சகத்தினுக்கன்னையாகியேயுறைவோய்சகத்துருவாகியேயிருப்போய், மிகத்திகழ்ந்திலங்குவடிவினேயுளத்துள் விளையுமஞ்ஞானத்தையறுப்போய், வகுத்திடுசமயம்யாவையுமுடையோய்வயங்கியகுணங்களையுடையோய், தகைப்படுமேலோராவியுளுறைவோய்தழைத்துநீவென்றிடவேண்டும். (௪)

மன்னியசகத்திற்கிறைவனுமீசன்மகிழ்ந்திடுபன்னியாயுறைவோய், பன்னுறுதேவர்யாவரும்பூசைபண்ணியேபோற்றிடப்படுவோய், துன்னிடுசகத்தைத்தோற்றிடச்செய்வோய்துலங்குமங்கலங்களை வகுப்போய், முன்னிநின்றுணைத்தாளுவிணலேத்திமுடியின்மேல்வைத்துறப்பணிவாம். (௫)

இறைவிநின்னிடத்திலுலகெலாந்தோன்றுமேத்துநின்னிடத்தினிலொளிக்கு, மறுவறுபலத்தைமழுவலானின்னையின்றியேவழங்கிடவ

றியா, னிறைகடனடுவெண்மிதந்தபேரண்டத்தியாவருநின்னடி தொழு
வார், குறைவறவுயர்ந்தநினதுபேரருளைக்கொடுத்திடவேண்டுமாற்குறி
த்தே. (௬)

ஐந்தெழின்முகமுமையிருதோளுமவிரொளிப்படிகமெய்நிறமும்
பந்தியாயுறையுமக்கரம்பிரமங்கலையிவைபடிவமுமாகி
யுய்ந்திடச்சகளநிட்களருபமேவியேயுறைதருசிவமாய்
நந்தலில்சாந்தியதீதனுயமருஞ்சதாசிவனனக்கருள்புரிவான். (௭)

மழுவலத்தேந்துஞ்சதாசிவன்குறங்கில்வைகியிச்சாசத்திவடிவா
யெழிலொடுமமர்ந்துபூதமற்றெவைக்குந்தாயுமாயேத்திடவுறைவா
டழுவியேபாவமென்னைவந்தடர்ந்துசார்வுறுதகலவேநன்னி
யழிவிலாதாகியுயர்ந்தநற்பதத்தையாசறவருள்செயவேண்டும். (௮)

வார்சடைமுடித்தகடவுளுநிவந்தவரைபயந்தெடுத்தகார்மயிலு
மார்தருமன்புகூர்தருபவராயறைசிவஞானவின்னமிர்தை
யோர்பெறவருந்துபவர்களாயயனுந்தேவருமிறைஞ்சிடவுறையுங்
கார்படமுழங்குகரிமுகத்தோனுங்கந்தனுமருள்செயவேண்டும். (௯)

துளங்கொளிப்படிகநிறத்ததாயடியார்துதித்திடுசதாசிவவடிவா
யிளங்கதிர்நிறத்தினிறைமுதறலையின்மூர்த்தியாயியம்பிடப்பட்டு
விளங்கிடுசாந்தியதீதமாய்விரிந்தவிண்ணிடையமர்ந்துறைதருவதா
யளந்திடற்கரியவாயவைந்தெழுத்துளீற்றினிலடைந்திடுமெழுத்தாய். ()

அறைதருமைந்துகலையொடுங்கூடியமர்வதாயறிந்திடற்கரிதா
யுறையுமீசானப்பிரமம்வார்கூந்தலொளிநுதலுமையவளோடு
நெறிமலர்தூவிச்சிறியனேன்பூசைநிரப்புதற்காவுளமிரங்கிச்
செறிதருபாவம்யாவையுஞ்சிதையத்தீதிலாவருள்செயவேண்டும். (௧௧)

துணிகதிரிளஞாயிற்றினல்வடிவாய்த்துலங்கியேயின்னருள்கொழி
க்கு, மிணையிலாவீசன்குணதிசைமுகமாயேத்திடுசாந்தியான்மாவாய்த்,
துணிவிலாக்காற்றிலடைந்துதங்குவதாய்ச்சாற்றுமைந்தெழுத்துளுன்

காய, பணிவுறுமெழுத்தாய்க்கலைகளுங்கோடும்பாற்படவமர்ந்துறை
குவதாய். (௧௨)

சாலநன்கடியாரோத்திடவிளங்கித்தயங்குதற்புருடமாம்பிரமம்,வே
வெனமிளிர்ந்துகுழைபொருதடங்கண்வெள்வளையுமையொடுங்கூடிக்,
கோலநாண்மலர்களேந்தியான்வணங்கிக்கொடுத்திடுபூசனைக்கிரங்கி,மா
லெலாமறிந்துகெட்டகன்றோடமகிழ்ந்தருள்வழங்கிடவேண்டும். (௧௩)

மைம்மலையனையவடிவதாயீசன்வயங்கியதென்றிசைமுகமாய்,
வெம்மைசாலகோரமூர்த்தியாய்மிகவும்விளங்கு வித்தியாபதத்துவமாய்
ச், செம்மையார்நிறத்ததழலிடைமன்னிச்சேர்வதாய்ச்சிறந்தவைந்தெ
ழுத்துண், மும்மையாமெழுத்தாய்க்கலைகளெட்டோடுமுன்னியேயுண
ரவைகுவதாய். (௧௪)

பிறங்கியேதிகழுமகோரமாம்பிரமமென்பிழையாவையும்பொறுத்துக்
குறைந்திடாச்சத்தியோடுநானிழைத்தபூசனையாவையுங்கொண்டிங்[து
குறைந்திடுவினைகள்யாவையுமுடைந்தேயோடிடவொன்றறத்துடைத்
நிறைந்திடுமருளையெனக்குநன்காகநின்றுறவளித்திடவேண்டும். (௧௫)

குங்குமம்புரையுநிறத்ததாயிறைவன்வடதிசைக்கோதிலாமுகமாய்த்
தங்குறுபிரதிட்டாபதத்தினதாய்த்ததும்புநீரிடையுறைவதுவாய்த்[ன்று
துங்கமாமோரைந்தெழுத்தினுளிரண்டாமெழுத்ததாய்ச்சொல்பதின்மூ
மங்கிடாக்கலையோடமர்வதாய்வயங்கும்வாமமாதேவமாம்பிரமம். (௧௬)

தைதமலர்க்கூந்தற்றேவியோடமர்ந்துதகவிலாச்சிறியனேன்புல்லேன்
மதியிலானாற்புரிந்தபூசனைக்குவந்துமன்னியபாவமாம்வெய்ய
கொதியழலகற்றியருளமுதத்தைக்கொடுத்துறக்கொட்புறுபிறவி
யெதிர்வுறாதகற்றியேத்திடவென்றுமெய்திநன்குறைந்திடவேண்டும். ()

சங்கவெண்ணிறமாய்ச்சங்கவெண்குழைகள்சாத்தியசிவன்றன்மே
ற்றிசையி, லங்கலுழ்முகமாயறைதருநிவிர்த்திபதத்தாயகன்றஞாலத்தி
ற், பொங்கியேயுறைவதாகியைந்தெழுத்துட்பொருவிலாமுதலெழுத்
தாகித், தங்குமோரெட்டுக்கலைகளோடமருஞ்சத்தியோசாதமாம்பிரமம்.

கருங்கொடிப்புருவச்சத்தியோடுறைந்துகைகளாற்கடிமலரேந்தி
விரிந்ததண்கமலச்சேவடிப்போதில்விதியினுலருச்சனையியற்றிப்
புரிந்திடுபூசைக்குளமிகவிரங்கிப்பொருந்தியவினையெலாமகற்றித்
திருந்தியவருளைச்செய்துநற்பலத்தைத்சேகரவளித்திடவேண்டும். க௯

சிவனெழிலுமையாளுளமெனக்கென்றுந்தீதறுபலன்களையருள்க
நவையறும்வரதமவுலிநற்பலத்தைநாடொறுமுதவுகமற்றே [க
ருவமையிலன்றோர்சிகைகள்யான்வேண்டுமொழிவறுபலன்களையளிக்
கெவருநின்றேத்துமற்றவர்கவசமேசிலாப்பலன்களைத்தருக. (உ0)

ஆங்கவர்நயனம்வேண்டியபலத்தையருளுகவவர்தமத்திரங்க
ளங்கறுபலத்தைவழங்குகவாமதேவனேமுதலவோரெட்டாம்
வீங்குருத்திரர்சத்திகளொடும்பலத்தைவிளைக்கநல்லனந்தனேமுதலெட்
டோங்கியவித்தியேச்சுரர்கள்சத்திகளோடுயர்ந்தநற்பலத்தினையளிக்க.

பவனையேமுதலாமெண்மர்மாதேவனாதியாயுறைபதினொருவர்
நவையில்சத்திகளோடுயர்ந்தநற்பலத்தைநல்குகநான்விழைபலத்தைக்
கவனவேறளிக்கநந்திமாகாளன்சாத்தனற்கன்னியபொழுவை
ருவமையில்யானைமுகத்தவன்குமரனேறங்கியபலத்தினைத்தருக. (உஉ)

சேட்டைநற்பலத்தைவழங்குகமிக்ககுறும்பிகைசதிதிகழ்மேனை
பூட்டுவார்சிறியெழுந்துமேல்வீங்குபுணர்முலைப்பார்ப்பதிபொற்பா
ருட்டுருத்திராணிமிகுபலனருள்கநாம்பணிசண்டனல்விடபன்
கோட்டமிலுயர்ந்தபிங்கலன்பிருங்கிவீரன்மாபலத்தினைக்கொடுக்க. ()

வாணிபொன்மாமோகினிதிறற்றுர்க்கைமாசிலாவுருத்திரர்வயங்கு
சேனுயர்ந்தோங்குபிரமதகணங்கள்பூதங்கள்செறிவனயுமையாட்
காணமாயுறையுந்தோழியரழகாருருத்திரகன்னியரலர்ந்து
காணவான்றொன்றும்பரிதியாவரணத்தொடும்பலன்கடிதினிலளிக்க. ()

மலரவன்மழுவாளுருத்திரன்மாயன்மன்னுமாவரணங்களோடு
மலைவறுபலத்தையளிக்கமற்றன்றோரன்புறுதேவியர்பலத்தை

யுலைவறவருள்கசனகனேமுதலாநால்வருமுயர்தக்கன்முதலாச்
சொலவுறைபதிஞேர்பிரமருமொருங்குதுகளிலாப்பலத்தினைத்தருக.

தருமமோடுயர்ந்தசங்கற்பம்வேதமிதிகாசம்புராணநற்றரும
முறைசெய்சாத்திரங்கள்விஞ்சைசகடிசைகள்காவலரொளிவிடுசூல [யும்
மெரியுமிழ்மற்றைப்படைகள்வான்கோமாதாக்களிங்கிறைஞ்சிடவுறை
பொருவருவடுகக்கடவுள்யான்வேட்டபொலிவுறுபலத்தினையருள்க. ()

வயிரவர்யோகம்வல்லயோகினிகணரதன்முதலமாமுனிவர்
செயிரில்சாத்தியநற்றேவர்கந்தருவர்முதலவாய்த்தீப்புரைகுஞ்சி
யயலவாம்பேய்களிறவாயமருந்தேவயோனிகளடலசுர
ருயர்வலியரக்கர்நாகங்கள்கருடரோங்குநற்பலத்தினையருள்க. (உஎ)

கரைபொருதிரங்குகடல்கடீபங்கணதிகளோடைகள்கனவரைகள்
விரிதருகான்கள்பசுக்கள்வானியங்குபறவைகண்மென்மலர்த்தருக்கள்
கிருமிகளோங்குபுவனங்கள்புவனவதிபதியாயிஞேர்கிளர்ந்து
மருவுமண்டங்கண்மாசிலாவண்டர்வானங்கள்வளர்பலன்றருக. (உஅ)

வருணங்கள்பதங்கண்மாசின்மந்திரங்கண்மன்னுதத்துவங்கண் மற்றவ
னுரையதிபதிகள்பிரமவண்டத்தைக்காத்திடுமுருத்திரர்முத்தி [ற்றி
தருசிவவித்தையுயர்ந்திடுசிவசாத்திரஞ்சிவதருமநன்காகி
விரிசிவபுராணஞ்சிவாகமமென்றுமேதகுபலத்தினையருள்க. (உகூ)

உரைத்திடுசுவேதன்முதலுறைலகுளீசன்றனையீறதாயுயர்ந்தோர்
விரித்திடுகுரவரவர்தநற்புதல்வர்சைவர்மேதகுமகேச்சுரர்கள்
வருத்தமின்மறையோர்முதலவாமுன்னுவருணங்கள்சாங்கியமுதலாத்
தெரித்தசாத்திரத்திஞெழுகுவோர்கருமஞ்செய்திடவருளுவாராக. (௩௦)

அலர்கதிர்ப்பரிதிமதத்தினைமுதலாமதங்களிலமர்குவோர்தாமு
மலைவறவுயர்ந்தசைவசித்தாந்தவழியினிற்செல்குவோர்தாமு
நிலைபெறுபாசுபதத்தினிற்போருநிகழ்த்துகாபாலியந்தன்னி
லுலைவறவுறைவோர்தாமுநற்கருமமுஞற்றிடவருளுவாராக. (௩க)

உத்தரநெறியிலொழுகுவோர்மற்றத்தெக்கணநெறியிலுற்றிடுவோர்
வித்தகமாகவருளுவாராகபரலோகமிலையெனவிரிப்போ [தோர்
ரத்தனைமுதலாந்தெய்வங்களிலையென்றறைகுவோர்நன்றியையயர்த்
கத்திடுபாடாண்டிகணமையணுகாதகன்றுசேண்கழிந்திடவேண்டும்.( )

தகைமையோடுறைவோரருள்கசத்தாறோர்தாவிலாமங்கலமுளைக்க, முகைமலர்க்கூந்தலுமையொடும்வேழமுகத்தவனோடும்வெள்ளிலைவேற், குகனொடுமுறையுமண்ணலேயருள்வாயென்றுகோதறநனிதுதித்து, மகிழ்வொடுவீழ்ந்துவணங்கியைந்தெழுத்தைமாசறச்செபித்திடவேண்டும். (௯௩)

மாசறச்செபித்தபின்மலைமகடன்மந்திரந்தனையுநன்கோதி
யாசறவீசனடியிணைக்காவிதன்னையாங்களித்ததன்பின்னர்ப்
பூசுறுபரிதிமட்கநின்றொளிர்வோய்குற்றங்கள்பொறுத்தியாலென்று
மூசிவண்டுழலுமலர்பலதூவிப்பூசையைமுடித்திடவேண்டும். (௯௪)

நன்றியைமறந்தோர்கோவினைக்கொன்றோர்நகைமுடிவேந்தரைச்செகுத்தோ, ரொன்றிவந்தடைந்தோர்தங்களைமாய்த்தோர்குற்றருன்மகளிரைவதைத்தோர், மன்றநன்கீன்றோர்தங்களைத்தொலைத்தோர்மற்றுளபாவங்கள்செய்தோ, ரின்றுரைதுதியையுரைத்திடிற்கேட்டிலிசைத்தபாவங்களினகல்வார். (௯௫)

இரும்பொருள்வாணோயின்றியிருத்தல்யாவையுமெய்துமாலிந்தத்
திருந்தியதுதியைப்பூசைசெய்யாதவொருவனன்காகவேசெப்பிற்
பொருந்தியேபூசைசெய்பவனுரைக்கிற்பொருந்துறுபலத்தினையாவோ
விரிந்திடவுரைப்பார்விறன்மழுவாளோனுருவினைமேவுவனன்றே (௯௬)

விரித்தவித்துதியைநாவினாலுரைக்கும்போதினிலவின்னிடையிறைவன், றிருத்தகுமுமையாளொடுமெதிர்ந்திடுவனதலாற்சிறந்தவின்றோக்கி, யருத்தியாற்கைகள்சிரமிசைக்கூப்பியாசிலாத்துதியநன்காக, வுருக்கிடுபாவமொழிந்திடவாயாற்றுதித்திடவேண்டுமென்றுரைத்தான்.

தோத்திரமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௧௬.

# அக்நிகாரியமுரைத்தவத்தியாயம்.

துதித்திடவேண்டுமென்றுமாமுனிவன்சுடர்மணிவண்ணனைநோக்கி
மதித்துளம்வேட்டயாவையுமின்னேவழங்கிடுபூசைநல்லோமம்
விதிப்படிசெபிக்குஞ்செபமுறுதியானமெய்த்தவமிவற்றினைவிரித்துக்
கதிர்த்தபேரன்பாற்கழறுதுமென்னாக்காசறவுரைக்கலுற்றனனால். (க)

எய்திடுமிடையூறியாவையுந்தன்னையெய்திடாவகைநனியகற்றி
யுய்திறனாடிமந்திரசித்தியுற்றுறவியற்றிடுகருமஞ்
செய்திடத்தொடுத்தநாண்முதலீற்றினளவுநன்காகவேதெளிந்து
மெய்தெரிபிரமசரியனாயுறையவேண்டுமாலெனவிரித்திடுவார். (உ)

உறுபகலொன்றுமருந்திடாதிரவாங்குற்றுழியுறுகடன்கழித்து
மறுவறுமவிதான்கனிகடாமருந்திமாசறுகொலைமுதலாய
நெறியலாப்பாவம்யாவையுநீக்கிநீற்றைமெய்ம்முழுதினும்பூசிக்
குறைவறநிலத்தைமெழுக்கெறிந்தலர்ந்தகொழுமலர்விதானங்கடேக்கி. ()

மாற்றெறிசெய்யபசும்பொனாற்கமலம்வகுத்ததைதமாசிலத்தலத்தி
லேற்றிடநிறுவியாங்கணிமாதிமுதலவாமெட்டுசித்திகளை
யாற்றிநற்பூசையிதழ்களோரெட்டிலதனடுவெல்விகள்சூழத் [குட்டில்.
தோற்றிமேலெழுந்துவெயிலொளிமட்கச்சுடருமிழ்ந் திலங்குதண்பொ

வெண்ணிறப்படிகத்தேனும்விட்டொளிரும்விரிகதிர்ப்பசும்பொ
னாலேனும், கண்ணொளிகவற்றுமணிகளாலேனுங்காண்டகவிலிங்க
மொன்றமைத்து, நண்ணுறவிருத்திமுகங்கணான்கோடுநான்குகைகளி
ற்றிறன்மழுமா, னெண்ணுறுமபயவரதனன்கேந்தியிறைமுதலுறைவ
தாய்நினைக. (ரு)

அன்றெனில்வலப்பாற்கைகளோர்நான்கிலவிரிலைச்சூலம்வெம்மழுவா
டென்றழலுமிழும்வச்சிரந்தாங்கித்துலங்கிடப்பாற்கரநான்கில்
வென்றிகொள்பாசமங்குசம்பரிசைவிடமுமிழ்நாகநன்கேந்தி [லங்க.
யொன்றியகண்கண்மூன்றொடுங்குணபான்முகமொளிர் பரிதியொத்தி

